

# விருந்துகள் சுவைக்கத் தெரிந்தவர்களுக்காகவே.
# எங்களுடைய 'டின்னர் செட்'களுடன், அது கண்களுக்கும் சுவை படைக்கின்றது.

விருந்துகளில் பரிமாறப்படும் நற்சுவை உணவுகள் நாவிற்கு நயம் பயக்கின்றன.

உணவைப் பரிமாறும் முறையும் கூட நாவின் சுவையை அதிகமாக்கும்.

எடுத்துக் காட்டாக, எங்களுடைய ''டின்னர் செட்''டில்.

இப்பொழுது அது சிந்தனைக்குச் சில சிறப்பான உணவினைத் தரும்.

லா ஓபாலா ஒபல்வேர்

பெரும்பாலான விருந்தினர், வைத்த விழிவாங்காமல் கவனிப்பர் இதனை.



**லா ஓபாலா®**

ஓபல் க்ளாஸ் டேபிள்வேர்

**இதுவே நீங்கள் உருவாக்கும் நன்மதிப்பு.**

ஒளி ஊடுருவக்கூடிய முத்துப்போன்ற ஈடு இணையற்ற வெண்மை நிறத்தில் தேர்ந்தெடுக்கப் பலவித நுண்ணிய மலர்கள் மற்றும் இக்காலத்தின் ஒப்பற்ற ஓவியங்கள். மைக்ரோவேவ் மற்றும் டிஷ்வாஷர்களிலும் பயன்படுத்த உகந்தது. உதிரியாகவும் செட்களாகவும் கிடைக்கிறது. மேலும் விவரங்களுக்கு அணுகுவீர். La Opala Glass Ltd., 12A Camac Street, Calcutta 700 017. Phone : 2421740/5931/6847. Fax : 2427885.

CONTRACT.LO.299.95 TAM



## தீபாவளிக்கு.....!



## கதைகள்...




**மங்கையர் மலர்**

***தீபாவளி இரட்டைச் சிறப்பிதழ்***

**மலர் : 16** **இதழ் : 10**




## குழந்தைகள் பற்றி....



## சாதனை பெண்கள்....



**இளம் பெண்களுக்கு ஒரு போட்டி காத்திருக்கிறது! கூடவே கங்கா ஸ்நானத்திற்கு இலவசமாக 'ராகா' பவுடர்!!**

**பக் -- 18**





## மருத்துவம்



## வழக்கமான சுவையான.....





## சிறப்பாக.....





இன்ஸ்டன்ட் குலாப்ஜாமூன் செய்யும் போது, மாவுடன் கொஞ்சம் வெண்ணெயைச் சேர்த்துப் பிசைந்து குலாப்ஜாமூன் செய்தால், ஜாமூன் இன்னும் மணமுள்ளதாகவும், அதிக சுவை யுடையதாகவும், மென்மையாகவும் இருக்கும்.

—— வானதி ராமு



# பூத்துக் குலுங்கும் இப்புன்னகையில், தெளிவாய்த் தெரியுது அவனது 100% பாதுகாப்பான எதிர்காலம்.

உங்கள் அன்புக் குழந்தைக்கு நீங்கள் அளிக்கக்கூடிய வளம் கொழிக்கும், ஒளிமயமான எதிர்காலம், நிச்சயம் தேவை. எனவே, அவனது வருங்காலத்துக்கு வழிவகுக்கும் உங்களின் உண்மையான அக்கறையை புரிந்து கொண்டு அதை உங்களுடன் பகிர்ந்து கொள்ளக்கூடிய ஒரு நல்ல நிறுவனத்தில்தான் நீங்கள் முதலீடு செய்ய வேண்டும். ஆம் – அதுவே ரானக் ஃபைனான்ஸ் லிமிடெட்.

ரானக் ஃபைனான்ஸ் லிமிடெட், (ஆர் எஃப் எல்) இந்தியாவின் மிக நம்பகமிக்க நிறுவனங்களுள் ஒன்றான, 1500 கோடி மதிப்புள்ள ரானக் குரூப்பின் ஓர் அங்கமாகும். இந்நிறுவனத்தில், பல பிரசித்தி பெற்ற நிறுவனங்கள் வாடிக்கையாளர்களாக இடம் பெற்றுள்ளன. மேலும் இந்நிறுவனத்துக்கு பல துறைகளின் சீரான மதிப்புள்ள சொத்துக்களின் அடித்தளமும் உள்ளது.

ஆர் எஃப் எல், எஸ் இ பி ஐ அங்கீகாரம் பெற்ற கேட்டகிரி I-யை சார்ந்த மெர்ச்சென்ட் பேங்கர் ஆகும். கடந்த 5 ஆண்டுகளாக இந்நிறுவனம், தொடர்ச்சியாக 25% டிவிடெண்டுகளை வழங்கி வருகிறது.

இப்போது நீங்கள் ஆர் எஃப் எல் வழங்கும் க்யூமுலேட்டிவ் அல்லது நான்-க்யூமுலேட்டிவ் ஃபிக்ஸட் டிபாசிட் திட்டங்களில் சேர்ந்து, அதற்குண்டான வட்டித் தொகையை மாதாமாதமோ, காலாண்டு அல்லது அரையாண்டிலோ பெறக்கூடிய பலதரப்பட்ட வசதியைப் பெறலாம்.

எனவே நம்பகமிக்கதும், நிலையானதும், உங்களின் முதலீட்டுக்கு அதிக அளவு வரவை உறுதியான பாதுகாப்புடன் தரக்கூடியதுமான நிறுவனம் ஒன்றில் நீங்கள் முதலீடு செய்ய விரும்பினால், அது ஆர் எஃப் எல் நிறுவனம்தான். வாருங்கள், உங்கள் குழந்தையின் வளமான எதிர்காலத்தை நீங்கள் உருவாக்க, நாங்கள் உங்களுக்கு உதவுவோம்.

**Contact us at:**

- Raj Building, 730, Mount Road Madras-600 006 Tel.: 8525303
- Gnanalakshmi Building 3rd floor, 996-B-3, Mettupalayam Road, Coimbatore-641 002 Tel.: 438253

**• CRISIL Rating FA + (Adequate Safety) •**



**RAUNAQ FINANCE LTD.**

*LIFETIME TRUST.*

HTA.5286.97.AR

Corporate Office: Allahabad Bank Building, 17, Sansad Marg, New Delhi-110 001.

**LEASING • HIRE PURCHASE • BILL DISCOUNTING • PROJECT EVALUATION • MERCHANT BANKING**



# நமக்கு என்ன ஆச்சு?

மஞ்சுளா ரமேஷ்

ஒரு நோக்கத்திற்காக ஒன்றை வழக்கமாக ஏற்படுத்தி வைத்திருக்கிறார்கள். ஆனால் அதுவே அந்த நோக்கத்திற்கு நேர் எதிராக செயல்படும் போது, ஏண்டா (ஏண்டி....!) இதை யெல்லாம் உண்டாக்கி வைத்திருக்கிறார்கள் என்று நினைக்கத் தோன்றுகிறது....

.... ஒன்றும் புரியவில்லை இல்லையா! இப்போது பண்டிகைக் காலம். இந்த நேரத்தில் மனித உறவுகளில் ஏற்படும் முறுக்கல்களைத் தான் சொல்கிறேன்.

அவரவர்கள் அவரவர் குடும்பம், குழந்தை என சிறிய வட்டத்தில் சுயநலமிகளாக இருந்து விடக் கூடாது; மனிதர்கள் ஒருவரை ஒருவர் சார்ந்து இணைந்து வாழும் போதுதான் அது மனித வாழ்க்கைக்கே அர்த்தத்தை உண்டாக்கும் என்பதற்காகத்தான் பல பழக்க வழக்கங் களை நம் முன்னோர்கள் ஏற்படுத்தி இருக் கிறார்கள்.

திருமணங்களில் நாத்தனார் தாலி முடிவது, பெண்ணின் சகோதரன் காசியாத்திரை போதும், திருமண ஹோமத்தின் போதும் பங்கு பெறுவது, குழந்தை பிறக்கும் சமயம் அம்மா வீடு, மாப்பிள்ளையின் மாமனார் வீடு விஜயம், பண்டிகைகள், விசேஷங்கள், தீபாவளி... எல்லாமே மனிதர்கள் ஒருவருக்கொருவர் இணைந்து வாழ, சந்தோஷத்தைப் பரிமாறிக் கொள்ள, சுயநலமிகளாக ஒதுங்கிவிடாமல் இருக்க.

ஆனால் இங்கே என்ன நடந்து கொண் டிருக்கிறது? ஊழல் செய்யும் மந்திரியை ராஜா 'சரி இவனை என்னதான் செய்வது, ஊழலே செய்ய முடியாமல் இருக்க இப்படிச் செய்ய வாம்' என முடிவு கட்டி, "போய், கடலலையை எண்ணு! ஒரு நாளைக்கு எத்தனை அலை கரைக்கு வருகிறது, போகிறது என எண்ணி கரெக்டாகச் சொல்ல வேண்டும்" என உத்திர விட்டானாம். அந்த மந்திரி என்ன செய்தான்? கடலில் போகும் மீனவர்களை மிரட்டி, "நீ போவதால் அலைகள் மாறுகிறது. ராஜா சொல்லியிருக்கார், மரியாதையா, கமிஷன் வெட்டு" என அங்கேயும் தன் சாமாசாத்தை ஆரம்பித்து விட்டானாம்.

அந்தக் கதைதான் நம்ம கதையும்.

உறவு ஒற்றுமைகளுக்காகவும், குதூகல மகிழ்ச்சிகளுக்காகவுமே வைக்கப்பட்ட பண்டி கைகளும், விசேஷ நாட்களும் இங்கே அடித் துப் பிடித்துப் பணம் பிடுங்கவும், ஒருவரை ஒருவர் கீறி காயப்படுத்திக் கொள்ளவுமே என் றாகிவிட்டது. ஏற்கெனவே ஒருவரைப் பார்த் தால் ஒருவர் முகத்தைத் திருப்பிக் கொள்வதும், உர் உர் என உறுமுவதுமே வாடிக்கை. இன்னும் இது போன்ற நாட்களில் கேட் கவே வேண்டாம்.

குழந்தை உண்டாகி விட்டால், ஏற் கெனவே கல்யாணக்கடன் முடியாமல் தவிக் கும் அம்மா அப்பா என்ன அவஸ்தைப்படு வார்களோ என நடுங்கும் பெண்கள் எத்தனை பேர்!

தீபாவளி வருகிறதே, மாமியார் என்ன லிஸ்ட் நீட்டப் போகிறாரோ என அவஸ்தைப் படும் மருமகள்கள் எத்தனை பேர்!

'எனக்கு இத்தனை ஜரிகை புடைவை தானா' என அம்மாவைச் சாடும் பெண்ணும் இருக்கிறார்.

'மருமகளுக்கு என்னைக் கண்டாலே ஆகாது. பாரேன்; எனக்குப் பட்டுப்புடைவை

# இம்மாத இல்லத்தரசி

## சமையல் கூப்பன்

**பொருள் : 'கொழுப்பு' இல்லாத உணவு** **கடைசி தேதி : 15.11.96**

என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இதனுடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

எடுக்கத் தோணித்தா என தொடிக்கும் மாமி யாரும்!

யப்பா, வீட்டுக்கு வீடு விசேஷ நாட்களில் குதூகலமும், மகிழ்ச்சியும் பொங்குகிறதோ இல்லையோ, குத்தல் பேச்சும், குதர்க்க வாதங்களும், அதிகபட்சமாக உறவு முறிதலும் அதிகரித்துக் கொண்டுதான் வருகிறது. இதெல்லாம் ரொம்பவும் சர்வ சகஜமான காட்சிகளாக மாறி வருவதும் கண்கூடு.

இதைப் பற்றி நாம் எல்லோருமே மறுபரிசீலனை செய்து பார்த்தால் என்ன? ஏனென்றால் இது ஒரு பக்கம் மட்டுமே மனம் மாறி காட்சிகள் மாறுகின்ற விஷயம் அல்ல. எல்லோரும் ஒட்டுமொத்தமாக திருந்த வேண்டிய விஷயம்.

இன்றைய விஞ்ஞானயுகம் வெகு வேகமாக மாறிவருகிறது. எத்தனை பிரமிப்பூட்டும் விஷயங்களை அன்றாடம் பார்த்து வருகிறோம். குழந்தைகளின் அசாத்தியமான அறிவையும், பெருகிவரும் விஞ்ஞான வசதிகளையும் மகிழ்ச்சியாக ஏற்றுக் கொண்டு அனுபவித்து வருகிறோம். நம்மைப் பொறுத்தவரை வெளியுலகம் விரிய விரிய உள்ளே உள்ள 'மனோ உலகம்' குறுகிக் கொண்டே போகிறது. அல்லது அதைப் பற்றியே சிந்திக்காமல் போய்க் கொண்டு இருக்கிறோம் என்றுதான் தோன்றுகிறது.

சிரிப்பும் கலகலப்புமான குடும்பம்.

மணமகன், மணமகள் காரணமாக இணைந்த இரு குடும்பங்களின் மனம் நிறைந்த குதூகலச் சந்தோஷம் பொழியும் மகிழ்ச்சிகள். பண்டிகைகளின் போது உறவுகள் ஒன்று சேர்ந்து சாப்பாடும், கேலியும் கிண்டலுமான (நல்லவிதமாகத்தான்) பேச்சுக்கள்.

அன்பான உள்ளார்ந்த நெகிழ்ச்சியுடன் அரவணைத்துச் செல்லும் உளப்பாங்கு. கஷ்டத்திலும், நஷ்டத்திலும் விட்டுக் கொடுக்காத உறவுகளின் இறுக்கம்.

ஆஹா, நினைக்கவே எத்தனை நன்றாக இருக்கிறது! இதுதானே வாழ்க்கையின் அர்த்தமும் கூட.

நாம் மனிதர்களாக வாழ்வதன் பொருளே இதுதானே!

இதையேன் நாம் மறந்து போகிறோம். கம்ப்யூட்டர் கற்கவும், புதிது புதிதாக ருசித்து அனுபவிக்கவும் விரையும் மனது, அன்பு, பாசப் பிணைப்பை மறந்து போனது ஏன்? அவைகள் தானே வாழ்க்கையின் நிறைவும் கூட.

சரி, போனது போகட்டும் இனியாவது வாழ்வது மனம் நிறைந்த வாழ்க்கை வாழ்வதற்கே என எடுத்துக் கொள்வோம். அதற்கு முதல் படியாக --

நரகாசுரனான கெட்ட எண்ணங்களை ஒழித்து இனிப்போடு மகிழ்ச்சியாகத் தீபாவளி கொண்டாடுவோம்.

## நவீன அதிரடித் தற்காப்புக் கலைரூ. 55.00



200க்கும் மேற்பட்ட புகைப்படங்களின் உதவியுடன் பல்வேறு வகையான உத்திகளை மாஸ்டர் திரு. செல்வா இப்புத்தகம் மூலம் சுலபமாகக் கற்றுத்தருகிறார். நமக்கு எதற்கு அடிதடி சண்டைப் பயிற்சியெல்லாம் என ஒதுக்கிவிட முடியாது. தற்காப்பிற்குப் பெரிதும் பயன்படும் கலை இது. இதர நூல்கள் : கராத்தே கற்றுக்கொள்ளுங்கள் பாகம் - 1 ரூ. 25.00; பாகம் – 2 ரூ. 36.00; ஜூடோ கற்றுக்கொள்ளுங்கள் 21.00; குங்ஃபூ கற்றுக்கொள்ளுங்கள் 18.50; குத்துச்சண்டை கற்றுக் கொள்ளுங்கள் 18.00; வர்மக் கலையைக் கற்றுக்கொள்ளுங்கள் 27.00; கைப்பந்து விளையாடக் கற்றுக்கொள்ளுங்கள் 11.50; ஹாக்கி விளையாடக் கற்றுக்கொள்ளுங்கள் 15.00; செஸ் விளையாடக் கற்றுக்கொள்ளுங்கள் 16.00; தமிழக விளையாட்டுகள் 10.50; விளையாட்டு விதிகள் 16.00; கூடி விளையாடும் குழு விளையாட்டுகள் 18.00; புருஸ்லீயின் வாழ்க்கை வரலாறு 22.00; ஒலிம்பிக் அன்றும் இன்றும் 12.00; ஒலிம்பிக் பற்றிய சுவையான தகவல்கள் 17.00.

## 1997ஆம் ஆண்டு ராசி பலன்ரூ. 12.00

கடந்த 13 வருடங்களாக வாசகர்களின் தொடர்ந்த வரவேற்பைப் பெற்று வரும் ராசிபலன் நூல். இந்த வருடமும் 12 ராசிகளுடன் ஒரே புத்தகமாக வெளியாகியிருக்கிறது. 80 சதவிகிதப் பலன்கள் பொருந்தி வருவது சிறப்பு. இதர நூல்கள் : சனிப் பெயர்ச்சிப் பலன்கள்(16.4.98 வரை பலன்கள்) 15.00; ஜோஸ்யம் கற்றுக்கொள்ளுங்கள் 57.00; ஜோதிடக் கலைக் களஞ்சியம் – அறிந்த சொற்களும் அறியாத விவரங்களும் 46.00; கோட்சாரப் பலன்களைத் தெரிந்துகொள்ளும் முறைகள் 45.00; காலச் சக்கர திசை 14.00; நோய் நீக்க உதவும் இரத்தினங்களும், இராசிக் கற்களும் 42.00; பதஞ்சலி நாடி ஜோதிடம் பாகம் – 1 ரூ. 72.00; பாகம் – 2 ரூ. 51.00; அகத்தியர் நாடி ஜோதிடப்படி 12 ராசிகளுக்கு 12 புத்தகங்கள் – ஒரு செட்டின் விலை ரூ. 282.00; திருக்கணிதப் பஞ்சாங்கம் 1926 முதல் 2000 வரை 75 வருடங்களுக்கு 6 புத்தகங்கள் – ஒரு செட்டின் விலை ரூ. 445.00; இதே போல் வாக்கியப் பஞ்சாங்கம் விலை ரூ. 460.00.

## கீ போர்டு வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள்ரூ. 28.00



இசையில் ஹார்மோனியத்திற்கு அடுத்தபடியாக முக்கிய கருவியாகக் கருதப்படும் கீ போர்டைப் பற்றித் தமிழில் புத்தகம் வருவது இதுவே முதல் முறை. இசைவல்லுநர் நாட்யாச்சார்யா திரு. எஸ். பாலசந்திர ராஜுவின் அருமையான அணுகுமுறை மூலம் சுலபமாகப் புரிந்துகொள்ளலாம். மற்ற இசைக் கருவி நூல்கள் : ஹார்மோனியம் 45.00; மாண்டலின் 25.00; தபேலா 22.00; கிட்டார் 58.00; புல்புல்தாரா 15.00; வயலின் 38.00; வீணை 45.00; புல்லாங்குழல் 45.00; மிருதங்கம் மற்றும் கஞ்சிரா 78.00; கடம் 18.00; தவில் 15.00; இதர இசை நூல்கள் : நடன முத்திரைகள் 22.00; நடன அசைவுகள் 60.00; 1500 ராகங்களின் ஆரோகணம், அவரோகணங்கள் 21.00; 100 இராகங்களுக்கான எளிய ஆலாபனை 24.00; இசைத் துணைவன் (அரசுத் தேர்வு விதிமுறைத் திட்டத்திற்கேற்ப எழுதப்பட்டது) 30.00; புகழ்பெற்ற கீர்த்தனைகள் 39.00.

## நகராட்சி, மாநகராட்சிச் சட்டங்கள்ரூ. 44.00

பஞ்சாயத்து, நகராட்சிகளுக்குத் தேர்தல் நடைபெறும் இச்சமயத்தில் மிகவும் பயன்படும் புத்தகம் இது. தேர்தல் விதிமுறைகள் : உறுப்பினர்களின் பணிகள்; சொத்து மற்றும் கட்டட வரி விதிப்புகள்; பல்வேறு உரிமங்கள் வழங்குதல்; சுகாதார விஷயங்களில் நடைமுறைகள்; ஆணையரின் அதிகாரங்கள் போன்ற பல்வேறு துணைத் தலைப்புகளுடன் புதிய விதிகளின் விவரங்களும் விரிவாகத் தரப்பட்டிருப்பது, இந்நூலின் சிறப்பு. மிகவும் பயனுள்ள நூல். தமிழில் இதுபோன்ற வேறு நூல் இல்லை. விற்பனையாகும் இதர நூல்கள் : பஞ்சாயத்து ராஜின் தோற்றமும், வளர்ச்சியும் 8.00; பஞ்சாயத்து பற்றிய சட்டங்களும் நிர்வாக முறைகளும் 23.00; நமது இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் 9.90; தலைமைச் செயலகம் இயங்கும் விதமும் நாம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்களும் 14.00.

## ரங்கோலிக் கோலங்கள் போடுவது எப்படி?ரூ. 15.00




வீட்டு வாசலில் வண்ண வண்ணக் கோலங்கள் அதிக மனநிறைவைத் தரவல்லவை. ரங்கோலிக் கோலங்கள் இன்னும் அழகு. குறைந்த விலையில் உயரிய உதாரணக் கோலங்கள். இதர நூல்கள் : வகை வகையான கோலங்கள் பாகம்-1 ரூ. 9.00; பாகம் – 2 ரூ. 7.00; பாகம் – 3 ரூ. 12.00; பெண்களுக்குரிய கை, கால் மருதாணி மாதிரிகள் 30.00: கொண்டை அலங்காரங்களும், கூந்தல் பராமரிப்பும் 11.50; புவனாவின் ஆரோக்கிய அழகுக்கலை முறைகள் 13.00; நெக்லஸ் மாதிரிகள் 30.00; தோடு, மோதிரம், மூக்குத்தி மாதிரிகள் 30.00; சங்கிலி, வளையல் பிரேஸ்லெட் மாதிரிகள் 30.00; நீங்களும் மேக்கப் செய்யலாம் 15.50; உடையலங்காரமும், நகையலங்காரமும் 9.75; முக அழகைப் பாதுகாப்பது எப்படி? 12.00; தையல் கற்பவர்களுக்கான அடிப்படை விஷயங்கள் 18.00; தையல் இயந்திரங்களைப் பழுதுபார்ப்பது எப்படி? 9.00; உடைகளின் குறைகளும் நிவர்த்திகளும் 11.00; சித்திரத் தையல் எம்ப்ராய்டரி 22.00; சிறுமியருக்கான உடைகள் 27.00; கல்லூரி மாணவிகளுக்கான உடைகள் 15.00; பெண்களுக்கேற்ற டீன் ஏஜ் உடைகள் 21.00; பெண்களுக்கான உடைகள் 23.00; கீழைநாட்டுப் பெண்களின் உடைகள் 11.00

மேற்கண்ட புத்தகங்களுள் தேவையானவற்றை வி.பி.பி.யில் பெறக் கடிதம் எழுதுங்கள். பாதுகாப்பாக அனுப்பி வைக்கிறோம். தபால்காரர் புத்தகங்களை உங்களிடம் தரும்போது பணம் செலுத்தினால் போதும். (தபால் செலவு தனி). சென்னையில் இருப்பவர்கள் நேரில் வந்து வாங்கிக்கொள்வது சிக்கனம். தினமும் விற்பனை நேரம் : காலை 9 மணி முதல் மாலை 6 மணி வரை. ஞாயிறு விடுமுறை. கடிதம் எழுத வேண்டிய முகவரி:




**மணிமேகலைப் பிரசுரம்**

தபால் பெட்டி எண் : 1447, 4, தணிகாசலம் சாலை,

தியாகராய நகர், சென்னை - 600 017.

தொலைபேசி : 4342926 தொலைநகல் : 044-4346082




# 'நாமும் சாதிக்கிறோம் எனும் பெருமிதம்!'

பெண்கள் முழுநேர வியாபாரத்தில் இறங்குவதும், முழு நேரத் தொழிலதிபர்களாக பிரகாசித்துக் கொண்டிருப்பதும் இப்போது சகஜமான விஷயமாக மாறவிட்டிருப்பது மகிழ்ச்சிதான். அதுவும் இன்றைய போட்டி மிகுந்த டெக்ஸ்டைல்ஸ் பிஸினஸில் ஒரு பெண்மணி பிரகாசித்துக் கொண்டிருக்கிறார் என்பது வரவேற்கப்பட வேண்டிய விஷயமும் கூட. சென்னை மயிலாப்பூரின் இருதயப் பகுதியான குளக்கரையில் ஓங்கி நிற்கும் கட்டிடமாக விளங்கும் பி.கே. மணியம்மாள் டெக்ஸ்டைல்ஸை திருமதி நாகஜோதி ஜெயராமன்தான் முழுமையாகக் கவனித்து வருகிறார். இவர் எப்படி இத்துறைக்கு வந்தார்?

''புடைவை வியாபாரத் தொழில் என் ரத்தத்தோடு கலந்தது என்று கூடச் சொல்லலாம்'' என்று புன்னகைக்கிறார் நாகஜோதி. இவருடைய தந்தை பிச்சக்கண்ணு வாண்டையார் சிங்கப்பூரில் மிகப் பெரிய ஜவுளி வியாபாரி. இன்றும் இவர்களுடைய வியாபாரம் அங்கு நடந்து வருகிறது. அங்கு விற்பனையாகும் ஜவுளிகள் தமிழகத்தி





லிருந்துதான் ஏற்று மதியாகிறது. அவருடைய மனைவி குழந்தைகள் அனைவரும் இங்குதான் இருப்பதால் தமிழகத்திலும் ஒரு நல்ல ஜவுளி வியாபார நிறுவனத்தைத் திறக்க வேண்டும் என்பது இவருடைய ஆசையாம்.

இவருடைய பெண் நாகஜோதி சென்னை டாக்டர் ஜெயராமனை மணந்து இங்கு 'செட்டில்' ஆனபோதுதான் இவர்களுடைய குடும்பத்தில் இந்த எண்ணம் அரும்பியது.

''அப்பா நான் முழுநேர ஜவுளி பிஸினஸில் இறங்குவதை ரொம்பவும் வரவேற்றார்.

• டாக்டர் ஜெயராமன் - நாகஜோதி

வித்தியாசமாக மயிலாப்பூரில் ஆரம்பித்தோம். முதலில் எனக்குப் பழக வேண்டும் என்பதால் தன்னிடமே பணிபுரிந்த ஒரு மானேஜரை அனுப்பியிருந்தார். இப்போது முழுக்க முழுக்க நானே வியாபாரத்தைப் பார்த்துக் கொள்கிறேன்'' என்கிறார் பெருமிதமாக.

'பெண்கள் உலக'மான ஜவுளி வியாபாரத்தில் இவரே புடைவைகள் மற்ற துணிமணிகள் வாங்குவது, முழு நேரமும் கடையில் இருப்பது என ஈடுபட்டிருப்பதனால், பெண்களுக்கே உரிய ரசனை இவருடைய கடை முழுக்க பரவியிருப்பதை நன்றாகவே பார்க்க முடிகிறது. இவர் பார்த்துப் பார்த்துத் தேர்ந்தெடுத்து வைத்திருக்கும் புடைவை ரகங்கள், ரெடிமேட் கார்மெண்ட்ஸ், ஆண்களுக்கான துணிவகைகள் என நிறைய. அத்தனையையும் மீறி ஒரு 'செக்ஷன்' நம்மைக் கவர்கிறது. அதுதான் 'அம்மன் பாவாடைகள்' செக்ஷன்!

''இது தெய்வாதீனமாக என் கடையில் அமைந்து விட்ட ஸ்பெஷாலிட்டி என்று சொல்லலாம். சாதாரணமாக அம்மனுக்குச் சாத்தும் பாவாடைகள் கேட்கிறார்கள் எனச் சேகரிக்க ஆரம்பித்தேன். அப்புறம் பார்த்தால் அப்படியே கொஞ்சம் கொஞ்சமாக சேர ஆரம்பித்து விட்டது. தமிழகத்தின் முக்கிய கோயில்களில் இருக்கும் அம்மன் சிலையின் உயரங்களுக்கேற்றவாறு பாவாடைகள் இங்கு ரெடிமேடாகக் கிடைக்கின்றன. நிறைய பேர் தமிழகத்தின் பல புகழ் பெற்ற அம்மன் கோவில்களுக்கும், குறிப்பாக பகவான் பாபா சிலைக்கான துணிகளும் வாங்கிச் செல்கிறார்கள். பட்டுப் பாவாடை முதல் அவரவர் சக்திக்கேற்றவாறு எந்த ரகமும் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். ஒருவேளை மயிலாப்பூர் கற்பகாம்பிகையின் சந்நிதி அருகே இருக்கிறோம் என்பதாலோ என்னவோ....'' எனச் சிரிக்கிறார் நாகஜோதி.



**''இப்போதெல்லாம் சீட்டுக்கள் ரொம்பப் பிரபலமாச்சே. நீங்களும் அந்த மாதிரி....''**

''கண்டிப்பாக. செய்யாமல் இருப்பேனா! ஆனால் அதிலே ஒரு ஸ்பெஷல் வைத்து இருக்கிறேன். எங்களுடைய சீட்டுக்கள் சரியாக தீபாவளி சமயத்தில் முடியுமாறு பார்த்துக் கொள்வேன். நம்முடைய நடுத்தர குடும்பத்துச் சகோதரிகள் தீபாவளி சமயத்தில் எளிதாக சிரமம் இல்லாமல் புடைவைகள் மற்றும் அவரவர் குடும்பத்தாருக்குத் துணிமணிகள் எடுத்துக் கொள்ளலாமே! அதிலேயும் ஒவ்வொரு மாதமும் குலுக்கல் மூலம் ஃப்ரிட்ஜ், கிரைண்டர் என நிறைய பரிசுகளும் வைத்திருக்கிறோம்.

அதே போல தீபாவளி வரை ஐநூறு ரூபாய்க்கு மேல் துணி வாங்குபவர்களுக்கு கூப்பன் அளித்து அதில் முதல் பரிசு ஒரு லட்சம் பெறுமானமுள்ள தங்க நகைகள், ஹீரோ ஹோண்டா என நிறைய அறிவித்து இருக்கிறோம். இவையெல்லாம் பட்டியலிட்டுச் சொல்கிறேன் என்றால் அதற்குக் காரணம் ஒவ்வொரு வருடமும் துணிமணிகள் வாங்கிக் கொள்வதோடு பரிசுகளையும் அவர்கள் பெற்றுக் கொள்ளும் போது அவர்கள் முகத்தில் இருக்கும் ஆனந்தம் இருக்கே, அதற்கு ஈடு இணையே கிடையாது. அதற்காகவே ஒவ்வொரு வருடமும் பரிசுகளை அதிகரித்துக் கொண்டே போகிறேன்.''

**''தீபாவளி சமயத்தில் சீட்டு முடியும்படி பார்த்துக் கொள்கிறேன் என்கிறீர்களே, சரி. ஆனால் நம் பெண்கள் மிகவும் சிரமப்படும் நேரம் பள்ளிகள் திறக்கும் நேரம்தானே. நீங்கள் ஏன் அந்த நேரத்தில் முடியும்படி ஒரு சீட்டு அமைத்து அவர்கள் யூனிஃபார்ம் துணி வாங்குவது போலச் செய்யக் கூடாது?''**

''இது மிக நல்ல யோசனை. அடுத்த வருடம் கண்டிப்பாக நான் இதைச் செய்கிறேன். இதிலே ஒன்றும் பிரச்னை இல்லை. ஏற்கெனவே எல்லா பள்ளிகளின் யூனிஃபார்ம் துணிகளும் நான் வைத்திருக்கிறேன். இப்படி ஒரு நல்ல யோசனை தந்த உங்களுக்கு ரொம்ப நன்றி.''

**''மிகவும் போட்டிகள் நிறைந்த வியாபாரமாச்சே இது. எப்படிச் சமாளிக்கிறீர்கள்?''**

''சிறு வயதில் இருந்தே பிஸினஸ் சூழ்நிலையில் வாழ்ந்தவள். அதனால் அதற்கான மனவுறுதி எனக்கு நிறையவே இருக்கு. அது தவிர நாங்கள் தேர்ந்தெடுத்துக் கொண்ட இடமும் மயிலாப்பூர்தானே. அதனால் எனக்கென்று உள்ள தனிவழியில் என்னால் அதிகச் சிரமங்கள் இல்லாமல் செல்ல முடிகிறது.''

**''குடும்பம் என்று வரும் போது எப்படிச் சமாளிக்கிறீர்கள்?''**

''கணவருடைய ஆதரவு எனக்கு முழுமையாக இருக்கு. அதனால் என்னுடைய வியாபாரத்தை முழுமையாக என்னால் கவனிக்க முடிகிறது. யோசனைகள் சொல்லவும், ஊக்குவிக்கவும் தாய் தந்தை சகோதரர்கள் இருக்கிறார்கள். இருந்தாலும் நான் துணிந்து இந்த ஜவுளி வியாபாரத்தில் இறங்கியிருக்கிறேன் என்றால் அதற்கான ஒவ்வொரு துறையையும் நான்தான் முழுமையாக பார்த்துக் கொள்கிறேன். வருகின்ற பிரச்னைகள், வெற்றி பெற முனையும் உழைப்பு எல்லாம் இருக்கிறது இல்லையா? அதற்காகப் பாடுபடும் போது ரொம்பவும் சந்தோஷமாகத்தான் இருக்கிறது. நாமும் ஏதோ சாதித்துக் கொண்டிருக்கிறோம் என்ற பெருமிதத்திற்கு ஈடு இணை வேறு ஒன்றும் இல்லையே!''

**— புவனா**

# அவ்வை சண்முகி

பிரத்தியேக
சிறப்புப் புடவை
டிசைன்கள்
1996 தீபாவளிக்காக
உருவாக்கப்பட்டது.




**ராதா சில்க் எம்போரியம்**

1, சன்னதி தெரு, மயிலாப்பூர்,
சென்னை - 600 004. போன் : 4941906/7/8/9

கிளைகள் : AC-4, 2வது அவென்யூ, அண்ணாநகர்,
சென்னை - 600 040. போன் : 6281706, 6216065
S.T.S.R., பெரிய தெரு, கும்பகோணம் - 612 001.
போன் : 3088

☆ 6 கெஜம் புடவைகள் மட்டும் ☆

# தீபாவளி ஸ்பெஷல்



• பர்த்டே சூட்

• சங்கராபரணம் சூட்

• ஸராரா

குழந்தைகளுக்குத் தீபாவளி என்றால் புதிய ஆடைகளும், பட்டாசும்தானே ஸ்பெஷல்! இந்த வருடத் தீபாவளிக்கு அவர்களுக்கு என்ன புதிய டிசைன்கள் வந்திருக்கின்றன? நவீனமயமாக மாறிவரும் கோவையில் கொஞ்சம் கேட்கலாமே என்று தோன்றியது. பெரிய தெருவிலுள்ள 'ஷோபா கார்னர்' கடைக்குள் எட்டிப் பார்த்தபோது கடலுக்குள் பார்க்கிற மாதிரி இருந்தது. அத்தனை வகை டிசைன்கள்! ஷோபா கார்னர் உரிமையாளர் ஷௌகத் அலிகானை அணுகி —

"பொதுவா இந்த வருட தீபாவளி 'டல்' எனப் பேசிக் கொள்கிறார்களே! அதுவும் பணப்புழக்கம் குறைச்சலா இருக்கு என்றெல்லாம் பேசிக் கொள்கிறார்களே" என்று கேட்டபோது சிரித்தார்.

"இதோ கடைக்குள் பார்த்துக் கொண்டு இருக்கிறீர்கள். இல்லையா? கூட்டம் சமாளிக்க முடியவில்லை. எந்த வருடம் போல இந்த வருடமும் தீபாவளி கலகலப்பாகத்தான் வந்து கொண்டிருக்கு. குறிப்பாகக் குழந்தைகளுக்குத் துணி மணிகள் எடுக்க வேண்டும் என்பதில் எந்தப் பெற்றோரும் கஞ்சத்தனம் பார்க்கவே மாட்டார்கள். தங்களுக்காவது பட்டுப் புடைவை வாங்கறதை பாலியஸ்டரா வாங்கிக்கலாம் என்று முடிவு செய்வார்களே தவிர குழந்தைகளுக்கு நல்ல டிரெஸ் என்ற கொள்கையில் இருந்து மாறமாட்டார்கள்.



நாங்களும் ஜவுளித் துறையில் அறுபத்தைந்து வருடங்களுக்கு மேலாக இருக்கிறோம். என்னுடைய தந்தை மூகமதுகனி ஒவ்வொரு வாடிக்கையாளரையும் நன்றாக தெரிந்து வைத்திருப்பார். அவருடைய அன்பான அணுகுமுறைதான் இன்று இத்தனை பெரிய கடை."

அதிலும் குறிப்பாக கடையில் அழகு கொஞ்சும் இன்டீரியர் டெகரேஷன் அமைத்திருப்பதைப் பார்க்க முடிந்தது.

"குழந்தைகள்தானே எங்களுடைய வாடிக்கையாளர்கள். அதுவும் இன்றைய குழந்தைகள் உலகம் முழுக்க அறிந்தவர்கள். நவீன விஞ்ஞான யுகத்தைக் கண்டு கொண்டிருப்பவர்கள். எனவே அவர்கள் ரசனையோடு பார்க்கவும், சுற்றி வரவும் ரொம்ப சிரத்தையோடு ரெடிமேட் டிரஸ்களோடு இன்டீரியருக்கும் முக்கியத்துவம் கொடுத்திருக்கிறோம்!"

**"பொதுவாக பெண் குழந்தைகளுக்குத்தான் அதிக வெரைட்டி கிடைக்கும். ஆண் குழந்தைகளுக்கு அத்தனை வெரைட்டிகள் இருப்பதில்லை என்பார்களே!"**

"அந்தக் காலம் எல்லாம் மாறிப் போயாச்சே. ரெடிமேட் பெண்கள் அளவிற்கு ஆண்களுக்கும் அதிகமாகவே கிடைக்கிறது. அதுவும் எங்களுடைய கடை புகழ்பெற்றது என்பதால் எந்தப் புதிய டிசைன் என்றாலும் இங்கே முதலில் வந்து விடும். அவற்றையெல்லாம்தான் நான் பார்த்துக் கொண்டு இருக்கிறேன். அதுவும் இந்தத் தடவை 'அமெரிக்கன் ஸ்டைல் பர்முடாஸ் செட்' என்று வந்திருக்கிறது. 'பார்ட்டே ஸூட்' எனப் பெயரில் வந்திருப்பது நமது பிரபுதேவா ஸ்டைலில் இருக்கிறது. சங்கராபரணம் சூட் ஆண் குழந்தைகள் திருமணங்களுக்குப் போட்டுச் செல்லலாம். 'நீட்'டாகவும் அதே சமயம் 'ரிச்'லுக்கும் கிடைக்கிறது. இப்படி நிறைய ரகங்கள். நல்ல கற்பனை நயத்தோடு டிரெஸ்கள் வருகின்றன...."

**"கொஞ்சம் பெண் குழந்தைகளுக்கும் சொல்லி விடுங்களேன்...." என்றதும் சிரித்தார்.**

"நீங்களேதானே சொன்னீர்கள், பெண் குழந்தைகளுக்கு எப்போதும் நிறைய வெரைட்டி கிடைக்கிறது என்று. இந்தத் தடவை 'ஸராரா' என ஒன்று புதிதாக அறிமுகப்படுத்துகிறோம். நம்முடைய பாரம்பரியம் மிக்க பாவாடை சட்டையினை கொஞ்சம் மாடர்னாக மாற்றியிருப்பது அது. கீழே டைட்ஸும் மேலே 'லூஸ்' ஆன நீண்ட 'டாப்ஸ்' வந்திருக்கிறது. இதுவும் அழகாக இளம் பெண்களுக்குப் பொருந்தும். மிக 'மாடர்ன்' தோற்றத்தைத் தரும். அதே சமயம் மிகவும் 'டீசன்ட்'டாக இருக்கும். குழந்தைகளுக்கு எக்கச்சக்கமான டிசைன்களில் டிரெஸ்கள் வந்திருக்கின்றன. அதிலே செலக்ட் செய்து சொல்வது என்பது ரொம்பக் கஷ்டம்..." என்கிறார் சௌகத் அலிகான்.

**"இந்த அளவு நவநாகரீகம் நம் பாரம்பரியம் மிக்க உடைகளை மறக்கடித்து விடாதா? 'ரெடிமேட் ஷாப்' உரிமையாளர் என்ற முறையில் இதற்கு உங்களுடைய பதில் என்ன?"**

"கண்டிப்பாக மாறாது. இன்றைய பெண்களும் இளைஞர்களும் எந்த அளவுக்கு மாடர்ன் ஆக இருக்கிறார்களோ அந்த அளவிற்குப் பாரம்பரியத்தையும் கடைப்பிடிக்கிறார்கள். அது அவர்களின் உடையிலும் கண்டிப்பாக பிரதிபலிக்கும். எப்போது எந்த உடை அணிய வேண்டும் என அவர்களுக்கு நன்றாகவே தெரியும். எனவே நம் பாரம்பரிய உடைகளைப் பற்றி பயப்பட வேண்டியதில்லை" என்கிறார் இவர்.

பேட்டி : **ஜெயலட்சுமி**

படங்கள் : **கேசவன்**

# ரூபாய் ஒரு லட்சம் பரிசு!

**டாக்டர் ஏ.வி.ஜி. ரெட்டி இயற்கை மருத்துவமனையில்** தங்கி 30 நோயாளிகள் வரை சிகிச்சை பெறலாம். புற்றுநோயாளிகள், சிறுநீரக நோயாளிகள் உட்பட வருடந்தோறும் 10,000 நோயாளிகளுக்கு மேல் ஏ.வி.ஜி. ரெட்டியின் ஆலோசனையைப் பின்பற்றி உடல்நலம் பெறுகின்றனர். தோல் வியாதி, சர்க்கரை வியாதி, ஆஸ்துமா மேலும் மலட்டுத் தன்மைக்கு உலகில் சிறந்த மருத்துவ ஆலோசனையை நாங்கள் தருகின்றோம்.

எங்களிடம் உடல்நலம் பெறாத நோயாளிகள், பல வருடங்கள் சிகிச்சை பெற்றாலும், பல லட்சங்கள் செலவு செய்தாலும் உடல்நலம் பெறுவது மிக மிகக் கடினமே. எங்களிடம் வரும் நோயாளிகளுள் 80% பேர் ஒரே மாதத்திற்குள் உடல்நலத்தில் அற்புதமான முன் னேற்றம் பெறுகின்றனர். ஒரு நோயாளி, டாக்டர் ஏ.வி.ஜி. ரெட்டியின் ஆலோசனையைப் பின்பற்றியும் குணமடையாவிட்டால் ரூ. 1000/- நஷ்ட ஈடாகத் தரப்படும் என்று கூறி சவால் விட்டு நாங்கள் 1989 முதல் இயற்கை மருத்துவம் செய்து வருகிறோம்.

"உயிருள்ள இயற்கை உணவுகள்" என்று உலகின் சிறந்த இயற்கை மருத்துவப் புத்தகத்தை முதன் முதலில் 1989 ஆம் வருடம் வெளியிட்டவர் டாக்டர் ஏ.வி.ஜி. ரெட்டியே.

மேற்கண்ட செய்திகளையெல்லாம் பொய் என்று நிரூபிக்கும் முதல் மனிதருக்கு ரூபாய் ஒரு லட்சம் பரிசு தரப்படும். மூலிகை இலைகளையும், பூக்களையும், வேர்களையும், காய், கனிகளையும் நாங்கள் மருந்தாக உபயோகிக்கிறோம்.

ஒரு மாதத்திற்குரிய மருந்துகளுடன் தபாலில் ஆலோசனை பெற ரூ. 300/-க்கு ஏ.வி.ஜி. ரெட்டி என்ற பெயருக்கு டிராஃப்ட் அனுப்பவும். நோயாளிகள் இலவசமாக ஆலோசனை பெற செவ்வாய், புதன், வெள்ளி ஆகிய நாள்களில் மாலை 5 மணி முதல் இரவு 8 மணி வரை டாக்டர் ஏ.வி.ஜி. ரெட்டியை நேரில் சந்திக்கலாம். வீட்டிற்கு வந்தும் ஆலோசனை தரப்படும்.

தினசரி 10 விதமான சாறுகளும், இயற்கை உணவும் உட்பட ஒருநாள் முதல் பதினைந்து நாள்கள் வரை ஒரு நோயாளி தங்கி சிகிச்சை பெறக் கட்டணம் ரூ. 3000/-. ஒரு நோயாளியுடன் ஓர் உதவியாளர் இலவசமாகத் தங்கலாம். எங்களின் மருத்துவமனையில் தங்கி மருத்துவராகப் பயிற்சி பெற, தங்கும் இடம் உட்பட ஒரு மாதக் கட்டணம் ரூ. 1000/- மட்டுமே.

விவரம் பெற ரூ.50க்கு டிராஃப்ட் அனுப்பி விண்ணப்பப் படிவம் பெற்றுக் கொள்ளலாம்.

**A.V.G. NATURAL DIET CURE HOSPITAL AND COLLEGE**
**PB 6886, AG 57, THIRD AVENUE, ANNA NAGAR,**
**MADRAS - 600 040.**

---

**புகழ்பெற்ற ஜோதிஷர், மந்திர சாஸ்திர நிபுணர் பண்டித காழியூர் ம. பத்மநாபன்.**



எனது தந்தையார் அடியேனுக்கு மந்திரோபதேசம் செய்யும் காட்சி.

பிரபல ஜோதிஷர் **(பண்டித காழியூர் பத்மநாபன்)** காழியூர் ஸ்ரீனிவாசாச்சாரியாரின் மூத்த புதல்வரும், ஜோதிஷ மந்திர சாஸ்திரங்களில் 45 வருட காலம் நன்கு தேர்ச்சியும், ஆசீர்வாதமும் பெற்றவரால், மகத்தான சக்தி வாய்ந்த யந்திரங்கள், சக்கரங்கள் வெள்ளியில் தயாரிக்கப்படுகின்றன. மகாலெக்ஷ்மி கவசம் ரூ. 250/-, மகா சுதர்சன யந்திரம் ரூ. 250/-, லக்ஷ்மி நரசிம்ம கவசம் ரூ. 350/-, தனாகர்ஷண யந்திரம் ரூ. 350/-, மகா சுதர்சன சக்கரம் ரூ. 550/- மஹாலக்ஷ்மி சக்ரம் ரூ. 550/-. இவை தவிர அநேக விதமான யந்திரங்களும், கவசங்களும், (விசேஷ பூஜா க்ரமப்படிக்கு) தயாரித்து அனுப்பப்படும்.

வெளிநாட்டு நேயர்கள் இரட்டிப்புத் தொகை DD மூலம் அனுப்ப வேண்டும். தபால் செலவு ரூ. 50/-

கம்ப்யூட்டர் ஜாதகம் தமிழ் / ஆங்கிலம் ரூ. 50/- ஜாதகத்தின் பொதுப்பலன்களை நேரில் சொல்வதற்கு ரூ. 50/- ஆயுள் பலன் (வருஷம், மாதம் தேதி, நேரம், ஊர்) ரூ. 250/-.

மூன்று கேள்விகளுக்கு ரூ. 50/-. வேண்டுவோர் கடிதத் தொடர்பு கொண்டு விவரம் அறிந்து பணம் அனுப்பி சகல நன்மைகளும் அடைவீர்களாக. நேரில் - காலை 8 to 12 noon

பிரபல ஜோதிஷர் பண்டித காழியூர் பத்மநாபன்,
"தபோநிதி"
நெ. 5, வித்யோதயா முதல் மெயின் தெரு,
தபெ எண் : 1411, தி.நகர்,
மதராஸ் 600 017. Ph. 826 3814
தென் இந்தியா (கிளைகள் ஏதும் கிடையாது)

*முக்கிய கவனிப்பு : முன் பதிவு செய்து கொள்வது அவசியம். தபால் மூலம் வரும் எல்லா கடிதங்களும் வெகு கண்டிப்பாக பரம இரகசியமாக வைக்கப்படுகின்றன. வீட்டில் கிரகதோஷம் மற்றும் எந்த விதமான தோஷங்களும் பாதிக்காமலிருப்பதற்கு, சுதர்சன ஹோமம், மகா சுதர்சன சக்ரம் பிரதிஷ்டை செய்து தரப்படும். உள்ளூர் வாசிகளுக்கு மட்டுமே செய்யப்படும். நேரிலோ தபால் மூலமோ தொடர்பு கொள்ளலாம்.*

போட்டியும், & அனைவருக்கும் ஒரு தீபாவளிக்கு பரிசும் உண்டே! படியுங்கள்!

# கங்கா ஸ்நானம் ஆச்சா?



மெகா பாக்கெட்

மங்கையர் மலரும், ராகா ஹெர்பல் பவுடர் தயாரிக்கும் நேச்சர் கேர் பிராடக்ட்ஸ் (பி) லிமிடெட் நிறுவனமும் இணைந்து நடத்திய "வழிகாட்டிகள்" முதல் நிகழ்ச்சியில் நீண்ட கருங்கூந்தல் கொண்ட பெண்மணிகள் எண்ணெய் குளியலுக்கு ஒரு சாஷே ஹெர்பல் பவுடர் பற்றாமல் போவதாகவும், அவர்கள் 1½ முதல் 2 சாஷேக்கள் வரை உபயோகிப்பதாகவும் கூறினார்கள். பெரிய சாஷே அறிமுகப்படுத்தலாமே என்று கேட்கப் பட்டதற்கிணங்க ராகா நிறுவனத்தின் நிர்வாக இயங்குனர் திரு. சி.கே. குமாரவேல் அவர்கள் அந்த வழிகாட்டிகள் கூறிய ஆலோசனையை சிரமேற்கொண்டு ஒரு புதிய அதிக அளவு கொண்ட பாக்கட்டை தமிழகத்தில் அறிமுகப்படுத்தி உள்ளார்.

8 கிராம் கொண்ட புதிய எண்ணெய் போக்கக் கூடிய, ஆரோக்ய, நறுமண மூலிகைப் பவுடர் பாக்கட்டை ரூ. 2/-க்கு "புதிய ராகா ஹெர்பல் பவுடர்" என்று சமீபத்தில் இந்நிறுவனம் வெளிக் கொணர்ந்துள்ளது.

சீகக்காய், செம்பருத்தி மற்றும் புங்கங்கொட்டை அனைத்தும் கலந்தது இந்த மூலிகைப் பவுடர்.

— இது நியூஸ். குமார வேலுவிற்கு ஒரே சந்தோஷம். "உங்கள் வாசகி சொன்ன நாள்தான் நான் இந்த 'மெகா பாக்கெட்' அறிமுகப்படுத்தினேன். நல்ல வரவேற்பு இருக்கு. அதற்கு மங்கையர் மலருக்கு (வாசகிகளுக்குத் தான்!) பரிசு தர விரும்புகிறேன்" என்றார். ஒன் றல்ல, இரண்டு வகையான பரிசுகள். (இரட்டைச் சிறப் பிதழ் ஆயிற்றே, அதனாலோ!)

1. இந்தக் கட்டுரை வெளி வந்திருக்கும் பக்கத்தை எடுத் துக் கொண்டு போய் 'ராகா மெகாபவுடர்' உள்ள கடைக் காரரிடம் கொடுங்கள். அவர் உங்கள் தீபாவளி ஸ்நானத் திற்கு இலவசமாக ஒரு பாக்கெட் 'ராகா மெகா பவுடர்' கொடுப்பார். 'ஜெராக்ஸ்' சமாசாரமெல்லாம் கூடாது. இந்தச் சலுகை 1.11.96 லிருந்து தீபாவளியன்று வரைக்கும் உண்டு.

2. இளம் பெண்களுக்காக ஒரு போட்டி —

'என் அழகு/அறிவு/புத்திசாலித்தனத்தால் சமயோஜிதமாக சமாளித்தேன்/சாதித்தேன்!'

என்ற தலைப்பில் ஒரு பக்கத்திற்கு மிகாமல் ஒரு குட்டி அனுபவத்தை எழுதி அனுப்புங்கள். இது இளம் பெண்களுக்காக. கட்டுரைகள் வந்து 'குவிய வேண்டிய' லாரி சேரவேண்டிய கடைசி தேதி 15.11.96. பரிசு :

முதல் பரிசு :
ரூ. 3000/- பெறுமானமுள்ள டூ இன் ஒன் டேப் ரெகார்டர்
இரண்டாம் பரிசு :
ரூ. 2000/- பெறுமான முள்ள வாக்மேன்.
ஆறுதல் பரிசு (ஐந்து பேருக்கு) :
ரூ. 1000 பெறுமானமுள்ள கடிகாரம்.

- கட்டுரைகளை மங்கையர் மலருக்கு அனுப்புங்கள்.
- தபால் கவரின் மீது 'மங்கையர் மலர் - ராகா கட்டுரைப் போட்டி' என அவசியம் குறிப்பிடவும்.
- இருபத்தைந்து வயதுக்குட் பட்டவர்களுக்கு மட்டுமே இப் போட்டி. எனவே 'நான் இருபத்தைந்து வயதுக்கு உட்பட்டவள்' என்று ஒரு உறுதி மொழியை கட்டுரை முடிவில் எழுதி கையெழுத்துப் போட்டு விடுங் கள்ளேன்.
- போட்டியின் முடிவுகளைப் பொறுத்தவரை ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.


• சி.கே. குமாரவேல்

“உங்களின் எழில் மேனியை அலங்கரிக்க
வருகிறது அலங்கார ஆடைகளின் அணிவகுப்பு.”



கண்கவரும் இந்த
ஆடைகளின் அணிவகுப்பில்
உங்கள் மனதுக்கு பிடித்த

- சுரிதார்கள்
- நைட்டீஸ்
- பேண்டீஸ்
- பிராக்கள்
- கைக்குட்டைகள்
- உள் பாவாடைகள்

ஆகியவற்றை
தேர்ந்தெடுக்க வாருங்கள்.




ஹரிப்பிரியா

பெண்களின் பிரத்யேக ஆடை உலகம்.
III, முதல் மாடி, கச்சேரி சாலை,
மயிலாப்பூர், சென்னை - 4. போன் : 4942368

இது ஒரு ஹரி ஏஜென்சியின் அங்கம்.

IMAGEADS

# பணத்திற்கு கால்கள் இல்லை. ஆனால் அதையே நடக்க வைக்கும் எங்கள் திறமை.



நீங்கள் கடுமையாக உழைத்து சம்பாதித்த ஒவ்வொரு காசையும் உங்களுக்காக, உங்களது வளமான எதிர் காலத்திற்காக உழைக்க வைப்பதையே தனது குறிக்கோளாகக் கொண்டது 'ஷாஸன் ஃபைனான்ஸ்'. 20 வருட அனுபவமும், ரூ.100 கோடிக்கு மேல் வியாபாரமும் உடைய 'ஷாஸன் குரூப்'பின் ஒரு அங்கமான 'ஷாஸன் ஃபைனான்ஸ்'ஸில் முதலீடு செய்வதன் மூலம் உங்கள் பணம் நம்பகமான, பாதுகாப்பான கைகளைச் சென்றடைகிறது. ஏனெனில் அனுபவச் செறிவும், இளமையின் துறுதுறுப்பும் உடைய எங்களால் பணத்தைப் பெருக்குவதற்கான வாய்ப்புகளையும், பாதுகாப்பையும் அளிக்க முடியும். இதனை உறுதி செய்யும் வகையில், அசலைத் திருப்பிக் கொடுப்பதிலும், உரிய நேரத்தில் வட்டி வழங்குவதிலும் போதிய பாதுகாப்பிற்கு CARE நிறுவனத்தாரின் மதிப்பீடு பெற்றுள்ளது 'ஷாஸன் ஃபைனான்ஸ்'. சேவையிலாகட்டும், உத்திரவாதத்தை உறுதி செய்வதிலாகட்டும் தனது வாடிக்கையாளர்கள் எப்போதும் சிறந்தவற்றையே பெறுதல் வேண்டும் என்பதில் உறுதியான நம்பிக்கை கொண்டது 'ஷாஸன் ஃபைனான்ஸ்'.




## ஷாஸன் ஃபைனான்ஸ் லிமிடெட்

**நிர்வாக அலுவலகம் :** 21, கோபால கிருஷ்ணா ரோடு, தி.நகர், சென்னை - 600 017.
போன் : 8281138, 8250503

**டெபாசிட் மையம் :** 2, துரைசாமி ரோடு, தி.நகர், சென்னை - 600 017. போன் : 4347128, 4346930, 4348931. **கோயம்புத்தூர் :** சேரன் டவர்ஸ், 60/27, முதல் மாடி, அரசு கலைக் கல்லூரி ரோடு, கோயம்புத்தூர் - 641 018. போன் : 201256. **பாண்டிச்சேரி :** 2வது மாடி, 80, காமராஜ் சாலை, பாண்டிச்சேரி - 605 011 போன்: 46347 **திருச்சி :** 5வது மாடி, கணேஷ் காம்ப்ளெக்ஸ், நெ.6-A, லாஸன்ஸ் ரோடு, கண்டோன்மெண்ட், திருச்சி - 620 001. போன்: 465168 **மதுரை :** ஜூலைஹா டவர், 67 மேற்கு டவர் தெரு, மதுரை - 625 001. **சேலம் :** 5/271B, ஜங்ஷன் மெயின் ரோடு, முதல் மாடி, ஜந்து ரோடு, சேலம் - 636 004. போன்: 443012 **கொச்சி :** பினினஸ் கம்யூனிகேஷன் சென்டர், சிராமல் சேம்பர்ஸ், குரிஷிபள்ளி ரோடு, ரவிபுரம், கொச்சி -682 015. போன் : 365492, 369627. **பெங்களூர் :** பிரனெவ் காம்ப்ளெக்ஸ், நெ.3, 5வது கிராஸ், மல்லேஸ்வரம், பெங்களூர் -560 003.

### வாடிக்கையாளரின் திருப்தியே எமது முயற்சியின் குறிக்கோள்

சட்டபூர்வமான ஃபிக்ஸட் டெபாசிட் விளம்பரம் 8.7.96 தேதியிட்ட "நியூஸ் டுடே" மற்றும் "மாலை மலர்" நாளிதழ்களில் வெளியிடப்பட்டுள்ளது.

ImageM-449 C

# தீபாவளி பட்சணம் செய்யலாமா?

• பௌசி



## பாதாம் பூரி

*தேவையான பொருட்கள் :*

மைதா - ½ கிலோ,
டால்டா - 125 கிராம்,
சமையல் சோடா - 1 சிட்டிகை,
புளித்த தயிர் - ½ கப்,
சர்க்கரை - ½ கிலோ,
கேசரி கலர் துளி
ரிஃபைண்ட் ஆயில் - ¾ கிலோ.

*செய்முறை :*

மைதா, டால்டா, சம அளவு தண்ணீர், தயிருடன் சோடாவையும் கலரையும் கலந்து கொண்டு சப்பாத்தி மாவு போல பிசைந்து கொள்ளவும். அடித்துப் பிசையக் கூடாது. சிறு சிறு உருண்டைகளாக்கி முக்கோண வடிவில் மடித்துக் கொண்டு எண்ணெயில் பொரித்து எடுத்துக் கொள்ளவும்.

சர்க்கரை இளம்பாகு (தக்காளி பதம்) செய்து பாகில் பாதாம் பூரிகளை ஐந்து ஐந்து நிமிடம் ஊற விட்டு அகலமான டிரேயில் ஜோடித்துக் கொள்ளவும். குறைந்த சாமானில் நிறைய கணிசம் காணுகிற எல்லாருக்கும் பிடித்த இனிப்பு இது.

## சிக்கி

2 கப் வறுத்துத் தோல் உரித்து ஒன்று ரெண்டாக உடைத்த வேர்க்கடலை.
சம அளவு சர்க்கரை,
½ மூடி எலுமிச்சம் பழம்,
நெய் மூன்று ஸ்பூன்.
(தோசைக் கல்லையும் குழவியையும் நெய்யால் தடவ)

சர்க்கரையை வெறும் வாணலியில் வறுத்து பழுப்புக் கலர் வந்ததும் எலுமிச்சம் பழத்தைப் பிழிந்து கொள்ளவும். சர்க்கரை கரைகிற போதே வேர்க்கடலையைப் போட்டுக் கிளறி தோசைக் கல்லில் போட்டு அவசர அவசரமாகக் குழவியால் திரட்டிப் பலகைகளாக்கிக் கொண்டு வில்லை போட்டு விடவும். இறுகி விட்டாலும் கவலையில்லை. மீண்டும் அடுப்பில் வைத்து இளக்கிக் கொள்ளவும். இது குழந்தைகள் விரும்பும் சிக்கி.

## பழ பாசந்தி

*தேவையான பொருட்கள் :*

பால் - 3 லிட்டர்,
சாரைப் பருப்பு - 25 கிராம்,
முந்திரிப் பருப்பு - 25 கிராம்,
மலைவாழைப்பழம் அல்லது புளிப்பில்லாத வேறு வாழைப்பழம் - 6,
(பூவன் வேண்டாம்)
சர்க்கரை - 1 டம்ளர்.

*செய்முறை :*

பாலைக் குறுக வைக்கவும். அகலமான வாணலியில், ஆடை படியப் படிய இன்னொரு பாத்திரத்தில் எடுத்துச் சேகரிக்கவும். திரியும் ஆடையுமாக சுமார் ¾ லிட்டர் கெட்டி விழுது கிடைக்கும். வாணலி அடியில் திரட்டுப் பாலாக கால் லிட்டர் தேறும். டம்ளர் சர்க்கரையைப் போட்டு கெட்டிப் பால் தளர்ந்து கொதிக்கும் போது உரித்த வாழைப்பழத் துண்டுகளைப் போட்டுக் கொள்ளவும். பாத்திரத்தில் சேகரித்த பாஸந்தி விழுதையும் சேர்த்துக் கொள்ளவும். முந்திரி

பிறந்த நாள் கேக் தயாரிக்கும் போது 'க்ரீம்'ற்குப் பதில் 'ஜாம்'ஐ கோனில் அடைத்து (மெஹந்தி டிசைன் போல்) மேலே அலங்கரித்தால் வித்தியாசமாக இருக்கும். அத்துடன் 'ஜெம்ஸ்' மிட்டாய் களை கலர் கலராக பதித்தால் கவர்ச்சியாக இருக்கும். குழந்தைகள் குதூகலத்துடன் சாப்பிடும்.

— ஹலீமா ஹாஜிபீர்



சாரைப் பருப்புகள் உடைத்துப் பச்சையாகப் போடவும். பக்குவமான விலையுயர்ந்த இனிப்பு இது.

வில்லை போடவும்.

சொட்டு நெய் கூடத் தேவைப்படாது. பார்க்க அழகான மிருதுவான இனிப்பு இது.

## ஃப்ரூட் ஹல்வா

*தேவையான பொருட்கள் :*

கெட்டியான அதிகம் பழுக்காத வாழைப்பழம் – 5,
ஆப்பிள் சுமார் சைஸ் – 2,
பைனாப்பிள் – 4 வில்லை,
திராட்சை – 100 கிராம்,
சர்க்கரை – 4 டம்ளர் அல்லது மொத்தப் பழக்கூழுக்கு 2 பங்கு,

பழக்கூழோடு சர்க்கரையும் போட்டுக் கிளறி ஒட்டாமல் வரும்போது நெய் விட்டு இறக்கவும். (திராட்சைக் கூழில் கொட்டையை வடிகட்டிக் கொள்ளவும் பிரத்யேகமாக) ஹல்வா மேல் பச்சை முந்திரித் தூவலை உதிர்த்து விடலாம்.

## க்ரீன் கேக்

*தேவையான பொருட்கள் :*

மைதா – 1 டம்ளர்,
பால் பவுடர் – 1 டம்ளர் (கலந்து தயாராக வைக்கவும்),
சர்க்கரை – 2½ டம்ளர்,
க்ரீன் கலர்

*செய்முறை :*

சர்க்கரையைப் பாகு வைத்துக் கொள்ளவும். கம்பிப் பாகு பதத்தில் மைதா பால் பவுடர் கலந்ததைக் கொட்டிய நிமிடமே அடுப்பை அணைத்து விடவும். வாணலியைக் கீழிறக்கி குழம்பாக இருக்கும் கலவையில் க்ரீன் கலர் சேர்த்துக் கைவிடாமல் கிளறி விடவும். வெள்ளைக் குமிழிகள் வரும்போது தட்டில் கொட்டி

## ரஸ்மலாய்

*தேவையான பொருட்கள் :*

200 கிராம் ரஸகுல்லா பாக்கெட்,
சர்க்கரை – அரை கிலோ,
பால் – 2 லிட்டர்,
பாதம் – 2,
கசாகசா – 3 ஸ்பூன்.

*செய்முறை :*

ரஸகுல்லா டிமடீ பாக்கெட் (200 கிராம்) வாங்கி ரஸகுல்லாவை தட்டை தட்டையாகச் செய்து கொண்டு சர்க்கரை நீரில் அரை மணி நேரம் ஊறவிடவும். பாலைச் சுண்ட காய்ச்சிக் கொண்டு இரண்டு பாதம் பருப்பு, கசகசா 3 ஸ்பூன் ஊறவைத்து அரைத்துக் கலக்கவும். ரஸமலாயை சத்துப் பாலில் மிதக்க விட்டு ஒரு டம்ளர் சர்க்கரை ஸிரப்பைக் கலந்து விடவும்.

## பாதம் பர்ஃபி

*தேவையான பொருட்கள் :*

பாதாம் - 50 கிராம்,
முந்திரி பருப்பு – 200 கிராம்,
ஒரு டீஸ்பூன் நல்ல நெய்,
சர்க்கரை – ½ கிலோ

*செய்முறை :*

பாதாம், முந்திரி இரண்டையும் சூடான வெந்நீரில் ஊறவைத்துக் கொள்ளவும். அரை மணி கழித்து இறுத்து விட்டு பாதாம் தோலை உரித்துக் கொள்ளவும். பாதாம் முந்திரி இரண்

டையும் பால் விட்டு மிக்ஸியில் அரைத்து விழுதாக்கிக் கொள்ளவும். அரைத்த விழுதை டம்ளரில் அளந்து ஒன்றுக்கு இரண்டே கால் சர்க்கரை போட்டுக் கொள்ளவும். எல்லா வற்றையும் ஒன்றாகவே கிளறி விடவும். கலவை குழம்பாக இருக்கும்போதே அடுப்பை அணைத்து விட்டுக் கீழே இறக்கி விடாமல் கிளறவும். சீராகக் கிளறியபின் கலவை பக்கங் களை விட்டு விலகிக் குமிழிட்டு வரும். அப் போது நெய் தடவிய தட்டில் கொட்டி விட வும். ஆறியபின் கேக்குகளாக கத்தியால் கீற முடியும். சுவையான அழகிய பாதாம் கலரில் தெவிட்டாமல் இனிக்கும் இந்த ஸ்வீட்.

## லட்டு

*தேவையான பொருட்கள் :*

கடலை மாவு - 2 டம்ளர்,
சர்க்கரை - 5 டம்ளர்,
கலர் - ஒரு சிட்டிகை,
ஆயில் வேண்டிய அளவு,
முந்திரி திராட்சை - 50 கிராம்,
பச்சை கற்பூரம் - துளி,
கிராம்பு - 6.

*செய்முறை :*

கடலை மாவை கலர் சேர்த்து பஜ்ஜி மாவு போல் கரைத்துக் கொள்ளவும். சர்க்கரையைக் கம்பிப் பாகாக வைத்து இறக்கிக் கொள்ளவும். கடலை மாவை பூந்திக் கரண்டியில் தேய்த்து பூந்திகள் உப்பி வரும்போதே (கரகரவென்று ஆகுமுன்) தயாராக இருக்கும் சர்க்கரைப் பாகில் போட்டு விடவும். எல்லா பூந்தியும் பாகில் போட்டபின் முந்திரி திராட்சை கிராம்பு பச்சை கற்பூரம் சேர்த்துப் பிடித்து வைக்கவும்.

'குஞ்சாலாடு' எனப்படும் லட்டு மிகச் சொற்ப செலவில் கிடைக்கும் சுவையான உடம்புக்குத் தீங்கு செய்யாத இனிப்பு. பெங்களூரில் 'மௌனி' லட்டு ரொம்பவும் பிரசித்தம். லட்டு மட்டும் தீபாவளி சீசனில் சுமார் 800 கிலோ செலவாகிறதென்று 'மௌனி' தெரிவித்தார்.

**- மாலதி**

## பால் பாயசம்

*தேவையான பொருட்கள் :*

சாதம் - 1 டம்ளர்,
மில்க் மெய்ட் - 1 டம்ளர்,
சர்க்கரை - ½ டம்ளர்,
ஏலக்காய் - 2,
குங்குமப்பூ - துளி,
பால் தேவையான படி ஒன்றரையிலிருந்து இரண்டரை டம்ளர் வரை.

*செய்முறை :*

பண்ணிய சாதத்தில் 1 டம்ளர் சாதத்தை மிக்ஸியில் கூழாக அடித்துக் கொள்ளவும். மில்க் மெய்ட் சர்க்கரை கலந்து கொதிக்க விடவும். கெட்டியாக வேண்டுமானால் 1½ டம்ளர் பால் விட்டால் போதுமானது. குங்குமப்பூ ஏலம் போட்டு விட்டால் மணக்கும். சிக்கல் இல்லாத எல்லாருக்கும் பிடித்த இனிப்பு இது.

## பால் பாயசம் (10 பேருக்கு)

200 கிராம் சீரக சம்பா அரிசியை கல்லில் லாமல் சுத்தம் செய்து, சிறிது நெய்விட்டு வாண லியில் பொன் வறுவலாக வறுத்து, மிக்ஸியில் காலரையாக உடைத்து வைத்துக் கொள்ளுங் கள்.

2 லிட்டர் கெட்டியான நல்ல பாலை ஸ்டவ்வில் வைத்து உடைத்து வைத்துள்ள அரிசியை அதில் போட்டு நிதானமான தீயில், அடி பிடித்து விடாமல் ½ மணி நேரம் கிளறிக் கொண்டே இருங்கள்.

பால் பாதி அளவாக சுருங்கியபின், 400 கிராம் சர்க்கரையை அதில் போட்டு, ½ டின் மில்க்மெய்ட் விட்டு, 2 டீஸ்பூன் பாதாம் பவுடரையும் ½ டீஸ்பூன் ஏலக்காய்ப் பொடி யும் போட்டு, 5 நிமிடம் ஸ்டவ்வில் வைத்து இறக்கி விடுங்கள். மலையாளிகளே மெச்சு கின்ற பால் பாயஸம் தயார்!

**- மௌனி**

**தீபாவளிக்கு ரவா கேசரி, சேமியா கேசரி, அவல் கேசரி செய்யும் பொழுது வெள்ளரி விதை சேர்த்தால் வித்தியாசமான சுவையோடு இருக்கும்.**

**- ஆர். மீனாட்சி**



"இங்கேதானே பூலான்தேவி இருந்தான்?" என்று கேட்டேன்.

தலையசைத்தார் அவர்.

"சம்பல் கொள்ளைக்காரங்க இன்னும் இருக்காங்களா?" என்றேன் பயத்துடன்.

''எல்லோரும் தொழிலை விட்டு பல வருஷம் ஆச்சே" என்றார் புன்சிரிப்புடன்.

''என்ன ஊர் இது? பத்து வீடுகளே கொண்ட கிராமம். பக்கத்து கிராமத்துக்குப் போறதுன்னா கூட கஷ்டப்படுத்தற குண்டுங் குழியுமான ரோடு. ஐயையோ, என்ன முதுகுப் பக்கம் துணியே காணோம் அந்தப் பொண்ணு ஜாக்கெட்டுல" என்றேன் வியப்புடன்.

"இந்தப் பக்க மக்களோட உடை இதுதான்" என்றார்.

ஜீப் டிரைவருக்குத் தமிழ் தெரியாததாகையால் புரியாமல் திரும்பித் திரும்பி பார்த்தபடி ஓட்டினார்.

"டவுன் பஸ் ஒண்ணு கூட காணோம்?"

"என் அருமை இளம் மனைவியே, அதெல்லாம் தமிழ்நாட்டோட சரி. மத்தியப்பிரதேசத்துல, அதுவும் இந்த மாதிரி கிராமங்களை இணைக்கிற போக்குவரத்து ஜீப்தான்."

செவன் ஓ கிளாக் பிளேடு விளம்பரத்தில் காண்பிப்பது போல குதித்து குதித்து ஓடியது ஜீப். முதுகு கழண்டு விடும்போலிருந்தது.

"கிராமத்து பொம்பளைங்க வயிறு தெரியற மாதிரி உடை அணியறாங்களே, நிறைய ஜொள் விட்டீங்களா பிரம்மச்சாரி லைஃப்ல?"

''சேச்சே, கல்யாணத்துக்கப்புறம்தான் ஜொள் எல்லாம்."

"என்ன?"

"உன்னிடம்னு சொல்ல வந்தேன் அதோ பாரு. புகை வருதே வெள்ளையாய், அதான் எங்க தொழிற்சாலை. பக்கத்துலேயே டவுன் ஷிப்" என்று காண்பித்தார்.

'சொனாரி சிமெண்ட் ஃபாக்டரி' பெயர்ப் பலகை வரவேற்க, செக்யூரிடி கேட் தாண்டி ஜீப் உள்ளே நுழைந்தது.

''எப்படியிருக்கு?'' என்றார் வீட்டின் உள்ளே நுழைந்ததும்.

"உடம்பெல்லாம் வலிக்குது" என்றேன்.

"நான் வீட்டைப் பற்றி கேட்டேன்."

நன்றாய் வைத்திருக்கிறார். சோபாசெட், டீவி, திரைச் சீலைகள், சுவரில் அழகான போஸ்டர் ஒன்று 'ஹாய், வெல்கம்' என்றது.

"டவுன் ஷிப்புல எத்தனை வீடுங்க?"

"மூன்னூறு!" என்று சொல்லும்போதே வாசலில் காலிங்பெல் அழுக்குவது கேட்டது.

பைட்டோ ஜி, ஆவோ ஜி என்று ஜிஜி மட்டும் புரிய இந்தியில் பேசிக் கொண்டார்கள் என் கணவரும், ஒரு பெண்மணியும்.

"கலா, இவங்க மாடியிலே இருக்காங்க. பீகாரி" - பெயரா இல்லை ஊரா?

வற்றல், தொற்றலாய் கருப்பாய் இருந்த வளின் முகத்தில் கோல்கேட் பசை சிரிப்பு மட்டும்தான் பார்க்கும்படி இருந்தது.

புஸ், புஸ் என்று பேசியபடி அருகில் வந்து முகத்தைத் தடவினாள். மசாலா வாசனை அடித்தது.

"ஹிந்தி மாலூம்?"

# ஏக், தோ, தீன்



"மாலாது" என்றேன் சிரிக்காமல்.

கோன் ஹைஈ, ஹிதர், உதர் என்று உதார் விட்டு விட்டுச் சென்றாள்.

"இந்தா பால். சூடாய் ஈ. போடு" என்று நீட்டினார் பாத்திரத்தை.

ஃப்ரிட்ஜ் ஜில்லிப்புடன் இருந்தது பால்.

கல்யாணமான அடுத்தவாரமே கணவருடன் தனிக்குடித்தனம் வந்தாகிவிட்டது. ஒன்று விட்ட அத்தை பையன்தான் இவர்.

என் கழுத்தில் தாலி விழவே காத்திருந்தது போல பாட்டி எமலோகம் செல்ல முடியாமல் படுக்க 'முன்னே பின்னே தெரியாத பையனா பயப்பட' என்று தனியாகவே அனுப்பி விட்டார்கள் 'அத்தை மகன் ரத்தினத்துடன்.'

ஊர் இப்படி ஒரு காட்டுக்குள் இருக்கும் என்று சத்தியமாய் எதிர்பார்க்கவில்லை நான்.

டவுன்ஷிப்புக்குள் வசதியான விஞ்ஞான கருவிகளுடன் மக்கள். வேலி தாண்டி விட்டால், மண்சுவர், ஓட்டு வீடு, வயல் வேலை என்று படிப்பறிவில்லாத, அடிப்படை வசதி கூட இல்லாத ஜனங்கள்.

அடுத்த நாளே அவர் ஆபீஸ் சென்று விட தனிமை அரக்கனிடம் மாட்டிக் கொண்டேன்.

டீவியைத் திறந்தால் இந்தி. வெளியே யார் பேசினாலும் இந்தி. ஏதோ வெளிதேசத்துக்கு வந்து விட்டது போலிருந்தது.

# கிருஷ்ணா

"வாலாமா?" என்று திடீர் தமிழுடன் உள்ளே நுழைந்தவளை 'டினோசர்' அதிசயமாய் பார்த்தேன்.

"என் பெயர் கமலா" என்று உரிமையுடன் உள்ளே வந்தாள்.

இங்கு மொத்தம் இரண்டு தமிழ் குடும்பங்கள் என்று சொல்லியிருந்தார் அவர்.

"எப்படி ஊர்? புடிச்சிருக்கா?"

"ம்!" என்றேன். என்னத்தை சொல்ல?

"கம்மா ரீல்! நான் மூணு மாசமாய் அலைப்பைப்படறேனே. பேச்சு வருமா, வராதான்னு கூட பயந்துடுவேன் சில சமயம். இவர் ஆபீஸ் முடிஞ்சு வந்தால்தான் வாயைத் திறந்து நாலு தமிழ் வார்த்தை பேச முடியும்."

நான் மரியாதைக்கு சிரித்து வைத்தேன்.

"முடிவு பண்ணிட்டேன். அடுத்த வாரம் ஊருக்குப் போறேன். என்னாலே இந்த இடத்துல இருக்க முடியாதும்மா. என் வீட்டுக்





# பொன்னை விரும்பும் பூமியிலே, ஈஸ்வர் பண்ணை வீட்டை ஏன் பலரும் விரும்புகின்றனர்?



மதுரைக்கு மிக அருகில் சுமார் 5000 ஏக்கரில் ஈஸ்வர் ஓர் எழில் கொஞ்சும் சோலையை உருவாக்கி வருகிறது.

இந்த சோலையில் 10,000 ச.அடி நிலமும், வளம் பெருக்கும் மா, பலா, தேக்கு மற்றும் அதிக லாபம் ஈட்டும் காய்கறிகளும் பழங்களும் பயிரிட்டு, 20 ஆண்டுகளுக்கு பராமரிக்கப்படும்.

ஈஸ்வரின் நிர்வாக திறன், வேளாண் நிபுணர்களின் உதவி, மிக உயரிய வேளாண் தொழில் நுட்பம் ஆகியவை இந்த சோலையை காப்பியங்களில் காணும் உதாரணங்களுக்கு ஈடாக அமைக்கும்.

இங்கே குயில்கள் பாடும், இன்ப இளந்தென்றல் உங்களை காதலோடு அரவணைக்கும், பல பசுமையான மரங்கள் கவிதை பாட வைக்கும், இத்தகைய சோலையில் ஒரு பண்ணை வீடு அமைத்து உங்கள் மகிழ்ச்சியையும், முதலீட்டையும் பெருக்குங்கள்.

## ஈஸ்வர்-இன் பொன் விளையும் திட்டங்கள்:

| உங்கள் முதலீடு | நீங்கள் பெறுவது | 20 ஆண்டுகளில் மதிப்பு |
|---|---|---|
| ரூ.25,000/- அல்லது ரூ.250/- வீதம் 100 சுலப தவணைகள் | 10,000 ச.அடி நிலம் | ரூ.10 லட்சம் |
| | 24 தேக்கு மரங்கள் | ரூ.24 லட்சம் |
| | 2 ஒட்டு மா | ரூ.50,000 |
| | 2 வீரிய தென்னை காய்கறி தோட்டம் | ரூ.50,000 |

**20 ஆண்டுகளில் ரூ.35 லட்சம் மதிப்பு சொத்துக்கள்**

* 10,000 ச.அடி நிலம் உடன் உங்கள் பெயரில் பதிவு செய்யப்படுகிறது. * அற்புத தொழில் நுட்ப விந்தை. * சிறந்த நீர் வளம், மண் வளம், பயிர் வளம். * சில ஆண்டுகளில் உங்கள் நிலம் மதுரை நகரின் மையமாகி விடும். * பண்ணை வீடுகளும் கட்டிக்கொள்ளலாம்.

**ரூ.100/-வீதம் 15 மாதங்கள் செலுத்தி லட்சம் பெறும் திட்டங்களும் உள்ளன.**






ESWAR GROW-TEK LTD

287, West Masi Street, Madurai - 625 001.
Ph: 540843, 540305. Fax: 0452 - 540305. Telex: 0445 - 478 AGRI-IN.

***பசுமை வளம் நிறைந்த இந்தியாவை உருவாக்குவோம்.***

எங்கள் கம்பெனி (ஈஸ்வர்), சென்னையை சார்ந்த ஈஸ்வரி குரூப் ஆப் கம்பெனிகளுக்கு எந்த விதத்திலும் தொடர்பு இல்லையென்று தெரிவித்துக் கொள்கிறோம்.

FIN-HANS R K SWAMY/BBDO

காரரிடம் கறாராய் சொல்லிட்டேன். வேலையை ராஜினாமா பண்ணிட்டும். நம்ம ஊரிலே கூழோ, கஞ்சியோ தமிழ் பேசிக்கிட்டே குடிக்கலாமே."

என் பயத்தை நன்கு விசிறி விட்டுப் போய் விட்டாள்.

அட்சரம் புரியாத மொழி. தூத். கானா, மானா என்று பல்லை உடைத்தது இந்தி. வந்த இரண்டு, மூன்று நாளிலேயே பல வருஷமாகி விட்ட பிரமை.

"என்ன, அந்த கமலா ரொம்ப பயமுறுத்திட்டாளா? ஊர் ஞாபகம் வந்துடுச்சா உனக்கும்?" என்றார் அந்த வார ஞாயிற்றுக் கிழமை காலையில்.

"பைத்தியம் பிடிச்சுடும் போலிருக்கு. கையிலே காசிருந்தும், எந்தப் பொருளும் தனியாய் போய் வாங்க முடியலே. எங்க வீட்டுலே மாச சாமான் முழுதும் நான்தான் வாங்குவேன் தெரியுமா?"

என் அருகில் வந்து கனிவுடன் கையைப் பிடித்தார்.

"நீங்களும் தமிழ்நாட்டுலேயே வேற வேலை தேடிக்க முடியாதா?" என்றேன் ஏக்கமாய்.

"உன் கஷ்டம் புரியுதும்மா. நானும், வேலை கிடைச்சு வந்த புதுசுலே இப்படித்தானே தவிச்சேன்."

அட, கரெக்ட்தான்!

"உனக்காவது துணைக்கு நானிருக்கேன் இப்ப. ஆனால், நான் வந்தபோது, நானே எனக்கு எல்லாம்."

"உண்மைதான்."

"மாறுதலை எப்பவுமே நம்ம மனசு சட்டுனு ஒத்துக்காது. அது உணர்ச்சி சம்பந்தப்பட்டது. அறிவுபூர்வமாய் யோசி. பாஷை ஒன்றைத் தவிர இங்கே வேற என்ன பிரச்சினை? நினைச்சா, ஒரே மாசத்துல கத்துக்க முடியாதா? எதுக்குமே ரெண்டு கோணமிருக்கு. இங்கே உள்ள மற்ற ப்ளஸ் பாயிண்டுகளைப் பற்றி நினைச்சுப் பார்."

அன்று முழுதும் அவர் சொன்னவைகளே மனசில் ஓடியது.

தண்ணி கஷ்டம், ஜன நெரிசல், பந்த், ஊர்வலம், மெஷின்தனமான வாழ்க்கையை வாழ்ந்துட்டு, திடீர்னு இப்ப அது எதுவுமே இல்லாத அமைதியான சூழல்!

காட்டாறு மாதிரியான பட்டணத்து வாழ்க்கையை விட்டுட்டு சிற்றோடை மாதிரி சலசலக்கற வாழ்க்கை இது.

அடுத்த நாள் காலையில் கண்விழித்ததும் டீ கேட்டார் குடிக்க.

"ஏக் மினிட்! சாய் வில் பி ரெடி இன் தோ மினிட்ஸ்" என்றேன்.

"என்ன, என்ன?" என்றார் வியப்பாய்.

"ஏக், தோ, தீன்" என்று பாடியபடியே மாதுரி தீட்சித் ஸ்டைலில் டீ டம்ளரை நீட்டினேன்.

"அந்தக் கடைசி நாட்கள் நெருங்கியபோது, கமலாவிடம் ஒருவித மாற்றத்தைக் கண்டேன்.... யாரோ தன்னை அழைப்பதாகவும், ஏதோ ஓர் உருவம் அறையில் நடமாடுவதாகவும் அடிக்கடி என்னிடம் சொன்னாள். அப்படி ஒன்றும் என் கண்ணில் தெரியவில்லை.

(1936) பிப்ரவரி இருபத்தெட்டாம் நாள் அதிகாலையில் (கமலா) தன் இறுதி மூச்சை விட்டாள்... இந்திராவும் அருகில் இருந்தாள்....

சுவிட்சர்லாந்தில், பக்கத்து ஊரிலிருந்த சில நண்பர்கள், செய்தி அறிந்து விரைந்து வந்தனர். அண்மையிலிருந்த லாசன் என்னும் ஊருக்கு அவளை எடுத்துக் கொண்டு போய் எரியூட்டினோம். எந்த முகம் என்னைப் பார்த்து அடிக்கடி புன்னகைக்குமோ, அந்த அழகு முகம், அந்த அழகு உடல், சில நிமிடங்களில் சாம்பலானது. ஒளியுடனும், சுறுசுறுப்புடனும், ஜீவசக்தியுடனும் இயங்கிய அந்த மெல்லுடலின் மிச்சம், ஒரு சிறிய கலசத்துள் அடங்கிக் கிடந்தது."




# அன்னையர் இருவர்




'டிஸ்கவரி ஆஃப் இந்தியா' என்ற புகழ்பெற்ற தனது நூலில், கமலா அன்னையின் பிரிவு பற்றி இந்த இதயம் பிழிக்கும் வரிகளை எழுதி வைத்துள்ளார் ஜவஹர்லால் நேரு.

1935 செப்டம்பரில், சுவிஸ் நாட்டு லாசனை அடுத்த 'சானடோரி'யத்தில் கமலா சிகிச்சை பெற்றுக் கொண்டிருந்தார். உடல்நிலை மோசமாகவே, செய்தி தெரிவிக்கப்பட்டது நேருவுக்கு. இமயமலைச்சாரலில் அல்மோராவில் அவர் சிறையிருப்பு. திடீரென தாற்காலிக விடுப்பில், ஐரோப்பா செல்ல ஆங்கில அரசு அனுமதி அளிக்க, லாசனுக்குப் பறந்து சென்றார் நேரு. ஆறு மாத காலம் மனைவிக்குப் பணிவிடை செய்து, உயிர் பிரியும் போதும் அருகில் இருந்தார் ஆசிய ஜோதி.

அக்டோபர் நவம்பர் மாதங்கள் வந்தால், எந்த இந்தியரும் நேருவின் குடும்பத்தை நினைக்காமல் இருக்க முடியாது. நேரு, இந்திரா, ராஜீவ், சஞ்சய், சோனியா, மேனகா என்ற அறுவரைப் பற்றி அறிந்திருக்கும் அளவுக்கு, இளைய தலைமுறையினர், மோதிலால் நேரு, சொரூப ராணி, கமலா நேரு பற்றி அறிய வாய்ப்பில்லை. இந்திய விடுதலை வரலாற்றை விரும்பிப் படிப்பவர்கள் மோதிலாலைப் பற்றி அறிந்து கொள்ள முடியும். சொரூபராணியாரைப் பற்றி விரிவான செய்திகள் பதிவு செய்யப்படவில்லை.

1899 ஆகஸ்ட் முதல் நாளில் பிறந்த கமலா அன்னை இந்திய விடுதலைப் போரில் தீவிர பங்கேற்றார். உண்மை, துணிவு, திடசித்தம், தற்தியாகம் அவரது சிறப்புப் பண்புகள். ஆங்கில ஆதிக்க எதிர்ப்பில் ஈடுபட்ட கணவர் நேருவுக்கு உறுதுணையாக இருந்ததோடு, தன்னையும் அப்புனித வேள்வியில் ஈடுபடுத்தினார். காந்தியடிகளின் தண்டி யாத்திரையைத் (1930)

தீபக்கோலம்



17 புள்ளி 13 வரிசை
13 ல் நிறுத்தவும்
– ஹேமா
கோதண்டராமன்

தொடர்ந்து உண்டான விழிப்புணர்வுடன் ஒத்துழை யாமை இயக்கத்தில் பங்கேற்றார். சீரற்ற உடல்நிலை இருந்தாலும், அன்னியத் துணி எதிர்ப்பு, மது பானக்கடை மறியலை தலை மையேற்று நடத்தி, அலகாபாத் பொதுக் கூட்டத்தில் உரையாற்றிய போது, போலீசின் தடியடி ஏற்றார். அப்பொழுது அவர் அலகாபாத் காங்கிரஸ் கமிட்டியின் தலைவர்.

1931 ஜூலை 31-ல், தடைசெய்யப்பட்ட காங்கிரஸ் அறிக்கையைப் பொது இடத்தில் வாசித்த குற்றத்துக்காக, கைது செய்யப்பட்டு, லக்னோ மத்திய சிறையில் அடைக்கப்பட்டார்.

மதசார்பற்ற கொள்கையில் பற்றுறுதி கொண்டாலும், ஆன்மீகத்தில் வழுவாதிருந்தார். நல்ல மனைவியாக, சிறந்த தாயாக விளங்கி, பெண்ணுரிமைக்கு முன்னுரிமை கொடுத்து வாழ்ந்தார். பெண்ணும் ஆணும் நிகர் என்ற ஆழ்ந்த கருத்தும், பெண்கல்வியின் அவசியமும், பெண்களுக்குப் பொருளாதார சுதந்திரம் வேண்டும் என்ற கொள்கையும் அவர் எழுதிய கடிதங்களில் மீண்டும் மீண்டும் வலியுறுத்தப்பட்டன. மென்மையான – மெலிந்த – உடலிலும் வலுவான உள்ளத்தைக் கொண்டவர். ஆடம்பரத்திலும் சுகபோக வளர்ப்பிலும் வாழ்ந்தபோதிலும், துன்பத் துயரை மகிழ்வுடன் ஏற்றவர். நாட்டுநலன் கருதி வீட்டு நலனும் உடல்நலனும் பேண நேரமில்லாதவர்.

ஜவஹர்லால் நேரு, இந்திரா காந்தி என்ற இரு தீபங்களும் பாரதத்தில் சுடர்விட வேண்டித் தன்னைத் தீக்குச்சியாக்கிக் கருக்கிக் கொண்டவர்.

அந்தப் பெருமாட்டியை, தன்னலம் துறந்த அன்னையை, விடுதலை வீராங்கனையைப் பெருமைப்படுத்தும் வகையில், அவரது 75 ஆம் பிறந்த நாளில், நமது அரசு, 1974 ஆகஸ்ட் 1ல் ஓர் அழகான நினைவு அஞ்சல் தலை வெளியிட்டது. 25 பை மதிப்பில், 'டைமண்' வடிவில் பலவண்ணத்தில் அச்சானது. அது முக்காடிட்ட கமலா அன்னையின் முகத்தின் ஈடில்லா எழிலும், மென்மையும், ஈர்ப்பும் அதில் காண்கிறோம்.

அன்னை இந்திரா காந்தி அவர்கள் 'இரத்தசாட்சி'யாக உயிர்விட்ட 20 நாட்களில் அவரது 68 ஆம் பிறந்த நாள் வந்தது (1984, நவம்பர் 19). அதனையொட்டி, நமது அஞ்சல் துறையினர் 50 பை. மதிப்பில் பல வண்ண அஞ்சல் தலை ஒன்று வெளியிட்டனர். கமலா அன்னைக்கு வெளியிட்ட நினைவுத் தலை போலவே வடிவமைப்பிலும் பொலிவிலும் வெளியிடப்பட்ட இந்த அஞ்சல் தலையும் சிறப்பான ஒன்றாகும்.

– பி. விடியா சாந்தம்மாள்

# சேர்ந்துதான் கொண்டாடுகிறோம்!

**கூட்டுக் குடும்பமாய் பண்டிகைகளை கொண்டாடியது போய், தற்போதைய சூழலில் குடியிருப்பு கூட்டுக் கொண்டாட்டங்கள் பெருகி வருகின்றன. முன்னதாகக் கூறியதில் மகிழ்ச்சியின் ஆதாரமாக விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை மட்டுமே பிரதானமாய் விஞ்சி நிற்கும். ஆனால் பின்னதில் பல இனத்தவர்கள் வசிக்கும் குடியிருப்பில் கூட்டாய் ஒரு பண்டிகையைக் கொண்டாடும் போது மனதளவில் மட்டுமல்லாது பொருளாதார ரீதியாகவும் நன்மை அதிகமே என்கிறார்கள் சில குடியிருப்பு வாசிகள்.**

எண்ணெய்க் குளியலும், தீபாவளி மருந்து கிளறலும் இந்தக் 'கணினி' காற்றலையில் அம்பிக்கற்களாய் பறந்து வெகு காலமாகி விட்டன. இவை மட்டுமா, தங்கள் குடும்பத்திற்கென்றே, எண்ணெய்ப் புகையில் வெந்து விதவிதமாய் இனிப்பு, பலகார வகைகளை செய்திடும் பெண்களும், விதவிதமான வாண வெடிகளை தீபாவளிக்கு முன்னும் பின்னும் வெடித்துத் தள்ளும் வாண்டுகளையும் தற்போதைய சூழலில் காண்பது அரிதாகி வருகிறது. இந்நிலைக்குப் பொருளாதார ரீதியாக மட்டுமின்றி நேரமின்மையும் ஒரு காரணமாய் நாம் கொள்ளலாம். இதைவிடுத்து பண்டிகை நாட்களை, ஒன்றாகச் சேர்ந்து இணைந்து கொண்டாடினால் நேரம் மட்டுமல்லாது பணமும் மிச்சமாகும் என்கிறார்கள் சென்னையிலுள்ள சில குடியிருப்பு வாசிகள்.



"என்ன இருந்தாலும் நம் கையால் முறுக்கையும், முள்ளுத் தேன்குழலையும் பிழிந்து, அதிரசமும், அப்பமும் நெய் மணக்க நைவேத்தியம் செய்வதில் உள்ள திருப்தி இந்தக் கூட்டுக் கொண்டாட்டத்தில் கிடைக்குமா" என நாம் கேட்க, 'இல்லவே இல்லை' என்று வரிந்து கட்டுகிறார்கள் இவர்கள் --

மயிலை கிருஷ்ணசாமி அவின்யுவிலுள்ள அக்ஷயா குடியிருப்பு 18 குடியிருப்புகளைக் கொண்டது. ஒவ்வொரு தீபாவளி பண்டிகையின் போதும் ஒட்டுமொத்தமாய் 1000 ரூபாய்க்கும் ஒரே பட்டாசாய் வாங்கி, (10,000 வாலா) 10, 15 நிமிடம் தொடர்ந்து வெடித்து அவின்யுகாரர்களை ஆனந்தப்படுத்துவதில் அக்கறை காட்டுகிறது அக்ஷயா. இக் குடியிருப்பில் வசிக்கும் திருமதி லக்ஷ்மி பாலிகா –



• லட்சுமி

"போன தீபாவளியின் போது நாங்கள் நாலைந்து பேர் குழுவாய்ச் சேர்ந்து அனைத்து வீட்டு வாசலிலும் ஒரே மாதிரியான கோலம் போட, மறுநாள் காலை தங்கள் வீட்டு வாசலைத் திறந்த அனைவர்க்கும் ஆச்சாயம் கலந்த ஆனந்தம். தனியாக என்றில்லாமல் ஒன்றாக என்று வரும்போது மனத்தில் எத்தனை இறுக்கமிருந்தாலும் அது தானாகவே மறைந்து விடுவது இதன் சிறப்பியல்பு. 25 ரூபாய்க்கு பட்டாசு வாங்குபவர்களும் உண்டு 250 ரூபாயை பட்டாசிற்கு ஒதுக்குபவர்களுமுண்டு. ஆனால் அனைத்துக் குழந்தைகளும் ஒன்றாக வெடிக்க வேண்டும் என்கிற சூழலில் 'இது உன்னுடையது இது என்னுடையது' என்கிற பாகுபாடு, வேற்றுமை மனப்பான்மை அவர்களிடையே தோன்றுவதே இல்லை. குழந்தைகளை கவனித்துக் கொள்ள யாரோ ஒருவர் பொறுப்பேற்பதால் விபத்து நேரிட்டு விடுமோ என்கிற பயம் உயரக் குடியிருப்பில் இருக்கும் பெற்றோர்களுக்குக் கிடையாது. இனிப்பு, பலகார வகைகளை பெரும்பாலும் ஒன்றாக இணைந்து செய்வோம். இதனால் மற்ற மாநில பிரத்யேக இனிப்பு கார வகைகள் செய்யும் முறையினை அறிந்து கொள்ள ஏதுவாகும்.

அதே நிலையில் மிகக் குறைந்த செலவில் பல வகைகள் (திரும்பத் திரும்ப ஒரே மாதிரி இல்லாமல்) நாம் பெற வாய்ப்புமுண்டு.''

நான்கு குடித்தனக்காரர்கள் இருக்கும் குடியிருப்பிலேயே மேலே உள்ளவர்களுக்குத் தண்ணீர் வரவில்லையென்றால் எனக்கென்ன வாயிற்று என்று ஒதுங்கும் குடித்தனக்காரர்கள் போலில்லாமல் இருக்கும் 41 குடும்பங்களும் ஒரே கூரை கீழ் வசிக்கும் அங்கத்தினர்கள் போலிருக்கும் 'தேவ் அபார்ட்மெண்ட்ஸ்'காரர்கள் தீபாவளி கொண்டாடும் விதமே தனிதானாம். அதைப் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்களேன் என்று நாம் ஆரம்பித்தவுடன்,

“தீபாவளி என்ன தற்போது நடந்து முடிந்த பிள்ளையார் சதுர்த்தியைக் கூட நாங்கள் ஒன்றாகச் சேர்ந்து அருகிலுள்ள பல நாட்கள் பூஜை நடைபெறாமல் இருந்த பிள்ளையார் கோவிலை திறக்கச் செய்து விமரிசையாகக் கொண்டாடினோம். இந்த



போல நவராத்திரியில் கூட ஒன்றாகச் சேர்ந்துதான் கொலு வைத்தோம். அவரவர் சுற்றத்தாரை அழைத்து குறிப்பிட்ட நாட்களில் தாம்பூலம் கொடுக்க, தோழமையும் விரிவடைகிறது'' என்கிறார்கள் திருமதி சாந்தியும், விஜயலக்ஷ்மியும்.

பெரும்பாலான இந்துக்கள் வசிக்கும் இக்குடியிருப்பிற்கு தலைவர் கிறிஸ்துவரான திருமதி எட்வர்ட்ஜூடி. இவர், “இப்படி கூட்டாகக் கொண்டாடுவதால் இந்தியப் பண்டிகைகளைப் பற்றி நானும் தெரிந்து கொள்ள முடிகிறது. அது மட்டுமல்லாது இவர்களிடையே, 'நான் மட்டும் ஒரு கிறிஸ்துவர்' என்கிற தனிமையும், எனக்கு இன்றுவரை ஏற்பட்டதேயில்லை'' என்கிறார்.

இக் குடியிருப்பில் கடந்த ஒன்றரை வருடங்களாக வசிக்கும் திருமதி லக்ஷ்மி சங்கரன், “பல மாடி குடியிருப்புகள் மலிந்து கிடக்கும் பம்பாயில் இம்மாதிரி கூட்டாகப் பண்டிகைகளை கொண்டாடும் வழக்கம்தான் மிகவும் அதிகம். இங்கே எங்கள் குழந்தைகள், தீபாவளியின் போது ஒரு கூட்டம் போட்டு தங்களுக்குத் தேவையான வாண வெடிகளுக்கு ஒரு லிஸ்ட் தயாரித்து, அதற்கென பொறுப்பேற்றிருக்கும் ஒரு பெரியவரிடம் தந்து விடுவார்கள். அவர் தலைமையில் எல்லோருக்கும் ஒரே மாதிரி, ஒரே அளவு சமமாக அனைத்துக் குழந்தைகளுக்கும் பட்டாசுகள் பிரித்துக் கொடுக்கப்படும். பண்டிகை நாளில் பட்டாசு என்றாலே பயந்து ஓடும் குழந்தைகளையும் தங்கள் குதூகலத்தில் பங்குகொள்ளச் செய்துவிடும் மற்ற குழந்தைகள். இதே போல் பலகார வகைகளையும் நாங்கள் ஒரே மாதிரி செய்து பங்கிட்டுக் கொண்டு விடுவதால் எங்களுக்குள் பரிமாறிக் கொள்ளும் அவசியமும் ஏற்படாது. நேரமும் மிச்சம். எங்கள் வீட்டில் எல்லாம் செய்தால்தான் திருப்தி என்கிற எண்ணத்தை இந்தக் குடியிருப்பில் இதுவரை யாரும் சொன்னதில்லை. அதையும் மீறிய ஒரு சகோதரத்துவ எண்ணம் அதிகம் வியாபித்திருப்பதால் என்னவோ எங்கள் குடியிருப்பில் தனியாகக் கொண்டாடும் எண்ணம் தவிர்ந்து விடுகிறது.''

திரு சங்கரன், “இந்த பட்சணமும் பட்டாசுகளையும் ஒன்றாய் பகிர்ந்து கொள்வது ஒருபுறமிருக்கட்டும். தனியாய் இருக்கும் பெரியவர்கள், வெளிநாடுகளில் வசிக்கும் பெண் – பிள்ளை சுற்றத்தினரை உடைய வயதானவர்கள் இம்மாதிரி பண்டிகைகளை ஒன்றாய் இருந்து கொண்டாடும் போது அடையும் இன்பமும், திருப்தியும் சொல்லில் அடக்க முடியாது. பணமும், நேரமும் மிச்சமாவதைக் காட்டிலும், பண்டிகை நாளில் இருக்கும் அதிக வேலையை எங்களுக்குள் பகிர்ந்து கொண்டு கொண்டாடும் போது கிடைக்கும் அலாதி சுகத்தினை அனுபவித்தவர்கள் மட்டுமே உணர முடியும்'' என்கிறார்.

உண்மைதான். இப்படி ஒவ்வொரு குடியிருப்பும் ஒரு பாசக் கிராமமானால், நாளுக்கொரு பண்டிகை வந்தாலும் உல்லாசமாய் உற்சாகமாய் சிரமமின்றி கொண்டாடி தள்ளி விடலாம்!

— கீதாமோஹன்



# இருபத்தியோராம் நூற்றாண்டின் குழந்தைகளுக்காக...

படம் : ஜி. சுரேஷ்

## 20 முதல் 30 வயது வரை :

இதுவரை தன்னைத் தயார் செய்து வந்த குழந்தை, தானாகவே வாழ ஆரம்பிக்கும் பருவம் இது. படிப்பு முடிந்து வேலையைத் தேடிக் கொண்டு சுதந்திரப் பறவைகள் போல வாழ்ந்து மகிழும் இவர்களிடம் தாயின் பங்கு என்ன? வாழ்வில் என்னென்ன பிரச்னைகள் தோன்றும், எப்படி வாழ வேண்டும் என்பதைக் கூறுவது அவசியம்.

பிறருக்குத் தீமையைச் செய்யாமல் நாம் அடையும் பொருட் செல்வம் அறனையும் தரும், இன்பத்தையும் தரும் என்பதை விளக்க வேண்டும். பொருள் தன்னளவில் நன்மை தீமையற்றது. தீய வழியில் வந்தால் தீமையைத் தருகிறது. நல்ல வழியில் வந்த பொருள் நன்மையையே செய்யும்.

பிறரை அழ வைத்து நாம் சேர்த்த செல்வம் எல்லாம் நம்மை அழ வைத்து நம்மைவிட்டுச் சென்று விடும். நல்லவர்களிடத்துள்ள செல்வம் அவர்களை விட்டுச் சென்றாலும் பிறகு அதிக நன்மையுடன் அவர்களைச் சேரும் என்பது மாறாத உண்மையாகும். இதைக் குழந்தைகளிடத்தே வலியுறுத்த வேண்டியது இந்த வயதில்தான். ஏனெனில் அவர்கள் இப்போதுதான் பொருள் ஈட்டத் தலைப்பட்டுள்ளனர்.

இந்த நிலையில் ஏற்படும் குழப்பம் ஒன்று உண்டு. தாய் தன்னைவிட அதிகமாக குழந்தைகள் படிக்க முயற்சி செய்து, நன்றாகப் படிக்க வைத்து, நல்ல வேலையில் அமர்ந்து பொருளீட்டத் துவங்கியதும் 'இனி நாம் ஏதாவது சொல்வது நன்றாக இருக்குமா, நாம் அதிகம் படிக்காததால் அதிகம் படித்த குழந்தைக்கு என்ன சொல்வது' என நினைக்கிறாள். தாயின் அனுபவ அறிவு குழந்தையின் அனுபவ அறிவைவிட அதிகமாக பெரும்பாலும் இருக்கும். மேலும் குழந்தை இப்போதுதான் வாழத் தொடங்கியுள்ளது. உலக நியதிகளை குழந்தைகளுக்குத் தாய் புரிய வைக்க வேண்டும். பொருளுடன் அருளையும் சேர்க்கும் வழியைச் சொல்லித்தர வேண்டும். குழந்தை விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் தாய் தன் கடமை என எண்ணி மக்கட் பண்புடன் நடக்க வழி காட்ட வேண்டும்.

நல்லவர்களுடைய நட்பைப் பெற வேண்டும் என்பதை வலியுறுத்த வேண்டும். நாம் தீய வழியில் சென்றால் இடித்துப் பேசி அழவைத்

மல்லிகா பலராமன்



19 புள்ளி, 19 வரிசை, 4 பக்கங்களிலும் நடுவில் 7, 5, 3 என்று புள்ளிகள் சேர்க்கவும்.

— ஹேமா கோதண்டராமன்

---

தாவது நம்மை தடுப்பவர்கள் நல்லவர்கள். நம்மைத் தீய வழியில் செல்ல ஊக்குவிப்பவர்கள் தீயவர்கள். ஆனால் தங்கள் தீய நோக்கம் தெரியாமலிருக்க பொய்யான அன்பை அதிகமாகக் காட்டி ஏமாற்றுவார்கள். அத்தகைய பொய் வேடத்தை நல்லவர்களிடம் காண முடியாது.

எவ்வளவுதான் திட்டமிட்டு நல்ல முறையில் வாழ்ந்தாலும், வாழ்வில் சில சமயங்களில் துன்பம் ஏற்படுவது இயற்கை. சில வருடங்களுக்கு முன் வேலூரில் சில நாட்கள் சுவாமி ஓங்காரனந்தா அவர்கள் 'துன்பமில்லா வாழ்வு' என்பதைப் பற்றி பிரசங்கம் செய்தார்.

"துன்பமில்லா வாழ்வு" என தலைப்பு கொடுத்திருந்தாலும் துன்பம் கலவாத வாழ்வு இவ்வுலகில் இல்லவேயில்லை. இந்தத் தலைப்பு கொடுத்ததன் காரணம், துன்பத்தை தவிர்க்க முடியாவிட்டாலும் துன்பமில்லா மன நிலையை அடையும் வழி முறைகளை கற்றுத் தருவதற்காகத்தான். துன்பம் அவ்வப்போது வரும், அதை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். உண்ணுதல், உறங்குதல் போல இயற்கையான நடைமுறைகளில் ஒன்றான துன்பத்தைக் கண்டு துவளாது மனப்பக்குவத்துடன் ஏற்றுக் கொண்டால் அதன் சுமை நீங்கிவிடும்.' அந்த மனப்பக்குவம் வளர ஆன்மீக அறிவு இன்றியமையாதது. ஆன்மீக அறிவைப் பெறும் சூழ்நிலை இக்காலத்தில் குறைவாக உள்ளதால் தான், நிறையப் படித்தவர்களும் சிறு கஷ்டம் ஏற்பட்டாலே தாங்க முடியாது தவிக்கின்றனர். மேலும் சிலர் தற்கொலைச் செய்யுமளவுக்குச் செல்கின்றனர். யார் துன்பப்படவில்லை? புராணங்களைப் பற்றிய அறிவு ஏற்படும்போது, நல்லவர்களும் துன்பப்படுவதிலிருந்து தப்ப முடியாது, ஆனால் முடிவில் நன்மையே ஏற்படும் என்ற தெளிவு கிடைக்கிறது."

இங்கு ஒரு புராணக் கதையை குறிப்பிட விரும்பு கிறேன். ஒரு அரசன் மிக நல்லவன். எல்லாவித நற்குணங்களும் அமையப் பெற்று, நல்லாட்சியை நடத்தி அனைவருக்கும் நன்மைகளைச் செய்து வந்தான். ஒரு நாள் அவனது அரண்மனைக்கு முனிவர் ஒருவர் வந்தார். அவர் முக்காலத்தையும் உணரும் திறன் படைத்தவர். தனக்கு மோட்சம் கிடைக்குமா என அரசன் பணிவுடன் கேட்டான். அதற்கு அவர்,

"நல்லதையே நினைத்து, நல்லதையே செய்யும் உனக்கு மோட்சம் கிடைக்கும் வாய்ப்புண்டு. ஆனால் சிறுவயதில் அறியாமல் நீ ஒரு தீய செயலைச் செய்து விட்டாய். உன் மீது யாருக்கும் சந்தேகம் ஏற்படாததால் தண்டனை கிடைக்கவில்லை. தண்டனை அடைந்திருந்தால் பாவம் நீங்கியிருக்கும். நாளாக நாளாக அந்தத் தீய செயலால் ஏற்பட்ட பாவமும் வளர்ந்து பெரிய தடையாக உள்ளது" என்றார்.

# காஞ்சி பட்டுப் புடவைகள் வாங்கிட ஆசையா?

# காஞ்சிபுரம் போகாமலேயே,

## உங்கள் ஆவலை இங்கேயே தீர்த்துக்கொள்ளலாமே!




**பா**ருங்கள், காட்சிக்கு வைக்கப்பட்டிருக்கும் அதிநவீன ரகங்களைக் காணுங்கள். தூய பட்டு. அசல் சரிகை, இணையற்ற டிசைன்கள். மற்றவர்கள் முந்துவதற்கு முன்னர் உங்கள் தேர்வினைச் செய்திடுங்கள்!

## அத்தனையும் காஞ்சிபுரம் விலைகளிலேயே!

(அண்ணாநகர் மற்றும் லஸ் ஷோரூம்களில் பிரத்யேகமான காட்டன் சேலைகள் மற்றும் கைத்தறி துணிவகைகள் கிடைக்கின்றன.)



**தமிழ்நாடு கைத்தறி கூட்டுறவு மார்க்கெட்டிங் காம்ப்ளெக்ஸ்**
(தமிழ்நாடு அரசு நிறுவனம்)
C-47, 2வது அவென்யூ,
அண்ணாநகர் பிளாசா,
ஐயப்பன் கோவில் அருகில்,
அண்ணாநகர்,
சென்னை 600 040. போன்: 6284873.

**காஞ்சி கூட்டுறவு சில்க்ஸ்,**
(தமிழ்நாடு அரசு நிறுவனம்)
உம்மிடியார் ஷாப்பிங் சென்டர்,
(எல்.ஐ.சி. கட்டிடம் எதிரில்)
811, அண்ணாசாலை,
சென்னை 600 002. போன்: 8522453.

**ஏழுகடல் கைத்தறி விற்பனை வளாகம்,**
ஏழுகடல் ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ்,
ஏழுகடல் வீதி, மதுரை 625 001.

*எமது கைத்தறி ரகங்கள் கிடைக்கும் மற்றொரு இடம்*

**ஈரோடெக்ஸ் ஷோரூம்,**
110, கச்சேரி சாலை, லஸ், மயிலாப்பூர்,
சென்னை 600 004.

DIPR/690/96

அதற்குப் பரிகாரம் என்ன என்று அரசன் வினவியபோது அவர், "நீ செய்யாத தீய செயலுக்கான தண்டனையை அனுபவிக்கும் போது, அந்தப் பாவம் கரையும்" என்றார். தவறு செய்யாமலே, பிறரால் இகழப்படும் போது பாவம் கரையும் என நம்பினான். ஆகவே ஊரின் ஒதுக்குப்புறத்தில் ஒரு சிறிய மாளிகையைக் கட்டினான். ஒரு அழகியையும், அவளுக்குப் பணிவிடை செய்ய சில பெண்களையும் இருக்கச் செய்தான். ஆண்கள் யாரும் அங்கு செல்லக்கூடாது என்றான். ஆனால் அரசன் மட்டும் இரவில் அந்த மாளிகைக்குச் சென்று, தங்கி, விடியற்காலையில் தன் மாளிகைக்குச் செல்வான். இதைப் பார்த்த ஊர் மக்கள், அரசன் திருட்டுத்தனமாக அங்கு சென்று தகாத முறையில் நடந்து கொள்வதாக எண்ணி தூற்ற ஆரம்பித்தனர். செய்யாத தவறுக்கு தண்டனையை அனுபவிக்க நேர்ந்ததால் அவன் கணக்கில் உள்ள பாவம் நீங்கியது.

நாம் தீய செயல் எதையும் செய்யாத போதும் பிறர் தூற்றினால் அதற்காகக் கவலைப்படக் கூடாது என தாய் வலியுறுத்த வேண்டும். தவறு செய்து அதனால் பிறர் தூற்றினால் நம்மைத் திருத்திக் கொள்ள வேண்டுமே தவிர கோபப்படுவதோ கஷ்டப்படுவதோ கூடாது.

'தீதும் நன்றும் பிறர் தர வாரா' என ஆயிரக் கணக்கான வருடங்களுக்கு முன்பே நம் முன்னோர்கள் எழுதி வைத்துள்ளனர். நமக்கு ஏற்படும் நன்மை தீமைகளுக்கு நாமே காரணம் என்பதை நன்றாக யோசித்துப் பார்த்தால் புரியும். இதையே, 'Man is the Master of his own fate' என்கின்றனர்.

அடுத்து தாய் செய்ய வேண்டிய எச்சரிக்கை புகழ்ச்சியைப் பற்றியது. பாராட்டுதல் தேவைதான். அது அளவோடு இருந்தால், நம்மை ஊக்கப்படுத்தும் டானிக் போன்றது. ஆனால், 'புகழ்' மதுவைப் போன்றது. நம் அறிவை மயக்கும். மதுவை அருந்துபவன் அதிலிருந்து மீள முடியாமல் மேலும் மேலும் அருந்தி முடிவில் அழிவது போல, புகழும் போதையை உண்டாக்கும். புகழுக்காக மேன்மேலும் செய்யத்தகாத செயல்களைக் கூட செய்ய விரும்புவர். இந்தப் புகழாசை முடிவில் மீளாத நரகத்தில் தள்ளி விடும். ஆகவே தன்னைப் புகழ்ந்து யாராவது பேசினால் அந்த இடத்திலிருந்து உடனே சென்று, போதை ஏறுமுன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்று தாய் அறிவுரை கூற வேண்டும். மண்ணாசை, பெண்ணாசை, பொருளாசையை விடக் கொடியது புகழாசை.

அடுத்ததாக சம்பாதிக்கும் பொருளை எவ்வாறு செலவு செய்ய வேண்டும் என்பதையும் தாய் சுட்டிக் காட்ட வேண்டும்.

ஒரு ஊரில் ஒரு பெரியவர் வாழ்ந்து வந்தார். அவர் எப்போதும் மலர்ந்த முகத்துடன் காணப்படுவார். ஒருபோதும் அவர் முகத்தில் கவலையின் சாயல் தென்படுவதில்லை. அவரின் நிலையான நிம்மதிக்குக் காரணம் என்ன என வினவிய போது தான் சம்பாதிக்கும் பொருளைச் சரியாகச் செலவிடுவதால் எப்போதும் மகிழ்ச்சியுடன் இருப்பதாகக் கூறினார். விளக்கம் கேட்டபோது அவர், "நான் சம்பாதிக்கும் பொருளில் ¼ பங்கை கடனுக்காகக் கொடுக்கிறேன். ¼ பங்கை கடன் கொடுக்கிறேன். ¼ பங்கை எனக்காக, குடும்பத்திற்காக செலவு செய்கிறேன். ¼ பங்கை கிணற்றில் போடுகிறேன்" என்றார். கேள்வி கேட்டவருக்குப் புரியவில்லை. மேலும் விளக்கம் கேட்டபோது அவர், "¼ பங்கை என் பெற்றோர்களுக்காகச் செலவிடுகிறேன். என்னை வளர்த்து ஆளாக்கிய அவர்களுக்கு நான் கடன்பட்டுள்ளதால், அவர்களுக்காகச் செய்யும் செலவு நான் கடனுக்காகக் கொடுப்பது போலாகும். என் குழந்தைகளை இப்போது வளர்த்து ஆளாக்க செய்யும் செலவு பிறர்க்குக் கடன் கொடுப்பது போலாகும். ஏனெனில் அவர்கள் நாளை எனக்குத் திரும்பச் செய்வார்கள், அதாவது வயதான காலத்தில் என்னைக் கவனித்துக் கொள்வார்கள். எனக்காக, மனைவிக்காக, பிற உறவினர்க்காக ¼ பங்கு பொருளைச் செலவழிக்கிறேன். ¼ பங்கு பொருளை தான, தர்மங்களுக்குச் செலவிடுகிறேன். இதன் பலனை நான் இப்பிறவியில் சிறிதே பெற முடியும். பெரும் பகுதியை அடுத்த பிறவியில் அடைவேன். அதனால் அதைக் கிணற்றில் போடுகிறேன் என்றேன்," என்றார். இந்த முறையில் திட்டமிட்டு வாழ்ந்ததால் மகிழ்ச்சியுடன் இருந்தார். அவர் செய்த தர்மங்களின் பலனில் அடுத்து வரும் சந்ததியினருக்கு ஒரு பங்கு செல்

**ரெடிமிக்ஸ் குலாப் ஜாமூன் சில சமயம் நடுவில் கட்டியாக வேகாமல் நின்று விடும். ஒரு 'கிஸ்மிஸ்' பழத்தை நடுவில் வைத்து மாவு உருண்டையைப் பொரித்தால் முழுவதும் வெந்து இருக்கும். ஜாமூனில் நன்றாக ஊறும்.**

**— உஷா**



## கிருமிகளைத் தவிர்த்திடுவீர்





## பற்குழிகளைத் தவிர்த்திடுவீர்

## பற்களை வலுவாக வைத்திடுவீர்



வலிமிகு பற்குழியினால் குழந்தை அழுவதைக் காண்பது உங்களுக்கு வேதனையாக இருக்கிறது. பற்குழிகள் கிருமிகளினால் உண்டாகின்றன. அவை பற்களின் இடையே சிக்கியுள்ள உணவுத் துணுக்குகளை அமிலங்களாக மாற்றுகின்றன. இந்த அமிலங்கள் பற்களின் எனாமலை பலவீனப்படுத்துகின்றன, பலவீனமான பற்களில் பற்குழிகள் எளிதில் ஏற்படுகின்றன. ஆகவே, உங்கள் குழந்தைகளின் பற்களை வலுவாகவும் ஆரோக்கியமாகவும் வைப்பது அவசியம். புதிய கோல்கேட் கால்சிகார்டு உங்கள் குழந்தையின் பற்களை வலுவுறச் செய்ய உதவுகிறது. இதன் ஒப்பற்ற கிருமிகளை எதிர்த்திடும் ஃபார்முலா, பற்களிலுள்ள இயற்கையான கால்ஷியத்தை உள்ளேயே தக்க வைக்கிறது. இவ்வாறு அவற்றை அதிக வலுவாகவும், கெட்டியாகவும், பற்குழிகளுக்கு அதிக எதிர்ப்புத் திறன் கொண்டதாகவும் ஆக்குகிறது. அதனால்தான் மேன்மேலும் பெரும்பாலான குடும்பத்தினர் கோல்கேட் கால்சிகார்டு உபயோகிக்கின்றனர்.




**கிருமிகளைத் தவிர்த்திடுவீர். பற்குழிகளைத் தவிர்த்திடுவீர்.**
**பற்களை வலுவாக வைத்திடுவீர்.**

Rediffusion-DY & R/Bom/CP/461 b TM

கிறது.

'மாதா செய்வது மக்களுக்கு' என ஒரு முது மொழி உண்டு. ஒருவன் செய்த பாவ, புண்ணியங்களுக்கான பலனில் ஒரு பகுதி அவனது குழந்தைகளையும், பேரக் குழந்தைகளையும், கொள்ளுப் பேரக்குழந்தைகளையும் அடைந்து, நல்ல (அ) தீய பலனை ஏற்படுத்துகிறது என்று கூறப்பட்டுள்ளது. பெரும் பகுதி அடுத்த பிறவியில் நம் நிலையை தீர்மானிக்கிறது.

ஒருவன் ஒரு வங்கியில் ஒரு ரூபாய்கூட போட்டு வைக்காமல், அந்த வங்கியின் முன்னால் நின்று, பலரும் பணத்தைப் பெற்றுச் செல்கின்றனர், ஆனால் தனக்கு மட்டும் வங்கி பணம் தர மறுக்கிறது என சண்டையிடுவது முட்டாள்தனமாகும். அது போலவே நாம் நல்ல செயல்கள், தருமங்கள் செய்யாமலேயே, இறைவன் நமக்கு எதையும் தரவில்லை, பாரபட்சமுடையவன், கண்ணில்லாதவன் என குறைபட்டுக் கொள்கிறோம். ஒருவன் இவ்வுலக வாழ்வை முடித்துச் செல்லும் போது உடன் வருவன , அவன் செய்த நன்மை, தீமைகள் தானே தவிர அவனது செல்வம், திறமை, கல்வி, பதவி, அழகு முதலியன இல்லை. ஆகவே சம்பாதிக்கும் பணத்தில் குறைந்தபட்சம் 5 சதவீதத்தையாவது (இக்காலத்திற்கேற்ப) தானம் செய்ய பயன்படுத்தி மீதி 95 சதவீதத்திலேயே நம் செலவினங்களை அடக்கிக் கொள்ள வேண்டும். 1%யை அன்னதானத்திற்கும் (பிறர் பசியைப் போக்க), 2%யை அறிவுதானத்திற்கும் (கல்வியைப் பரப்ப), 2%யை ஆன்மதானத்திற்கும் (உண்மையான ஞானத்தை பரப்பக் கூடிய கோவில் (அ) அதைச்சார்ந்த நிறுவனங்களுக்காக) செலவிட்டோமானால் நம் குழந்தைகளின், பேரக்குழந்தைகளின் நிம்மதியான, சிறந்த எதிர் காலத்திற்கு வழி வகுத்து, இவ்வுலகை விட்டு நாம் நீங்கும் போது வெறுமனே செல்லாமல், போதிய புண்ணிய கணக்குடன் சென்றால்தான், அடுத்த பிறவி நல்லதாக அமையும் என்ற உண்மையை, குழந்தைகள் சம்பாதிக்கத் தொடங்கிய இந்த வயதில் தாய் விளக்கி, தெளிவுபடுத்தி, நல்ல பாதையில் குழந்தைகள் செல்ல துணைபுரிய வேண்டும்.

சுருக்கமாகச் சொல்லப்போனால் நம் குழந்தைகளுக்கு வலியுறுத்த வேண்டிய உண்மைகள் :

1. வீரனாக இரு ஆனால் முரடனாகாதே.
2. பணிவாக இரு ஆனால் கோழையாகாதே.
3. சிக்கனமாக இரு ஆனால் கருமியாகாதே.
5. உழைப்பை நாடு ஆனால் பலனை நாடாதே.
6. நல்லவனாக இரு ஆனால் ஏமாளியாகாதே என்பனவாகும்.

*நன்றே வாழ்வோம், நலமே செய்வோம்!*
*எல்லாருக்கும் பண்டிகை வாழ்த்துக்கள்!!.*

# அழகும் குணமும்.



- இடைஞ்சல் இல்லாத நீராவி போக்கு அமைப்பு.
- விரல் பட்டவுடன் பிரஷர் ரிலீஸ்.
- கனமான கேஜ்
- பிரகாசம் மங்காதது
- சூடு ஆகாத கைப்பிடிகள்



அதிகபட்ச சில்லறைவிலை: 3.5 லிட்டர் ரூ. 1500; 5 லிட்டர் ரூ. 1650; (செப்பரேட்டர்களுடன் ரூ. 1800). 7 லிட்டர் ரூ. 1850; (செப்பரேட்டர்களுடன் ரூ. 2050) 7 லிட்டர் அகன்ற பாடி ரூ. 1950; (செப்பரேட்டர்களுடன் ரூ. 2150) 9 லிட்டர் ரூ. 2150; (செப்பரேட்டர்களுடன் ரூ. 2400).

## ஃப்யூசரா
## ப்ரஷர் குக்கர்

**பிரிமியர்* மில்ஸ்**

ப்ளவுஸ் துணிகளில் நெ. 1

நீங்கள் தேர்ந்தெடுக்க...

* ரூபி
* ஃபேர் & லவ்லி
* பிளாட்டினம் சூப்பர்
* லவ்லி லேடி

**சேலையும் சோளியும் ...**

**இதுவல்லவா ஜோடிப்பொருத்தம் !**

SASI / 469 / 94

# பட்டாசுச் சத்தம் காதைப் பாதிக்காது!

பட்டாசுகள் வெடித்துக் காதைத் துளைக்கும் கோலாகலமான நேரம். செவிக் குறைபாடுகளைச் சரிசெய்வதில் வல்லவர் என நீண்ட வருடங்களாகப் புகழ்பெற்ற கோவையைச் சேர்ந்த சாமிகிரி சித்தரிடம் பட்டாசுகள் எழுப்பும் மிகப் பெரிய ஒலிகளைப் பற்றிக் கேட்டபோது அவருடைய விளக்கம் வியப்பிற்குரியதாகவும், சிந்திக்கத் தகுந்ததாகவும் இருந்தது. அதோடு தான்



செவிகுறைபாடுகளை சரிசெய்யும் விதத்தையும் விளக்கினார் –

கே : "பட்டாசு வெடிப்பதற்கு முன் காதை பாதுகாத்துக் கொள்ள வேண்டிய வழிகள் என்ன?"

ப : "காதின் அருகில் பட்டாசை வெடிக்க வைத்தால் காது நிச்சயம் பாதிப்படையும். அதற்காக பஞ்சை காதுக்குள் வைத்து திணித்துக் கொண்டு வெடிப்பதால் எந்தவித பயனும் இல்லை. விழாக் காலங்களில் வெடிச்சத்தத்தில் இருந்து காதைப் பாதுகாக்க மனதை உற்சாகத்தோடும், மகிழ்ச்சியோடும் வைத்துக் கொண்டாலே போதும். வெடியினால் ஏற்படும் சத்தம் யாருக்கும் எந்தவித பாதிப்பையும் ஏற்படுத்தாது.

காதை அடைத்துக் கொண்டோ பயந்து கொண்டோ, கவனிப்பவர்களுக்குக் காது மாத்திரம் அல்ல, இருதயமும் அதன் துடிப்பும் அதிகரித்துப் பாதிப்புக்கு உள்ளாகிறது.

அணுகுண்டு வெடி பயங்கரமாக வெடித்தால் கூட நாம் உதாசீனமாக போவது உண்டு. ஆனால் சில சமயங்களில் வேறு எதையோ சிந்தித்துக் கொண்டு இருக்கும்போது சிறிய ஊசிப்பட்டாசு வெடித்தால் கூட, அது நம்மைப் பெரும் அதிர்ச்சிக்கு ஆளாக்குகிறது.

இதைச் சற்று உணர்ந்து பார்த்தால் மனநிலை சமநிலையாக இருக்கும் சமயத்தில், யாருக்கும் எந்தவித பாதிப்பும் ஏற்படுவதில்லை. எனவே பட்டாசு வெடிப்பதற்கு காதுக்கென்று தனி பாதுகாப்பு எதுவும் தேவையில்லை."

கே : "பட்டாசு வெடிப்பதால் காது சவ்வு கிழிய வாய்ப்பு இருக்கிறதா?"

ப : "வாய்ப்பு நிறைய இருக்கிறது. உயரமான மலை மேல் ஏறும்போதும், விமானத்தில் பறந்து செல்லும் போதும் காற்றழுத்தம் குறைவதால் செவிப்பறை என்ற ஜவ்வு விரிவடைந்து காதை அடைக்கச் செய்வதையும், வலி உண்டாவதையும் உணரலாம்.

அதுபோல் பயங்கர வெடி சப்தத்தால் காற்றழுத்தம் குறைவதோடு அல்லாமல் உடலிலேயே மிக மிகச் சிறிய எலும்புகளான சுத்தியல் எலும்பு, பட்டறை எலும்பு, அங்கவடி எலும்பு ஆகியவை முதலில் செவிப்பறையை தாக்கி அங்குள்ள, மற்ற எலும்புகளின் இயற்கை இயக்கத்தை தாக்கி செவிடாக்கவும் கூடும். அதனால் பட்டாசை காதின் அருகில் வைத்துக் கொளுத்துவதோ மிரண்டபடி கவனிப்பதோ கூடாது. பயமில்லாமல் சாதாரணமாக சிறிது தூரமாகவே இருந்தால் எந்தவித பாதிப்பும் ஏற்படாது."

கே : காதில் பட்டாசால் தீப்புண் ஏற்பட்டால் என்ன மருந்து உடனே போட வேண்டும்?

ப : "நல்ல தேங்காய் எண்ணெயுடன், மஞ்சள் தூளைக் கலந்து புண் மேல் தடவலாம். அல்லது சுத்தமான தேனைத் தடவினால் சீக்

கிரம் புண் ஆறிவிடும். எரிச்சலும் உடனே நிற்கும்."

**கே : உங்களை நாடி வருபவர்களின் குறைகளை எப்படிக் கண்டறிவீர்கள்?**

ப : "பலரும் காது கேட்கவில்லை என்ற குறையுடனேயே என்னிடம் வருகிறார்கள். உடனே நான் அவர்களை பரிசோதிக்கிறேன்: காதின் பாகங்களான புறச்செவி, உட்செவி, சுற்று எலும்பு, அங்கவடி எலும்பு, பட்டறை எலும்பு, நத்தை எலும்பு, செவிப்பறை இவை தவிர, காதுகளின் முக்கிய நரம்புப் பகுதி ஆகிய இவற்றில் ஏதேனும் ஒன்றுக்கு ஊனம் ஏற்பட்டாலும் காது பொதுவாகக் கேட்கும் சக்தியை இழந்துவிடும். நான் தயாரித்துள்ள மருந்துச் சத்து அடங்கிய எண்ணெய் அணுமய மானது. இதைக் காதில் ஊற்றியதும் காதின் பாகங்களிலுள்ள குறைகளை இது நிவர்த்தி செய்கிறது. அறுவை சிகிச்சைக்குப் பின்னும் காது கேட்காதவர்கள் இந்த எண்ணெயை உபயோகித்து பலன் அடைந்திருக்கிறார்கள்.

**கே : சித்த வைத்திய முறையில் காதுக் குறைபாட்டினை எப்படிச் சரிசெய்கிறீர்கள்?**

ப : "சித்த வைத்தியமுறை இயற்கையானது. மூலிகைகளை அடிப்படையாகக் கொண்டது. விரைவில் குணமாக்கக்கூடியது. நிரந்தரமாகவும் குணமளிக்கும் தன்மை வாய்ந்தது. குறுகிய காலத்திலும் குணமளிக்கும். விருந்தும் மருந்தும் மூன்றே நாள் என்பார்கள். என்னிடம் வரும் நோயாளிகள் ஆறு வேளை மருந்துடன் சிகிச்சை பெற்று குணமடைந்து மனநிறை வோடு செல்கிறார்கள். கல்வம், குழலி போன்ற கருவிகளின் உதவியால் அணுமயமான எண் ணெய் தயாரிக்கிறேன்."

**கே : பல வருடங்களாக இருந்து வரும் செவிட்டுத்தன்மை மூன்று நாட்களில், ஆறு வேளை மருந்தில் குணமாகிறதா?**

ப : உங்களுக்கு இது வியப்பாக இருக்கலாம். மருத்துவத் துறை அறிஞர்களின் முன்னிலை யில் சென்னையில் நடத்திக் காட்டியிருக் கிறேன்.

**கே : காது செவிடு ஆகக் காரணம் என்ன?**

ப : கபாலச்சூடு கர்ணவாயு, மற்றும் சளி பிடித்தல், குளிர்ச்சியான குளிர்பானங்கள் அருந்துவது, பலவகையான மருந்து மாத்திரை கள் சாப்பிடுவது, காதினுள் குச்சி போன்ற பொருட்களால் குடைவது, உயரத்திலிருந்து நீரில் தலைகீழாகக் குதிப்பது போன்ற காரணங்களால் ஏற்படுகிறது."

**கே : பிறவிச் செவிடு எப்படி ஏற்படு கிறது?**

ப : தாயின் வயிற்றில் குழந்தை வளரும் பொழுது குழந்தையைப் பாதிக்கும் அதிகமான கர்ப சூட்டினாலும், மருந்து மாத்திரை ஊசி போன்றவற்றை அதிக அளவில் எடுத்துக் கொள்வதாலும் கருவுற்று இருக்கும் தாய்க்கு அம்மை, டைபாய்டு, மலேரியா போன்ற கடு மையான காய்ச்சல் ஏற்பட்டாலோ, மலக்கட்டு, வயிற்றுப்போக்கு உண்டானாலும், பிறக்கின்ற குழந்தை ஊமையாகவோ அல்லது காது கேளாமலோ போகலாம்."

**கே : காது கேளாதவருக்கு மனோநல பயிற்சி உண்டா?**

ப : உண்டு. பொதுவாக காது கேளாத வர்கள் ஒருவித தாழ்வு மனப்பான்மையுடன் மற்றவர்களை விட்டு விலகியே இருப்பார்கள். இதுவே அந்த வியாதியை தீவிரப்படுத்துகிறது. அவர்களது தாழ்வு மனப்பான்மையை போக்க சில மனோரீதியான சிகிச்சை முறைகளை என் னுடைய 401, கிராஸ்கட் ரோடு, காந்திபுரம், கோவையிலுள்ள மருத்துவமனையில் (தொ. 234215, 473291) கொடுக்கிறேன். காது கேளாமை ஒரு பெரிய வியாதி அல்ல என்று அவர்களுக்கு பக்குவமாக எடுத்துச் சொல்வேன். அது மட்டு

பட்டுப் புடைவையை பல ஆயிரங்கள் கொடுத்து வாங்கினாலும் ஓரிரு முறைகள் கட்டியதுமே கால் பித்தவெடிப்புகள், கொலுசு, மெட்டி போன்றவைகள் பட்டு இழுப்பதனால் கரையிலுள்ள ஜரிகை பிய்ந்து வர ஆரம்பித்து விடும்.

புடைவையின் கீழ் கரையிலுள்ள ஜரிகை அல்லது த்ரெட் வொர்க் அகலத்திற்கு மேட் சாக ஒரு நல்ல 2" X 2" துணியை பால்ஸாக வைத்து தைக்கவும். ஜரிகைக் கரை என்றென் றும் புதிதாய் இருக்கும்.

- உஷா



மல்ல, பேசுவது எப்படி ஒரு கலையோ அது போல கேட்பதும் ஒரு கலை. இதற்கான பயிற்சியும் அவர்களுக்குக் கொடுக்கிறேன்."

**கே : பிறவியிலேயே காது கேளாதவர்களுக்கு உங்களால் சிகிச்சை அளிக்க முடியுமா?**

ப : பிறவியிலேயே காது கேட்காமல் இருப்பவர்கள் குறைந்தது 8 வயதுக்குள் என்னிடம் வந்தால் அவர்களுக்குத் தகுந்த சிகிச்சை அளித்து காது கேட்கும் சக்தியை கொடுக்க முடியும்.

**கே : காதில் சீழ்வடிவது ஏன்?**

ப : அதிக சூட்டினாலும், கர்ப்பசூடு காரணமாகவும் குழந்தைகளுக்கு வரும். காதில் அடிபட்டாலும், காதில் தண்ணீர் நின்றாலும் சீழ் வடியலாம். மற்றும் மருந்து அலர்ஜி, அதிக ஜலதோஷம், தினமும் காது குடைவதால் ஏற்படும் பாதிப்பால் சீழ்வடியலாம்."

**கே : இரைச்சல் அதிகம் உள்ள இடங்களில் பணிபுரிவதால் காது கேளாமல் போகுமா?**

ப : "இது தவறான கருத்து. எனது அனுபவத்தில் கோவை மில்களில் பணிபுரியும் தொழிலாளர்களுக்குக் காது கேளா குறை ஏற்படவில்லை. ஆனால் ஆசிரியர் பணியில் புரிபவர்களுக்குத்தான் காது குறைபாடு ஏற்படுகிறது.

**கே : சத்தமிட்டுச் சிரித்தால் காது செவிடாகுமா?**

ப : 'நிச்சயம் இல்லை. எதிரே இருப்பவர் நமது செவிப்பறை கிழிய சிரித்தால் வேண்டுமானால் ஆகலாம். ஆனால் நாம் சிரித்தால் நமது காதுக்கு நல்லது. சிரிப்பது காது நரம்புகளுக்கு நல்ல பயிற்சியை கொடுக்கிறது. சிரிப்பதன் மூலம் நரம்பு மண்டலங்கள் வலுவடைகின்றன. வாய் விட்டுச் சிரித்தால் நோய் விட்டு விலகும். சிரிக்கத் தெரியாதவன் பிழைக்கத் தெரியாதவன் என்பதும் பழமொழி.

**கே : காது கேட்கும் கருவி பயன்படுத்துகிறவர்களுக்கு சிகிச்சை அளிக்கிறீர்களா?**

ப : இல்லை. அவர்கள் காது அந்தக் கருவிக்கே பழகி விடுவதால் அதை மாற்றுவது சிரமம். அவர்கள் எப்போதுமே காது மேலேயே கவனம் செலுத்திக் கொண்டிருப்பார்கள். அதனால் அது சற்று சிரமம், முழுவதும் ஒத்துழைப்பு கொடுப்பார்களேயானால் உறுதியாகச் சொல்ல முடியும்.

**கே : காதைப் பாதுகாக்க எந்தவித முன்னெச்சரிக்கை தேவை?**

ப : தயிர் சோறு அதிகமாக சாப்பிடக் கூடாது. இளநீர், குளிர்பானங்கள் அடிக்கடி உபயோகப்படுத்தக் கூடாது. குளிக்கும் போது பஞ்சை தேங்காய் எண்ணெயில் நனைத்து காதில் வைத்துக் கொள்வது நல்லது.

பேட்டி : **அரசு கிருத்திகா**

# ராஜாளி® நான்-ஸ்டிக் அதிசயம்

இதுவரை தோசைக்கல், ஃப்ரை பான், கடாய் மட்டுமே தயாரித்து வழங்கி வந்த ராஜாளி இப்போது முதன் முதலாக யாரும் பார்த்திராத புதிய நான்-ஸ்டிக் இட்லி தட்டுகளும், நான்-ஸ்டிக் மில்க் பாய்லரும் தயாரித்து வழங்கி உங்களை அதிசயத்தில் ஆழ்த்த வந்திருக்கிறது.

**தொடர்கிறது...**

**இதெல்லாந்தான் கிடைக்கிறதே! இதிலென்ன அதிசயம்?!**





**அதிசயம்தான்!**




மில்க் பாயலர் கூட
ராஜாளி நான்-ஸ்டிக்கா?!

- சாதாரண மில்க் பாய்லரில் உட்புறம் பாலேடு படிந்து கொள்வது போல் ராஜாளி நான்-ஸ்டிக் மில்க் பாய்லரில் ஒட்டாது
- தொடர்ச்சியாக உபயோகப்படுத்திய பின்பும் கூட பாத்திரத்தில் முந்தய காய்ச்சிய பால் வாசம் இருக்காது.
- சுத்தம் செய்ய எளிது
- வழவழப்பான டஃப்லான் உட்புறம் பூச்சினால் பால் திரிந்து போகாது
- இது அகல வடிவமைப்பு பாத்திரமாகையால் எரிபொருள் மிச்சம்




- எண்ணெய் தடவாமலேயே தட்டிலிருந்து இட்லிகளை எடுக்கலாம்
- இட்லி ஒட்டாததால் மாவு விரயம் ஆகாது.
- நேரமும், எரிபொருளும் மிச்சம்.
- தட்டுகள் சுத்தம் செய்வது எளிது.
- எல்லா குக்கர் & இட்லி குக்கர்களிலும் பொருந்தக்கூடியது
- 4 தட்டுகள் மேலும் 6 தட்டுகளாக கிடைக்கிறது

**நான்-ஸ்டிக்கில் இவையனைத்தும் கிடைப்பது அதிசயம்தானே!!**

- ❑ தோசைக்கல் (Flat & Concave) ❑ கடாய் ❑ ஆப்பக் கடாய்
- ❑ இட்லித் தட்டுக்கள் ❑ மில்க் குக்கர்
- ❑ சாஸ் பான் ❑ ஃப்ரை பான் ❑ ஹாட் டோஸ்டர்

எல்லா பிரபல பாத்திரக் கடைகளிலும் கிடைக்கும்



ISI முத்திரையினைக் கொண்டது



**RAJALI®**
**HOME EQUIPMENTS**

50-A, Appar Swamy Koil Street, Thiruvottiyur, Madras - 600 019. ☎: 543391, 543867

• நாகரத்தினம்



• மலர்க்கொடி



நரகாசுரன் இறந்த நாளை தீபாவளியாகக் கொண்டாடுகிறோம். ஒருவன் இறந்ததற்காகவா வருடா வருடம் விழா எடுக்கிறோம்? அப்படியல்ல. நரகாசுரனை தனியொருவனாகப் பார்க்காமல் தீமைகளின் மொத்த உருவகமாக எண்ணி, தீயனவற்றை தெய்வம் அழிக்கும் நாளாக தீபாவளியைக் கருதுகிறோம். அதனால்தான் எண்ணெய்க் குளியல், விருந்து, புத்தாடை, வாணவேடிக்கை எல்லாமே.

இன்றைய காலகட்டத்திலும் நரகாசுரன் வெவ்வேறு வடிவங்களில் உலவுவதை உணரமுடிகிறது. எந்த நரகாசுரன் – அதாவது தீயசக்தி – உடனடியாக முன்னுரிமை கொடுத்து அழிக்கப்பட வேண்டியவன்? இதோ சிலரது அழுத்தமான, ஆக்ரோஷமான ஆலோசனைகள்.

# நசுக்கப்பட வேண்டிய நரகாசுரர்கள்!

திருமதி நாகரத்தினம்

"ஊழல் அரக்கனைத்தான் உடனடியாக ஒழிக்கணும். சமீபத்திலே ஒரு படத்திலே கூட வசனம் வந்ததே. "மீதி நாடுகளிலே சட்டத்தை மீறுவதற்கு லஞ்சம் வாங்குவாங்க. நம்ம நாட்டிலே சட்டப்படி நடக்கவே லஞ்சம் வாங்குவாங்க"ன்னு. பல நாடுகளிலே அரசியல் கட்சிகள் தொழிலதிபர்கள்கிட்டேயிருந்து பெருமளவில் லஞ்சம் வாங்குவது உண்மைதான். ஆனா நம் நாட்டிலே அதோடு நிக்கல்லியே. ஏழை, நடுத்தர மக்கள் கூட பல விஷயங்களுக்கு லஞ்சம் கொடுத்துத் தொலைக்க வேண்டியிருக்குதே. இந்த லஞ்ச அரக்கன் எங்களைப் படுத்தியபாடுகளில் ஒண்ணைச் சொல்றேன்.



• டாக்டர் கோமதி

சொந்த வீட்டை வழக்கு காரணமாக பூட்டி வைக்க வேண்டிய நிலைமை. மின் வாரியத்திலே லஞ்சம் கொடுத்து எங்கள் வீட்டின் மின் இணைப்பை எங்கள் வீட்டின் மேல் பகுதியிலே இருக்கிறவங்க தங்களுக்கு மாத்திக்கிட்டாங்க. எங்க மீட்டர் இப்போ அவங்களுக்கு, அதிகாரபூர்வமில்லாத வழியில், பயன்பட்டுக்கிட்டிருக்கு. மின்வாரியத்திலே போய்க் கேட்டால் "நடந்ததை மாத்த முடியாது. அதே சமயம் உங்க பேரிலே ஒரு மீட்டர் இருப்பதாலே இன்னொரு மீட்டரையும் தர முடியாது. சில ஆயிரங்களை வெட்டினா, குறுக்கு வழியிலே உங்க வீட்டுக்கும் கனெக்ஷன் தரோம்"கிறாங்க. வயித்தெரிச்சலா இருக்கு. பணம் படைச்சவங்க பலரும்



• பத்மாவதி

"நேரம் இல்லே. தெம்பு இல்லே. தைரியம் இல்லே"ன்னு வெவ்வேறு காரணங்களாலே ஊழலுக்குத் துணை போவதாலே எங்களைப் போன்றவங்களும் அவதிப்படறோம். கண்ணன் நேரிலே வந்தால் "உன் சக்கராயுதத்தாலே ஊழல் அரக்கனை முதல்லே ஒழிச்சுடு"ன்னு தானே கேட்பேன்."

## செல்வி மலர்க்கொடி

"வேறே என்ன, வேலையில்லாத் திண்டாட்டம்கிற ராட்சஸனைத்தான் முதல்லே ஒழிக்கணும்னுவேன். காலேஜிலே படிச்சுக்கிட்டிருக்கிற எனக்கு வருங்காலம் ஒரு பெரிய கேள்விக்குறியாக இருக்கு. படிச்சு முடிச்சு என் அண்ணன் மூணு வருஷமா வேலைக்காக அலைந்து நொந்து போய், இப்பத்தான் ஒரு வழியா ஒரு தனியார் நிறுவனத்திலே நுழைஞ்சிருக்காரு. சுயதொழில், வியாபாரம் இதையெல்லாம் மேற்கொண்டால் வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்கலாம்கிறாங்க. ஆனா இவற்றிற்கும் குறிப்பிட்ட தொகையாவது தேவைப்படுதே. இதையாவது அரசு, கடனாகவாவது, கொடுத்தால் அது வேலையில்லாத் திண்டாட்டத்தின் மீது எறியப்படும் ஒரு சக்தி மிகுந்த ஆயுதமாக இருக்கும்."

## டாக்டர் கோமதி

"சுற்றுப்புற மாசுஎன்ற அரக்கனைத்தான் முதலிலே அழிக்கணும். சொல்லப் போனால் இவனது அசுர வளர்ச்சியில் நமக்குப் பெரும் பங்கு உண்டுன்றது வேதனையான விஷயம். 'ஸிலிகோஸிஸ்' என்ற புதிய வியாதியெல்லாம் இதனாலே உருவாகிக்கிட்டிருக்கு. பதினான்கு வயதுப் பெண் ஒருத்தி அசுத்தமான நீரைத் தொடர்ந்து அருந்திய காரணத்தாலே வாந்தி, பேதின்னு பலவிதங்களில் பாதிக்கப்பட்டு சிகிச்சைக்கு வந்தாள். சோதித்துப் பார்த்ததில் காலரா என்பதும், இதற்குக் காரணம் அசுத்த நீர் என்பதும் புரிந்தது. என்ன முயற்சித்தும் அவளை எங்களால் காப்பாற்ற முடியல்லே. தெருவில் நடக்கும்போது வண்டிகள் விடும் புகையிலே நம் ஆரோக்கியம் பாதிக்கப்பட நிறைய வாய்ப்பு உண்டு. சுற்றுப்புற மாசினால் "செரிப்ரல் மலேரியா"ன்ற வகை நோய் வருது. இதனால் உயிரிழப்பவர்களும் நிறைய பேர் உண்டு. வீடுகள் இருக்கும் பகுதியிலிருந்து மிகவும் தள்ளியே தொழிற்சாலைகளை அனுமதிப்பது, தண்ணீரைத் தேங்கவிடாமல் போதிய ட்ரெயினேஜ் வசதிகளை செய்து கொடுப்பது இப்படிப் பல ஆயுதங்களைப் பயன்படுத்தி இந்த அரக்கனை ஒழிக்கலாம்."

---

வாழைத் தண்டு கறிக்கு இறக்கு முன் ஒரு ஸ்பூன் பச்சரிசி, ஒரு ஸ்பூன் உளுந்து, நான்கு மிளகு, ஒரு மிளகாய் வற்றல் இவற்றை வறுத்துப் பொடி செய்து அதில் தூவி கிளறி இறக்கி வைத்தால் மணமும், சுவையும் தூக்கலாக இருக்கும்.

— லலிதா நடராஜன்



## திருமதி பத்மாவதி

"ஜாதிமத வேறுபாடுகளை இளம் வயதிலேயே விதைக்கும் இப்போதைய சமூக முறை தான் முதல்ல ஒழிக்கப்படணும். என்னுடைய உறவினர் பையனும், அவனுக்குப் பக்கத்து வீட்டுச் சிறுவனும் ஒரே பள்ளிக்கூடத்திலே படிச்சாங்க. நெருங்கிய நண்பர்கள். இரண்டு குடும்பங்களுமே ஒரே மாதிரி பொருளாதாரப் பின்னணி கொண்டவைதான். இந்தப் பையன்களோட அப்பாக்களும் படித்து நல்ல வேலைகளில் இருப்பவங்க. இந்த நிலையில், தொண்ணூறு சதவீதம் மதிப்பெண்கள் வாங்கிய என் உறவுப் பையனுக்கு அவன் விரும்பிய சீட் (தொழிற்கல்வி கூட இல்லை, சாதாரண கல்லூரியில் அவன் கேட்ட கல்விப் பிரிவைச் சொல்கிறேன்) கிடைக்கல்லே. அதே சமயம் இவனை விட பல மதிப்பெண்கள் குறைந்து வாங்கின பக்கத்து வீட்டுப் பையனுக்கு அவனது ஜாதி காரணமாக அவன் விரும்பிய மேற்படிப்பு கிடைத்திருக்கிறது. இருவரின் நட்பிலும் இப்போது விரிசல். அரசியல் காரணங்களுக்காக இப்படிப்பட்ட அநியாயங்களை நடக்கவிடலாமா? தகுதியையும், திறமையையும் பின்னுக்குத் தள்ளும் எந்த முறையுமே ஒழிக்கப்பட வேண்டாமா? இடஒதுக்கீடு தேவையென்றால் அது பொருளாதாரப் பின்னணியை மட்டுமே கொண்டதல்லவா இருக்க வேண்டும். அப்படி இல்லையென்றால் அது அவநம்பிக்கை, தாய்நாட்டின் மீதுள்ள பற்றுகுறைதல், பிரிவினை எண்ணங்கள் இவற்றையல்லவா வளர்க்கும்?"

— ஜி.எஸ்.எஸ்.

# இன்றுவரை காணாத சௌகரியம் உங்கள் குழந்தைக்கு



## புதிய ஃபிட்டி டயாப்பர் – வியப்பூட்டும் வகையில் 8–12 மணி நேரம் வரை உலர்வுடன் இருக்க

நீண்ட நேர பயணமா, விருந்து நிகழ்ச்சியா அல்லது பிக்னிக்கா... இனி கவலையே இல்லை. இதோ வந்துவிட்டது, ஓர் உன்னத டயாப்பர். அது 8 முதல் 12 மணி நேரம் வரை உலர்வுடன் இருக்கும். குழந்தைக்கு சௌகரியம். உங்களுக்கோ சந்தோஷம்.



புதிய ஃபிட்டி – உலகெங்கிலுமுள்ள தாய்மார்களின் நம்பிக்கையைப் பெற்றது. ஈரத்தை உறிஞ்சி, உள்ளடக்குவதற்கு டபுள் புளு ட்ரை லைனர் மற்றும் டபுள் லேயர் பாலி பீட்ஸ் கொண்டது. மற்ற எந்த டயாப்பரைக் காட்டிலும் இது அதிகநேரம் உலர்வுடன் இருக்கக்கூடியது. அதுமட்டுமல்ல, டயாப்பரை மாற்றும் நேரத்தை சுட்டிக்காட்டும் புதுமையான வெட்னஸ் இண்டிகேட்டரும் இதில் உண்டு.

எனவே, நீங்கள் டயாப்பர் வாங்கும்போது தரத்தை விட்டுக்கொடுக்காதீர். ஃபிட்டியின் பாதுகாப்பை வழங்குங்கள். அது உங்கள் குழந்தைக்கு சௌகரியம், உங்களுக்கும் கூட.




**Fitti**
டிஸ்போஸபிள் டயாப்பர்ஸ்

**குழந்தைக்கு நீண்ட நேர மகிழ்ச்சி – உங்களுக்கும்தான்**

ஸ்டாக்கிஸ்டுகள் விண்ணப்பிக்கவும்.

HansaVision RRG 15671 TAM

சென்ற இதழில், மேல் உதடு பிளவு, அன்னப் பிளவு ஆகியவை குறித்த நவீன சிகிச்சை முறைகள் பற்றி பிரபல முக சீரமைப்பு நிபுணர் டாக்டர் எஸ்.எம். பாலாஜி விளக்கமாக விவரிக்க கண்டோம். இம்முறை தாடை மூட்டில் ஏற்படும் குறைகள், அதாவது தாடை மூட்டு நோய், வாய்ப் பூட்டு நோய், மூட்டு விலக்கம் போன்றவைகள், அவற்றை நிவர்த்தி செய்யும் முறைகள் பற்றி டாக்டர் பாலாஜி கூறுவார். தாடை மூட்டு அறுவை சிகிச்சையில் எவ்விதத் தோல்வியுமின்றி சாதனை படைத்துள்ளவர் இவர். (டாக்டர் எஸ்.எம். பாலாஜி, இஸபெல்லா மருத்துவமனையிலும் (தொ.பே. 4991081), தன்னுடைய பாலாஜி டென்டல் கிளினிக், 294, திருவல்லிக்கேணி ஹைரோடு, சென்னை - 5 லும் (தொ.பே. 842423) நோயாளிகளைப் பார்க்கிறார்).

தாடை மூட்டு, உடம்பில் உள்ள மற்ற மூட்டுகளிலிருந்து பல விதங்களில் மாறுபட்டே உள்ளது. 'மெனிஸ்கஸ்' என்னும் தட்டு தாடை மூட்டை இரண்டு அறைகளாக பிரிக்கிறது. இதில் எலும்போடு எலும்பு உரசும் இடங்களில் நார்தசையுள்ளது. உடம்பில் உள்ள மற்ற மூட்டுகளிலோ குறுத்தெலும்பு உள்ளது. விபத்தின் பொழுது, கீழ் தாடை நுனி, தாடை மூட்டை பிளந்து மூளையைப் பாதிக்காமல், அதுவாகவே நுனியில் உடைந்து விடும். இது இயற்கையாகவே தாடை மூட்டில் மட்டும் உள்ள பாதுகாப்பு முறை. அது மட்டுமின்றி, எப்பொழுதும் உபயோகத்தில் இருக்கும் மூட்டும் இதுவே.

தாடை மூட்டு வலி நேரிட காரணங்களை சற்று பார்ப்போம். மேல் தாடையில் உள்ள 16 நிலை பற்களும், கீழ் தாடையில் உள்ள 16 பற்களும், ஆக 32 பற்களும் சமமாக சேரும் பொழுது, இரண்டு பக்க தாடை மூட்டுகளில் ஒரு நடுநிலை ஏற்படுகிறது. சொத்தையினாலோ அல்லது ஈறு நெடுநாள் அழற்சியினாலோ பற்களை இழக்க நேரிடும் பொழுது, தாடை மூட்டின் நடுநிலை பாதிக்கப்பட்டு தாடை மூட்டு வலி ஏற்படுகிறது. இது தவிர, பற்களை பழக்கத்தினால் அழுத்தமாக கடித்துக் கொண்டிருந்தால், விபத்தில் படும் அடி போன்ற பல காரணங்கள் உள்ளன.

சாதாரணமாக தாடை மூட்டு வலி முகத்தின் ஒரு பாகத்தை மட்டும் பாதிக்கும். உண்ணும் பொழுதும், உரையாடும் பொழுதும் மூட்டில் ஒரு விதமான சத்தம் கேட்கும். சில வேளையில் வலியினால் வாய் திறக்க இயலாது. மேல் பற்களும், கீழ் பற்களும் சீராக ஒன்றோடு ஒன்று சேராது. பொதுவாக காதை சுற்றித் தலையின் ஒரு பக்கத்திலும், கீழ்த் தாடையிலும், கழுத்திலும் வலி அதிகமாக இருக்கும். ஆகவே, இதை சரி செய்ய ஒரு பல் மருத்துவரை அணுகுவதே முறையாகும். தாடை மூட்டு சிகிச்சையை ஆரம்பிக்கும் முன்னால், அதற்கான காரணத்தைத் தெரிந்து கொண்டு, அதனைச் சரி செய்ய வேண்டும். பாதிக்கப்பட்டவர்கள், தாடை மூட்டை கவனமாக உபயோகிக்க வேண்டும். அதிக கடின பொருட்களை உட்கொள்ளக் கூடாது. சதை பிடிப்பினால் வரும் வலியை நீக்க சூடாக ஒத்தடம் கொடுக்க வேண்டும். இதற்கென மின்சார சூடு செய்யும் கருவிகள் உள்ளது. மருந்து, மாத்திரைகளினாலும் நிவாரணம் அளிக்கலாம். பற்களை கடிக்கும்

# முகச்சீரமைப்பு செய்து கொள்ள...



டாக்டர் எஸ்.எம். பாலாஜி

பழக்கம் உள்ளவர்களுக்கு, இரண்டு தாடை பற்களின் இடையே ஒரு தட்டு செய்து கொடுப்பது அவசியம். பிறகு, பற்கள் சமமாக சேர்கின்றனவா என்று சோதித்துப் பார்த்து, அதனை சரி செய்ய வேண்டும். ஒரு சில வேளையில், மூட்டிற்குள் வலி நீக்க ஊசி போட நேரிடும். இவை அனைத்து முறைகளும் செயல்படாத நிலையில், அறுவை சிகிச்சை செய்து, பாதிக்கப்பட்ட எலும்பை சீர் செய்வார்கள்.



• வாய்ப்பூட்டு நோய், கீழ்த் தாடை குன்றியிருத்தல் இவை அறுவை சிகிச்சையால் சரி செய்யப்பட்டிருப்பதைக் காணலாம்.

வாய் பூட்டு நோய் என்பது, ஒரு பக்கமோ அல்லது இரண்டு பக்கமோ ஏற்படலாம். இதனால் வாயைத் திறப்பது கடினமாகும் அல்லது முற்றிலும் திறக்க இயலாது. இவர்கள் சிறு வயதிலிருந்து தங்கள் நாக்கை பார்த்திருக்கமாட்டார்கள். பேசுவது பிறருக்கு விளங்காது. ஒழுங்கான உணவு உண்ண முடியாது. இக்குறையினால், கீழ் தாடையின் வளர்ச்சி மிகவும் குன்றி, முகமே ஒரு குருவியைப் போல் இருக்கும். மனநிலை பாதிக்கப்படுவதல்லாமல், சரியான உணவு உண்ண இயலாததால், உடல் நிலையும் பாதிக்கப்பட்டிருக்கும். இரண்டு முக்கிய காரணங்கள் மூலம் இந்நிலை ஏற்படுகிறது. சிறுவயதில் கீழ்தாடையில் அடிபட்டு, மூட்டில் சேரும் தாடை நுனி உடைந்து, அதை சுற்றி இரத்தம் கட்டி, எலும்பாக மாறிவிடும். இந்த எலும்பு தாடையை மூட்டோடு சேர்த்து விடும். அது மட்டுமின்றி, வெகு நாளாக காது நோயை கவனிக்காமல், அது தாடை மூட்டு வரை பரவி மூட்டு நோய் உண்டாக்கும். இதனை குணப்படுத்த அறுவை சிகிச்சை செய்வது அவசியமாகும்.

அறுவை சிகிச்சைக்கு முன், தாடை மூட்டில் உள்ள குறைபாடுகளை அறிய X-rays, CT. Scan போன்றவைகள் உதவியாக இருக்கும். எக்ஸ்ரேயில் Cephalogram, DPG, TMJ view என்ற மூன்று வகை தேவைப்படும். செஃபலோகிராம் மூலம் கீழ் தாடை எவ்வளவு பின் நோக்கி உள்ளது, மேல் தாடையின் வளர்ச்சி சரியாக உள்ளதா என்று அறிந்து கொள்ளலாம். OPG மூலம் தாடை எலும்பிற்குள் பற்கள் ஏதாவது வெளிவராமல் சிக்கி உள்ளதா என்பதை பார்த்துவிடலாம். TMJ view அதாவது தாடை மூட்டினை மட்டும் தெளிவாக, காட்டும் படம்; அறுவை சிகிச்சையின் பொழுது எடுக்க வேண்டிய எலும்பின் அளவைத் தெரிந்து கொள்ள இன்றியமையாதது.

அறுவை சிகிச்சைக்குப் பின் தழும்பு வெளியே தெரியாமல் இருக்க, காதுக்கு சற்று மேலே சிகிச்சை செய்வார்கள். இதனால் அவ்விடத்தில் இருக்கும் முடியை அறுவை சிகிச்சைக்கு முன் எடுத்து விட வேண்டும். வாய் திறக்க இயலாததால், மயக்கம் கொடுப்பது கடினமாகும். இவர்களுக்கு மூக்கின் துவாரம் மூலம், மிக மெல்லிய குழாயின் நுனியிலுள்ள வெளிச்சத்தினால் மயக்கம் கொடுக்க வேண்டும். அல்லது, நேரடியாக சுவாசிக்கும் குழாயில் மயக்கம் கொடுக்க வேண்டும். அறுவை சிகிச்சையின் பொழுது, மூட்டிற்கும், தாடை எலும்புக்கும் இடையே உள்ள வேண்டாத எலும்பை வெட்டி எடுக்க வேண்டும். பெரும்பாலோர்க்கு கீழ் தாடை வளர்ச்சி குன்றிப் போய் இருக்கும். இதனையும் சரி செய்ய வேண்டும்.

இந்த அறுவை சிகிச்சையின் முதல்

அல்வா வகைகளில் சிலவற்றிற்கு திக்கான எருமைப்பால் ½ லிட்டரும், சிலவற்றிற்கு திக்கான தேங்காய்ப்பால் 1 கிளாஸும் சேர்த்து அல்வா கிளறலாம். முந்திரியை சீவி அல்வா கிளறும் போதே சேர்க்கவும். அல்வா இடை இடையில் முந்திரி அகப்பட்டு சுவையாய் இருக்கும். அல்வா செய்வதானாலும் 4 ஸ்பூன் ஜவ்வரிசியை ஊறவைத்து அரைத்துக் கலக்கவும். ஹோட்டல் அல்வா போல் கெட்டியாகவும், இழுத்தால் இழுபடும் தன்மை உடையதாயும் இருக்கும்.

— கமலா



இதோ,

இந்தியாவின் மிக அற்புத அலங்கார

வாட்ச்சுகள்.



உத்சவ் வாட்ச்சுகள். விசேஷ வைபவங்களுக்காக வரும் அழகு அலங்காரங்கள். பெண்மையின் உண்மையான தனித்வத்தை அழகுறக் காட்டும் சின்னங்கள் இவற்றின் டயல்களை அலங்கரிக்கின்றன. ஆஹா, கொள்ளை அழகு! சொல்லில் அடங்கா அழகு! இந்த அற்புத எழில்கள் 5 மைக்ரான் தங்க முலாமிட்ட பிரேஸ்லெட்டுகளுடன் வருகின்றன. விசேஷ வைபவங்களுக்கு கம்பீரமும் பகட்டும் சேர்க்கும் அலங்காரங்கள் இவை.

அழகுற தன்னை அலங்கரித்துக் கொள்ளும் மங்கையின் வாட்ச்சும் அலங்கார அழகுடன் இருக்க வேண்டாமா?

hmt

utsav

Mudra:HMT:0575:96:TAM

ஒரு கவரில் தவறுதலாக ஸ்டாம்ப் ஒட்டி விடுகிறோம். அதனை வீண் அடிக்கவும் மனம் வராது. திரும்ப உபயோகிக்க வேண்டுமானால் சேதமில்லாமல் எடுக்கப்பட வேண்டும். இதற்கான வழி : ஸ்டாம்ப் ஒட்டப்பட்டிருக்கும் கவர் பாகத்தின் பின்புறம் தண்ணீர் தடவவும். அது சற்று ஊறியதும் ஸ்டாம்பைப் பிரித்து எடுத்தால் சேதமின்றி எடுக்கலாம்.

— ஜெயஸ்ரீ



---

குறிக்கோள் வாயை நன்றாக திறப்பதுதான். பின்பு குன்றிப் போன தாடையை சரி செய்யலாம். கீழ்த் தாடையின் அளவையும் அமைப்பையும் சரி செய்ய விலா எலும்பை உபயோகிக்கலாம். முன்பு இருந்த கீழ் தாடை நுனி (Condyle) ஒரு வளர்ச்சி மையமாக (Growth Centre) கருதப்பட்டது. அது இல்லாத காரணத்தால், உடம்பில் உள்ள மற்ற வளர்ச்சி மையம் கொண்ட எலும்பை அந்த இடத்தில் வைப்பதே முறை என்று கருதப்பட்டது. ஆகவே, விலா எலும்பை தேர்ந்தனர். இதனால், கீழ் தாடையின் வளர்ச்சி மேலும் குன்றிப் போகாமல் தடுக்கப்பட்டது. வெட்டி எடுத்த மிஞ்சிய விலா எலும்பில் வளர்ச்சி மையம் இருப்பதால், அது மீண்டும் பழையபடி வளர்ந்து விடும். இம்மாதிரியான அறுவை சிகிச்சைக்குப் பின், நோயாளியைக் குறைந்தது 5 நாட்கள் மருத்துவமனையில் வைத்திருக்க வேண்டும்.

சிகிச்சைக்குப் பின் வாய் நன்றாக திறந்து மூடும் பயிற்சி செய்வது மிக மிக இன்றியமையாதது. செய்யாவிடில், மீண்டும் வாய் மூடிக் கொள்ளும். ஒவ்வொரு நாளும் வாய் திறக்கும் அளவைக் குறித்துக் கொள்ள வேண்டும். அளவு குறைந்தால், வாய் பழையபடி மூடி கொள்ளப் போகிறதற்கான அறிகுறியாகும்.

மேற்கண்ட நிலைகளை தவிர அன்றாடம் நாம் காண்பது தாடை மூட்டு விலக்கம். மூட்டு விலக்கு, தாடையில் ஒரு பக்கம் அல்லது இரண்டு பக்கமும் ஏற்படும். இந்நிலை ஏற்பட பல காரணங்கள் உள்ளன. பெரிதாகக் கொட்டாவி விடும் பொழுது, வாந்தி எடுக்கும் பொழுது, பெரிதாக சிரிக்கும் பொழுது அல்லது வலிப்பு வரும் பொழுது மூட்டு விலக்கம் ஏற்படலாம். சிலருக்குத் தாடை மூட்டின் அமைப்பினால் அல்லது அதை ஒற்றி இருக்கும் சதை பிடிப்பின்றி இருப்பதனால் மூட்டு விலக்கம் ஏற்படும்.

சதையை உறுதியாக்க ஆல்கஹால், டிங்க்ச்சர் ஆஃப் அயோடின் போன்ற மருந்துகளை மூட்டிற்குள் செலுத்தலாம். மூட்டின் அமைப்பு மாறுபட்டிருந்தால் அதற்கு தகுந்த அறுவை சிகிச்சை செய்யலாம்.

தாடை மூட்டில் ஏற்படும் நோய்கள் பற்றி அறிய மற்றும் அறுவை சிகிச்சை இன்றி சில தாடை மூட்டு நோய்களை குணப்படுத்த, தாடை மூட்டு உள்நோக்கும் கருவி (TMJ Arthroscope) உபயோகப்படுகிறது. தாடை மூட்டை ஒட்டி உள்ள தோலில் ஒரு துவாரம் செய்து, அதனுள் இந்தக் கருவியை செலுத்த வேண்டும். இதனுள் துல்லியமாக பார்க்க லென்ஸ் மற்றும் பல வித சிகிச்சை செய்ய கருவிகள் கொண்ட ஒரு நுனி உள்ளது.

சில வேளையில் மூட்டில் உள்ள மென்ஸ்கஸில் சிறு விரிசல் இருந்தால், இந்தக் கருவி மூலமே தைத்து விடலாம். தாடை மூட்டில் சுற்றி இருக்கும் வெளிப்படலம் கிருமிகளால் நாசப்பட்டு, சீழ் கட்டி இருக்கும். அப்பொழுது ஆர்த்ரோஸ்கோப் மூலம், மருந்தைச் செலுத்தி சுத்தம் செய்யலாம். அடிபட்டு, மூட்டை சுற்றி இரத்தம் கட்டி இருந்தால், அது எலும்பாக மாறி, வாய்ப்பூட்டு நோய் நேரிட செய்யும். சரியான நேரத்தில், இந்தக் கருவியினால் இரத்தக்கட்டியை எடுத்து விடலாம். அது மட்டுமின்றி, எக்ஸ்ரே, சிடி. ஸ்கேன் மூலம் கண்டுபிடிக்க முடியாத சில தாடை மூட்டு நோய்களை, ஆர்த்ரோஸ்கோப் மூலம் அங்குள்ள சதையை எடுத்துப் பரிசோதனைக்கு அனுப்பலாம். இந்தக் கருவியின் மூலம் பெரும் அறுவை சிகிச்சை செய்வதை தடுக்கலாம். இதனை உபயோகிக்கும் பொழுது, பாதிக்கப்பட்ட நபர் சுய நினைவோடு இருப்பார்கள். இக்கருவியை மேலும் நவீன முறையோடு உபயோகிக்க ஆராய்ச்சிகள் நடக்கின்றன. இதனைப் பற்றி மேலும் அறிய டாக்டர் பாலாஜி விரைவில் வெளிநாடு செல்ல இருக்கிறார்.

# பயணங்கள் முடிகின்றன

அகிலா கிருஷ்ணன்

மகேஷ் பெருமூச்சு விட்டுக் கொண்டான். காலையில் இருந்து வீட்டுக்குள்ளே வருவோரும், போவோருமாக, அமர்க்களம். ஐம்பது வருடங்களாக அப்பாவும் அம்மாவும் குடித்தனம் நடத்திய வீடு. மகேஷ் ஒரே பையன். திருமணமாகி பதினைந்து வருடங்களாக டெல்லியில் குடித்தனம். அப்பாவையும் அம்மாவையும் கூட வந்து இருக்கும்படி எத்தனையோ முறை கூப்பிட்டும் மறுத்தே வந்து இருக்கிறார்கள். இப்போது, அப்பாவிற்கு லேசான மாரடைப்பு ஏற்பட்டதால் கூட வருவதற்கு ஒத்துக் கொண்டு கிளம்புகிறார்கள். சாமான்களை இரண்டு அறைகளில் போட்டுப் பூட்டி விட்டு, உறவினர் ஒருவரை வாடகைக்கு வைத்து விட்டுக் கிளம்புகிறார்கள். அம்மாவின் தோழியர் ஒவ்வொருவராக வந்து விடை கொடுக்கிறார்கள்.

இவ்வளவு பேரா?

அம்மா. அன்பே உருவமாக, பண்பே குணமாக, எப்படியிருந்த அம்மா! 'வாழ்வாங்கு வாழ வேண்டும்' என்று அடிக்கடி சொல்லி அப்படியே வாழ்ந்து கொண்டிருந்த அம்மா! இப்பொழுது என்னவாயிற்று. மகேஷிற்குப் புரியவில்லை. சுமதி திருமணமாகி வந்த புதியதில் அன்பைச் சொரிந்தவள். இந்தப் பத்து வருடங்களாக அவள் கோப தாபங்களும், சிடு சிடுப்பும், கடு கடுவென்ற முகமும், குத்தல் பேச்சுக்களும்.

சிறிய வயதில், "நண்பர்களிடம் குற்றம் குறை பார்க்கக்கூடாது மகி. மனிதர்களை, அவர்கள் குறை நிறையோடு ஏற்றுக் கொள்ளப் பழகிக் கொள். வளைந்து கொடுக்கும் தன்மை வந்தால் பிறகு உனக்கு எதுவுமே கஷ்டமாகத் தோன்றாது" என்பாள்.

அந்த அம்மாவா? சுமதி போன வருடம் சாதாரணப் பட்டுப் புடைவை வாங்கி அனுப்பிய போது, 'ஏன் உன் மனைவிக்கு மனசாகவில்லையா?" என்று சண்டை பிடித்தவள், இந்த வருடம் கனத்த ஜரிகை போட்ட புடைவை அனுப்பிய பொழுது, "ஏன் அம்மா வயசானவள் கனமாகக் கட்ட முடியாது என்பதால் இதை அனுப்பி இருக்கிறாளா?" என்றாள். நல்லவளோ கெட்டவளோ, சுமதி பண்பான குடும்பத்திலிருந்து வந்தவள், பெரியவர்களைப் பிடித்ததோ, பிடிக்கவில்லையோ, ஆதரிக்கத் தான் வேண்டும் என்று திடமான கொள்கைகளுடன் தான் வந்திருக்கிறாள். தோற்றாலும் ஜெயித்தாலும் வாழ்க்கை ஒன்றுதான் என்பது போல கசப்போ, இனிப்போ காலம் ஓடத்தான் போகிறது. அவசியமே இல்லாமல், முள் படுக்கையிலே ஏன் படுக்க வேண்டும்? அம்மாவின் அசட்டு அகங்காரத்தின் காரணமே புரியவில்லையே! சுமதி என்று இல்லை. அப்பா, குழந்தைகள், மகி எல்லோரிடமும் கூட காரணமே இல்லாமல் வெறுப்பை வாரிக் கொட்டுகிறாளே.

அப்பாவும் இதை எல்லாம் கவனிக்காமல் இல்லை. ஆனால் அவர் எதுவுமே பேசுவதில்லை. அவசியமான போது ஒரு சொல் சொல்லுவார், அம்பு போலத் தைக்கும். இத்தனை வருடங்களாகப் பிரச்னைகளைப் பெரிது படுத்தாமல் சுமுகமாக ராஜ பாட்டையிலே போய்க் கொண்டிருந்த இல்லறம்,



கடைசிக் கட்டத்தில் கசப்பைக் கலக்க விரும்பாமல் மௌனம் சாதிக்கிறார்.

"மகேஷ், நான் போய் ஸ்வாமிஜியிடம் சொல்லிக் கொண்டு வருகிறேன்" அப்பா கிளம்பினார்.

ஸ்வாமிஜி குடும்ப நண்பர். காவி உடுத்திய சம்சாரி. சம்சாரத்தில் நீந்தி ஜெயித்த சன்யாசி.

"ஊரை விட்டுக் கிளம்பப் போகிறாயாமே?" என்று க்ஷேம லாபங்களை விசாரித்தார். சற்று நேரத்திற்குப் பின், "உன் மனசிலே என்னமோ உறுத்தல் இருக்கின்றது. என்ன?" என்றார் பளிச்சென்று.

"லக்ஷ்மியின் போக்கு மனசுக்கு வேதனையாக இருக்கு. அன்பே உருவாக இருந்தவள் அனலை அள்ளி வீசுகிறான். மருமகள் என்றில்லை பிள்ளை, பேரன் பேத்திகள், ஏன் என்

ளிடம் கூட வெறுப்பைக் கொட்டுகிறான். மகேஷ் பாவம். ஆசையாகக் கூட்டிக் கொண்டு போகிறான். பயமாக இருக்கின்றது. 'அங்கு என்னென்ன பேதங்கள் வரப் போகிறதோ' என்று" பெருமூச்செறிந்தார்.

ஸ்வாமிஜி சற்று நேரம் மௌனமாக இருந்தார். "மகாதேவா. இது சகஜமான மாறுதல். வயசானவர்கள் சற்று அதிகமாகவே சிடுசிடுப்பதைப் பார்த்து இருப்பே. இது உடம்பு தன்னாமையால் மட்டும் வருவது இல்லை. இந்த உலகமே சாஸ்வதம் என்ற மாயா விநோதம் நம் எல்லோர் மனசிலேயும் நிறைஞ்சிருக்கு. சில பேர் விவேகமாக வயசாகி விட்டது, நம்ப காலம், கணக்கு முடியப் போகிறது போகிற வழியைப் பார்க்க வேண்டும் என்று புரிந்து கொள்கிறார்கள். சில பேரால் இதை ஜீரணித்துக் கொள்ள முடிவதில்லை. வயதில் குறைந்தவர்களைப் பார்த்தால் எரிச்சல். 'நாம் போய் இவர்கள் இருக்கப் போகிறார்களே', என்ற தாபம். சிலர் வயசான காலத்தில் திடுமென இளமை வேஷம் போடுவார்கள். பார்த்திருக்கியோ. இதெல்லாம் பலவீனமான மனதின் விசித்திரங்கள். என்ன செய்வது? சத் சங்கமாகக் கூட்டிப்போ. பகவத் கீதை படிக்கச் சொல். லக்ஷ்மி உன்னதமான ஸ்த்ரீ. ஒரு கோடிட்டுக் காண்பித்தால் புரிஞ்சு கொண்டு விடுவாள்," என்று விடை கொடுத்தார்.

தமிழ்நாடு எக்ஸ்பிரஸின் கச கசப்பு ஏற்கெனவே சிடுசிடுத்துக் கொண்





சமீபத்தில் கிராமத்தில் உள்ள என் பாட்டி வீட்டிற்குச் சென்றேன். கொசுவை விரட்ட அவர்கள் கடைபிடித்த வழி மிகவும் எளிமையாகவும் தீங்கற்றும் இருந்தது. மாம்பூவை உலர்த்திப் பொடி செய்து தணலில் இட்டு தூபம் போடுகிறார்கள்.. கொசு வரவேண்டுமே, மூச்! வேப்பம் பூவையும் இதற்குப் பயன்படுத்தலாமாம்.

— எஸ். விக்னேஸ்வரி

xxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxx

டிருந்த லக்ஷ்மியின் மன நிலை இன்னமும் மோசமாக இருந்தது. மகாதேவனும் மகேஷ்ும் சாமான்களை ஒழுங்குபடுத்திவிட்டு அமர்ந்தனர். மூன்று அடுக்கு தூங்கும் வசதி கொண்ட த்ரீ டயர் பெட்டி. எதிரே ஒரு நடுத்தர வயதுப் பெண் தன் இரண்டு குழந்தைகளோடு பயணித்துக் கொண்டு இருந்தாள். பக்கவாட்டிலும் ஒரு பெண், தனது ஒரு பையன் ஒரு பெண்ணுடன் பயணித்துக் கொண்டிருந்தாள். இரண்டு பேரும் நிஜாமுதீனில் இறங்க வேண்டும். மகேஷ் நியூ டெல்லியில் இறங்க வேண்டும்.

இரவு ரயில் கிளம்பியதும் எல்லோரும் அலுப்போடு படுத்து விட்டார்கள். மறுநாள் காலை பெண்கள் எல்லோரும் பழகிக் கொண்டு விட்டார்கள். கலகலப்பு.

"ரயில் பயணம் போனாலே ஒரேயடியாகப் பசிக்கும்," என்று எதிரே இருந்த பெண் சொல்லிச் சிரித்தாள். வேர்க்கடலை, பழம், நாக்பூர் ஆரஞ்சு என்று மாற்றி மாற்றி சாப்பாடு, சாப்பாடு, சாப்பாடு.

இரவு போபால் வந்தவுடன் எல்லோரும் படுக்க ஆயத்தமானார்கள். எதிரே இருந்த பெண் சற்று நிதானித்தாள். அவள் குழந்தைகளை அவள் கூப்பிடும் விதமே வேடிக்கையாக இருந்தது. "ஏய், சோட்டீ, மோட்டீ, ஜஹஹ்தோ பகுத் கந்தா ஹை. கீசட் சாப் கரோ". (இந்த இடம் மிகவும் குப்பையாக இருக்கிறது. சுத்தம் செய்யுங்கள்.) அந்தக் குழந்தைகளும் இப்படியே பழக்கப்பட்டவர்கள் போலிருக்கிறது. குப்பை கூளங்களை அழகாகப் பொறுக்கி ஒரு பாலிதீன் கவரிலே போட்டு வெளியிலே எறிந்தார்கள். அன்று வாங்கி இருந்த நியூஸ் பேப்பரை எடுத்து மடித்து சீட்டைத் துடைத்து விட்டுப் படுத்துக் கொண்டார்கள்.

பக்கவாட்டிலே அமர்ந்திருந்த பையன், "அம்மா, நாம உட்கார்ந்திருக்கும் இடம் கூட கந்தாவா இருக்கு, சுத்தம் செய்யலாமா," என்று கேட்டான்.

"வேறு வேலை இல்லை. மேலே போய்ப் படு," என்றவன் படுக்கையைப் போட்டாள்.

காலை, ரயில் சற்றுத் தாமதமானதால், நிஜாமுதீன் ஸ்டேஷனை ஏழு மணிக்குத்தான் அடைந்தது. எதிரே இருந்த பெண் தன் குழந்தைகளுடன், விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டாள். ஒரே ஒரு கணம், அவள் பார்வை அவர்கள் உபயோகித்த சீட்டைப் பார்த்தது. திருப்தி கலந்த பெருமிதம் ஒரு கணம் அவள் முகத்தில் மின்னியது. பிறகு இறங்கிப் போனாள். பக்கவாட்டில் அமர்ந்திருந்த பெண்ணும் விடை பெற்றுக் கொண்டு குழந்தைகளுடன் இறங்கிப் போனாள்.

"சீ. என்ன பெண் இவள், அங்கே பாருங்கள் ஆரஞ்சுத் தோலியும், சாதத்துப் பருக்கைகளும், வேர்க்கடலைத் தோலுமாக அருவருப்பாக இருக்கிறது," என்று முகம் சுளித்துக் கொண்டாள் லக்ஷ்மி. மகாதேவன் சற்று யோசித்தார்.

"வாஸ்தவம் தான் லக்ஷ்மி, பயணம் என்பதே ஒரு கலைதான். இவள் சுத்தப்படுத்தி விட்டுப் போனதால் அவளுக்கு என்ன லாபம், அவள் அப்படியே போட்டு விட்டதால் அவளுக்கு என்ன நஷ்டம். எதுவும் இல்லை. இதோ நியூடெல்லி ஸ்டேஷன் வந்த பின் முழு ரயிலையும் சுத்தப்படுத்தி விடப் போகிறார்கள். ஆனால், எதிரே இருந்த பெண், இறங்குவதற்கு முன் ஒரு நிமிஷம், தான் உபயோகித்த இடத்தைப் பார்த்து திருப்திப் பட்டுண்டதை கவனிச்சியோ! அழுக்கையோ அசுத்தத்தையோ தான் பின்னால் விட்டுச் செல்லவில்லை என்ற ஆத்ம திருப்தி. இரண்டு நாட்களாகத்தான் உபயோகப் படுத்தின ரயிலுக்கு ஒரு மானசீக மரியாதை என்று கூடச் சொல்லலாம். வாழ்க்கை கூட ஒரு பயணம்தான் லக்ஷ்மி. ஒரு நாள் முடியத் தான் போகிறது. இறங்கத்தான் போறோம். இது நிச்சயம். வெறுப்பையும் கோபத்தையும் வச்சுட்டுப் போறோம் என்றால் நாமே நம் வாழ்க்கைக்கு உரிய மரியாதை தரவில்லை என்று அர்த்தம். அன்பை விதைத்து விட்டுப் போனால் எல்லோருக்குமே ஆனந்தம் தான்."

ராம பாணம், குறி தப்பாது. மகேஷ் தலையைக் குனிந்து கொண்டிருந்தான். லக்ஷ்மி யோசனையோடு வெளியிலே பார்த்துக் கொண்டிருந்தாள். பிரகதி மைதானைக் கடந்து கொண்டிருந்தது ரயில்.

"நேற்று நாக்பூரில் ஆரஞ்சு வாங்கினோமே. எல்லாவற்றையும் சாப்பிட்டு விட்டீர்களா என்ன? குழந்தை சுமதிக்கு ரொம்பப் பிடிக்கும். 'அம்மா வாங்கிண்டு வந்திங்களா?' என்று எப்பொழுதும் கேட்பாள்," என்றாள் சாவதானமாக.

தந்தையை ஏறிட்டுப் பார்த்த மகேஷின் கண்கள் பனித்திருந்தன.

# UNISCO

## VOLTAGE STABILISER



லோ வோல்டேஜ்னாலே
ஏஸி, டிவி, ஃபேன், லைட்
எதுவுமே ஒழுங்கா வேலை
செய்யறதில்லே, ரிப்பேர் வேறே
ஆயிடறது.



எனக்கு அந்த கவலையே
யில்லை; ஏன்னா நான் யுனிஸ்கோ
மாஸ்டர் ஸ்டெபியுலசர் வாங்கிட்டேன். அந்த
ஒரே ஸ்டெபிலைசர் முழு வீட்டுக்கும் எல்லா மின்
சாதனங்களுக்கும் கரெக்ட் வோல்டேஜ் தருது.
சிக்கனமான விலையிலே முழுமை
யான பாதுகாப்பு தருவது யுனிஸ்கோ
ஸ்டெபிலைசர்தான்.



அப்ப நானும் உடனே
யுனிஸ்கோ ஸ்டெபிலைசரையே
வாங்கிடறேன்.

8 Years guarntee

**UNISCO**

**VOLTAGE STABILISER**

ரூ.500/-லிருந்து விலைக்கு கிடைக்கும்.

VOLTAGE : From 100 V To 500 V
CAPACITY : From 0.5 KVA To 50 KVA

ஏர் கண்டிஷனர்ஸ், பிரிட்ஜ், மைக்ரோவேவ் ஓவன், கிரைண்டர், மோட்டார் பம்ப் மற்றும் எல்லா மின் சாதனங்களுக்கும் தனித்தனி ஸ்டெபிலைசர் மற்றும் முழு வீட்டிற்குமாக மாஸ்டர் ஸ்டெபிலைசரும் கிடைக்கும்.

இத்துறையில் 15 வருட அனுபவமிக்கவர்களால் தயாரிக்கப்படுவது யுனிஸ்கோ ஸ்டெபிலைசர்ஸ்.

**விபரங்களுக்கு:**

இராயல் என்டர் பிரைசஸ்
36, கற்பகாம்பாள் நகர், முதல்மாடி,
மைலாப்பூர், சென்னை - 4.
போன் : 4998366.

இராதா கம்பெனி,
கார்பரேஷன் ஷாப்பிங் சென்டர்,
மதுரை - 1. போன் : 743004.

-ADSTART



• கமலா











# இம்மாத இல்லத்தரசி

**பொருள் : குழம்பு**

## முதல் பரிசு ரூ. 300/-

## மருந்துக் குழம்பு

**தேவையான பொருட்கள் :**

| | |
|---|---|
| புளி | - எலுமிச்சை அளவு உப்புப் போட்டு ஊற விடவும் |
| மி. தூள் | - ½ டீஸ்பூன் |
| கடுகு | - சிறிது தாளிக்க |
| வெந்தயம் | - சிறிது தாளிக்க |
| சீரகம் | - சிறிது தாளிக்க |

**அரைக்க தேவையானவை :**

| | |
|---|---|
| கடுகு | - 1 டீஸ்பூன் |
| பரங்கிச் செக்கை | - கட்டை விரல் அளவு |
| சுக்கு | - கட்டை விரல் அளவு |
| பூண்டு | - 12 பல் |
| வெங்காயம் | - 1 |
| மிளகு | - 1 டீஸ்பூன் |
| தனியா | - 1 டேபிள் ஸ்பூன் |
| சீரகம் | - 1 டீஸ்பூன் |
| மிளகாய் வத்தல் | - 10 |
| வெந்தயம் | - ½ டீஸ்பூன் |
| பெருங்காயம் | - சிறிய துண்டு |
| (தூளாக இருந்தால்) | - ¼ டீஸ்பூன் |
| ந. எண்ணெய் | |
| (அ) க. எண்ணெய் | - 1 தேக்கரண்டி |

**செய்முறை :**

கடுகு, ப. செக்கை, சுக்கு, பூண்டு, வெங்காயம் தவிர்த்து மீதமுள்ள அரைக்கும் பொருட்களை ஒரு வாணலியில் எண்ணெய் சிறிது விட்டு வறுத்து பிறகு கடுகு, பரங்கிச் செக்கை, சுக்கு, பூண்டு வெங்காயம் சேர்த்து விழுதாக அரைக்கவும்.

புளி கரைத்து வடிகட்டி மஞ்சள் தூள் சேர்க்கவும், அரைத்த விழுதை கலக்கவும். அடுப்பில் சட்டியில் நல்லெண்ணெய் விட்டு கடுகு, வெந்தயம், சீரகம் சிறிது கறிவேப்பிலை வாசனைக்காக போட்டு வெடித்த பின் கரைத்து வைத்துள்ள புளிக் கரைசலை அதில் ஊற்றி தட்டு போட்டு மூடி தீயை அடக்கி வைக்கவும்.

குழம்பு கொதித்து சுண்ட ஆரம்பிக்கும் போது (கெட்டியாகும் போது) எண்ணெய் மேலே மிதந்து வரும் சமயம் தீயில் இருந்து இறக்கி விடவும்.

சிறுகுறிப்பு : இந்தக் குழம்பை மாதம் 2 முறையாவது சேர்த்துக் கொண்டால் வாயு தொல்லை இராது. உடம்பு வலி பஞ்சாய் பறந்து போய்விடும்.

— ஆர். கமலா, செகந்தராபாத் - 94.

## இரண்டாம் பரிசு ரூ. 200/-

## நார்த்தங்காய் குழம்பு

**தேவையான பொருட்கள் :**

| | |
|---|---|
| பச்சை நார்த்தங்காய் | - 1 |
| பச்சை மிளகாய் | - 6 |
| கடுகு | - ½ டீஸ்பூன் |
| வெந்தயம் | - ¾ டீஸ்பூன் |

| | |
|---|---|
| பெருங்காயம் | - ¼ டீஸ்பூன் |
| வெல்லம் | - 25 கிராம் |
| புளி | - 1 நெல்லிக்காய் அளவு |
| உப்பு | - தேவையான அளவு |
| நல்லெண்ணெய் | - 4 டேபிள் ஸ்பூன் |
| அரிசி மாவு | - 1 டீஸ்பூன் |
| கறிவேப்பிலை | - சிறிதளவு |

**செய்முறை :**

நார்த்தங்காய்த் தோலை உரித்து எடுத்துக் கொண்டு சிறு துண்டமாக நறுக்கிக் கொள்ளவும். வாணலியில் வெந்தயத்தை வறுத்துப் பொடி செய்து வைத்துக் கொள்ளவும்.

வாணலியில் நான்கு டேபிள் ஸ்பூன் எண்ணெயை விட்டு கடுகு, கறிவேப்பிலை, பெருங்காயம் இவற்றைத் தாளித்து, பச்சை மிளகாய், நார்த்தங்காய் துண்டங்களைப் போட்டு நன்கு வதக்கிக் கொள்ளவும். பின் புளியைக் கட்டியாகக் கரைத்துவிட்டு உப்புப் போடவும். நார்த்தங்காய் நன்கு வேகும் வரை கொதிக்கவிட வேண்டும்.

வெல்லம், வெந்தயப் பொடி இவற்றைப் போட்டு சேர்ந்து கொதித்த பின் அரிசிமாவைக் கரைத்துக் குழம்பில் ஊற்றி நன்கு கொதித்தவுடன் இறக்கவும்.

நார்த்தங்காய் குழம்பை சூடான சாதத்தில் பிசைந்து சாப்பிட்டால் மணமும் ருசியுமாக இருக்கும். பொங்கல், அரிசி உப்புமா போன்ற சிற்றுணவுடன் இதைத் தொட்டு சாப்பிட்டால் ருசியாக இருக்கும்.

மகப்பேறுக்குப் பிறகு தாய்மார்களுக்கு இந்தக் குழம்பு உடலுக்கு மிகவும் நல்லது. அஜீரணம், வாயுத் தொல்லைகளைப் போக்கும்.

— *கல்யாணி சர்மா, மும்பை - 71.*

**முதல் மாதம் மளிகை சாமான் வாங்கிய லிஸ்ட்டை பத்திரப்படுத்தி வையுங்கள். அடுத்த மாதம் சுலபமாக மளிகை லிஸ்ட் தயாரிப்பதற்கும் விலைப்பட்டியலுடன் விலையை ஒப்பிட்டுப் பார்ப்பதற்கும் உதவும். இது ஒரு அனுபவப் பாடம்.**

— ஜெயா



## மூன்றாம் பரிசு ரூ. 100/-

## புளிசேரிக் குழம்பு

**தேவையான பொருட்கள் :**

| | |
|---|---|
| துருவிய தேங்காய் | - ஒரு மூடி |
| பச்சை மிளகாய் | - 2 |
| மிளகாய் வற்றல் | - 2 |
| புளி | - நெல்லிக்காய் அளவு |
| வெள்ளை பூசணி | - சிறிய துண்டு |
| வெண்டைக்காய் | - 2 |
| தே. எண்ணெய் | - சிறிதளவு |
| கடுகு | - சிறிதளவு |
| உப்பு | - தேவைக்கேற்ப |
| கறிவேப்பிலை | - தேவைக்கேற்ப |

**செய்முறை :**

துருவிய தேங்காய், பச்சை மிளகாய், மிளகாய் வற்றல் ஆகியவற்றை மிக்ஸியில் மையாக அரைத்து எடுத்துக் கொள்ளவும். வாணலியில் சிறிதளவு தேங்காய் எண்ணெய் விட்டு அதில் கடுகு கறிவேப்பிலையைப் போடவும். கடுகு நன்றாக வெடித்தவுடன், புளியை நன்றாகக் கரைத்து விடவும். அதில் தேவையான அளவு உப்புப் போட்டு நன்றாகக் கொதிக்க விடவும். பிறகு அதில் வெள்ளை பூசணி, வெண்டைக்காய் இரண்டையும் சிறு சிறு துண்டுகளாக நறுக்கிப் போடவும். காய் நன்றாக வெந்தவுடன், அரைத்த தேங்காயை அதில் கரைத்து விடவும். தேவைக்கேற்ப தண்ணீர் கலக்கவும். இக்கலவையை கொதிக்கு முன் இறக்கி விடவும். சிறிது பச்சை கறிவேப்பிலையைப் போடவும்.

இந்தப் புளிசேரியை சாதத்துடன் மட்டுமல்லாமல், இட்லி, தோசை, உப்புமா, உப்புமா கொழுக்கட்டை, சேவை ஆகியவற்றுடன் கலந்து சாப்பிட்டால் மிகவும் நன்றாக இருக்கும்.

— *சீதா விஸ்வநாதன், செகந்திராபாத் - 15.*

## ஆறுதல் பரிசு ரூ. 50/-

## இஞ்சிக் குழம்பு

தேவையான பொருட்கள் :

| | |
|---|---|
| நார் அதிகம் இல்லாத இஞ்சி | - 100 கிராம் |

# நீங்கள் நினைக்கும் எந்த வண்ணமும், எந்த நிறமும், எந்த இடத்திற்கும், எந்த நிலைக்கும், தயாராகிவிடும் எந்த நிமிடத்திலும்

எந்த வண்ணமாயினும் சரி, எனாமல் அல்லது எமல்ஷன் ஆயினும் சரி, மேட், ஷீன் அல்லது ஃக்ளாஸ் ஆயினும் சரி, எந்த பரப்பாயினும் எவ்வித ஃபினிஷ் ஆயினும் சரி கிடைத்திடும். உங்களுக்கு தேவையானது எங்களிடம் உள்ளது. இன்ஸ்டா கலர் புரியும் மாயம் இதுவே. இந்தியாவின் முதல் உடனடி பெயிண்ட் தயாரிப்பு இதுவே. உங்கள் தேவைக்கு, கலர் ஷேடு கார்டுகளை கேட்கவும்,




இல்லையேல், இன்ஸ்டாகல
மையத்தை அணுகி, ஷ
ஷேடுகளில் ஒன்ன
தேர்ந்தெடுக்கவும். கண் முன்னே
கம்ப்யூட்டர் தயாரித்திடு
தேவையான கலரை ஏ
நிமிடங்களில்.

என்றுமே, உங்கள் ஆ
நிராசையாகாது. தட்டுங்க
தரப்படும். நொடிகளில். இ
முற்றிலும் உண்மையே.

Jenson & Nicholson (India) Limit

**உங்கள் எண்ணம், எங்கள் வண்ணம், அதுவே இன்ஸ்டா கலர்**

சண்டிகர் : 653657, கோயம்புத்தூர் : 230376, கட்டாக் : 610771, டெல்லி : 532594, எர்ணாகுளம் : 394256, ஃபரிதாபாத் : 213661, கஜியாபாத் : 7306
லூதியானா : 662077, மெட்ராஸ் : 8524895, மதுரை : 540369, மும்பாய் : 2613320, நியூ மும்பாய் : 7682021, பாட்னா : 222388, பூனே : 6765

CONTRACT J&N 225.96 T



ஒரு தக்காளி, ஒரு வெங்காயம், இரண்டு கத்திரிக்காய் இவைகளை நறுக்கி எண்ணெயில் வதக்கி, வறுத்த உளுத்தம் பருப்பு, மிளகாய் இவற்றுடன் உப்பு, புளி சேர்த்து அரைத்தால் (கரகரப்பாக) சாதத்தில், பிசைந்து சாப்பிட மிகவும் நன்றாக இருக்கும்.

— கீதாஞ்சலி

| | |
|---|---|
| பொடியாக நறுக்கிய வெங்காயம் | - 2 கப் |
| பொடியாக நறுக்கிய பூண்டு | - 1 கப் |
| சாம்பார் பொடி | - 2 டீஸ்பூன் |
| தனியா பொடி | - 1 டீஸ்பூன் |
| காரப்பொடி | - 1 டீஸ்பூன் |
| நல்லெண்ணெய் | - 200 கிராம் |
| தாளிக்க செய்ய உ. பருப்பு, கடுகு | - 1 டேபிள் ஸ்பூன் |
| புளி | - 100 கிராம் |
| உப்பு, மஞ்சள்பொடி | - தேவைக்கேற்ப |

**செய்முறை :**

முதலில் இஞ்சியை நன்றாக மண் போக அலம்பிக் கொள்ள வேண்டும். பின்னர் தோலியை சீவி எடுத்துத் துளி கூட தண்ணீர் இல்லாமல் கொப்பரைத் துருவியில் துருவி வைக்கவும். வாணலியை அடுப்பில் வைத்து எண்ணெய் 100 கிராம் விட்டுக் காய்ந்ததும் இஞ்சி துருவலை நன்றாகப் பொரித்துத் தனியாக வைக்கவும். அதே வாணலியில் மீதமுள்ள எண்ணெய் விட்டு காய்ந்ததும் கடுகு, உ. பருப்பு தாளித்து வெங்காயம், பூண்டு போட்டு நன்றாக வதக்க வேண்டும். பின்னர் தீயைக் குறைத்து சாம்பார் பொடி, ம. பொடி, தனியா பொடி, காரப் பொடி வதக்கிக் கொள்ள வேண்டும். பின்பு புளியைக் கெட்டியாகக் கரைத்து ஊற்ற வேண்டும். கடைசியில் உப்பு, இஞ்சி துருவல் சேர்த்து நன்றாகக் கொதி வந்தவுடன் இறக்க வேண்டும். இந்தக் குழம்பு பித்தத்திற்கு மிகவும் நல்லது. வாயுவிற்கும் மிகவும் நல்லது. சாதத்தில் பிசைந்து சாப்பிடவும். இட்லி, தோசை டிபனிற்கும் தொட்டுச் சாப்பிடலாம்.

— கருணா கந்தசாமி, மும்பை.

## ஆறுதல் பரிசு ரூ. 50/-

# குழம்பு

**தேவையான பொருட்கள் :**

| | |
|---|---|
| தக்காளி | - ½ கிலோ |
| பெரிய வெங்காயம் | - 1 |
| சிறிய வெங்காயம் | - 100 கிராம் |
| கொத்தமல்லி தழை | - சிறிது |
| கறிவேப்பிலை | - சிறிது |
| இஞ்சி | - 1 சிறிய துண்டு |
| தேங்காய் | - 1 சிறிய மூடி துருவல் |
| மிளகாய் வற்றல் | - 8 |
| தனியா | - 1 ஸ்பூன் |
| பொட்டுக்கடலை | - 50 கிராம் |
| கடுகு | - 1 சிறிய ஸ்பூன் |
| பெருங்காயம் | - 1 சிட்டிகை |
| உப்பு | - 1½ ஸ்பூன் |
| தாளிக்க எண்ணெய் | - 1½ ஸ்பூன் |

**செய்முறை :**

மிளகாய் வற்றல், தனியா, பொட்டுக் கடலை, கொத்தமல்லித் தழை, இஞ்சி, தேங் காய்த் துருவல், கழுவி நறுக்கிய தக்காளி, நறுக்கிய வெங்காயம் எல்லாம் பச்சையாக மிக்ஸியில் அரைக்க வேண்டும். பிறகு அரைத்த விழுதை சிறிது நீர் விட்டுத் தளர செய்து கொள்ள வேண்டும். வாணலியில் எண்ணெய் விட்டுக் கடுகு, பெருங்காயம் தாளித்து சிறிய வெங்காயத்தைப் போட்டு நன்கு வதக்கி தண்ணீர் தெளித்து வதக்க வேண்டும். கொஞ் சம் வெந்ததாகத் தெரிந்ததும், அரைத்த விழுதைப் போட்டு கறிவேப்பிலை போட்டு, உப்புப் போட்டு கலக்கவும். பாத்திரத்தில் குழம்பு அடிபிடிக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும். குழம்பு தளர இருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். கெட்டியாகாமல் சிறிது நீர் சேர்த்துக் கொள்ள வேண்டும். ஒரு கொதி வந்ததும் இறக்கி விடவும். இந்தக் குழம்பை சாதத்தில் கலந்து சாப்பிடலாம். தோசை, சப் பாத்தி, முக்கியமாக இட்லிக்கும் மிக நன்றாக இருக்கும்.

— பத்மாவதி வேணு, பெங்களூர் - 37.

அனைவருக்கும் எமது உளங்கனிந்த தீபாவளி நல்வாழ்த்துக்கள்



# பார்க் டவுன் பெனிபிட் பண்டு லிமிடெட்

பதிவு அலுவலகம் : 223, தெற்கு தங்கசாலை தெரு,
முதல் மாடி, பார்க் டவுன், சென்னை - 3.
தொ.பேசி எண் : 5352676, 535435

## நம்பிக்கை

## நாணயம்

## பாதுகாப்பு

| கிளைகள் | தொலைபேசி எண்கள் |
|---|---|
| 1. 2, கிழக்கு மாடவீதி, திருவான்மியூர், சென்னை - 4 | 413582<br>416417 |
| 2. 995-P, இரண்டாவது அவின்யூ, (12 வது மெயின் ரோடு சந்திப்பு) அண்ணாநகர், சென்னை - 40 | 6262656<br>6280750 |
| 3. 73, ரங்கநாதன் தெரு, தியாகராயநகர், சென்னை - 17 | 4344319 |
| 4. 73 - 74, ஆற்காடு ரோடு, கோடம்பாக்கம், சென்னை - 24 | 4846528 |
| 5. 215, எம்.டி.எச். ரோடு, அம்பத்தூர், சென்னை - 53 | 6357725 |
| 6. கிரிஸ்டல் பிளாசா, நெ. 22, நந்திகோயில் தெரு, தெப்பக்குளம், திருச்சி - 10 | 465626 |

நகைகளின் பேரிலும்
வீட்டின் பேரிலும்
கடன் வழங்கப்படும்

வட்டி 23.4% நகைக்கு
22.2% வீட்டிற்கு

"சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி"

'தோடு' என்ற தலைப்பில் அறிவித்திருந்த போட்டிக்கு, அடேங்கப்பா வந்து குவிந்துவிட்டன கட்டுரைகள். அதனுள் மூழ்கித் தேர்ந்தெடுப்பதற்குள் திணறிவிட்டோம். தோடு என்றவுடன் தங்களுடைய தொலைந்து போன தோடு அனுபவத்தை ஆயிரக்கணக்கான வாசகிகள் எழுதியிருந்தனர்!

அடுத்த போட்டிக்குத் தலைப்பு

**மோதிரம்**

- மோதிரம் சம்பந்தமாக உங்கள் வாழ்வில் நடந்த சுவையான சம்பவத்தை எழுதி அனுப்புங்கள்.
- கட்டுரை ஒரு பக்கத்திற்கு மிகாமல் இருக்க வேண்டும்.
- போட்டிக் கட்டுரையினை ARC ஜுவெல்லர்ஸிற்கோ, மங்கையர் மலருக்கோ அனுப்பலாம். இரண்டு இடத்திற்கும் ஒரே கட்டுரையை அனுப்ப வேண்டாம்.
- சிறந்த கட்டுரைக்கு ARC ஜுவெல்லர்ஸ் ரூ. 3000/- மதிப்புள்ள தங்க நகையினை பரிசாக அளிக்கிறது.
- போட்டிக் கட்டுரைக்கு அனுப்ப கடைசி தேதி 20.11.96.
- போட்டியின் முடிவுகளில் ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

மங்கையர் மலர் &

ஏ.ஆர்.சி. ஜுவெல்லர்ஸ்

இணைந்து வழங்கும்

# பொன்னான தருணங்கள்

ரூ. 3000/- பெறுமானமுள்ள ARC ஜுவெல்லர்ஸ் தங்கநகை பரிசு பெறும் கட்டுரை:

## தோடு

தோடு என்றவுடனேயே பல சுவையான சம்பவங்கள் நினைவுக்கு வருகின்றன. காதை கடிக்கிறதுன்னு சர்வ அலட்சியமா தோடைக் கழட்டி ரோட்டில் வீசியெறிந்து விட்டு வீட்டில் நன்றாக மொத்துபட்டது, என்னமோ பென்சில் நோட்டு இரவல் கொடுப்பது போல் தங்கத் தோட்டை கழற்றிக் கொடுத்துவிட்டது, இப்படி... ஆனால் சமீபத்தில் நடந்த ஒரு சம்பவம் என் மனதை விட்டு அகல மறுக்கிறது.

சில மாதங்களுக்கு முன்னால் மிஸஸ் அகர்வால் தன் பெண்ணுக்கு கல்யாணம் நிச்சயமாகி இருப்பதால், மெஹந்தி பார்ட்டிக்கு நீ கண்டிப்பாக வரவேண்டும் என்று அழைத்துவிட்டுப் போயிருந்தார். மெஹந்தி பார்ட்டி அன்று மருதாணி கல்யாணப் பெண் மட்டுமல்ல யாருக்குப் பிடித்தமோ அவர்கள் அனைவருமே இட்டுக் கொள்ளலாம். மெஹந்தி இடுவதற்கென்றே பெண் மணிகள் இருப்பார்கள். டான்ஸ், பாட்டு என்று படு உற்சாகமாக இருக்கும். அதுவும் வெறும் மகளிர் மட்டுமே! என் தோழி சீதாவுடன்



போனேன்.

மிஸஸ் அகர்வால் வீடு களை கட்டியிருந்தது. ஷிபாலும், சந்தேரி யும், ஜாம்தானியும் போட்டி போட்டுக் கொண்டிருந்தன. 'டோலக்' வாசித்துக் கொண்டே பெண்மணிகள் 'பன்னோ' பாடல்கள் பாடிக் கொண்டிருந்தனர். பன்னோ என்பது மணப் பெண்ணைக் குறிக்கும். 'எங்கள் பன்னோவின் சிரிப்பு லட்சம் பெறும், எங்கள் பன்னோவின் நிறமோ குங்குமப்பூ...' இப்படி போகும்.

இந்தக் கூட்டத்தில் 'சிக்'கென்று எல்லாரது கவனத்தையும் கவர்ந்து கொண்டிருந்தாள் ஒரு இளம் பெண். பச்சை நிற பாந்தினி புடைவை, அதற்கு மாட்சாக காதுகளில் 'எமரால்ட்' (பச்சை) ஜொலித்தது. தங்கமும் எமரால்டும் கலந்து காதில் போட்டுக் கொண்டிருந்த தோடு புது பாணியாக நன்றாக இருந்தது.

அந்தப் பெண் மிக சுறுசுறுப்பாக தின் பண்ட பேப்பர் ப்ளேட்களை நிரப்பிக் கொண்டிருந்தாள். ஓடி ஓடி சிரிப்பு வழிய எல்லாரிடமும் நீட்டிக் கொண்டிருந்தாள். அதற்குள் டான்ஸ் ஆடு என்று கையை பிடித்துக் கொண்டு போனவர்களுடன் சுழன்று சுழன்று ஆடினாள்.

"ஹு இஸ் திஸ் எமரால்ட் கேர்ள் மெண்" என்று முணுமுணுத்தேன் தோழியிடம். அந்தப் பெண் டெல்லியிலிருந்து வந்திருப்பதாக தெரிந்தது. உற்சாகம், மகிழ்ச்சி, பணிவு, சிநேகம்... என்னை மட்டுமல்லாது பல பேரை தன் பால் ஈர்த்துக் கொண்டிருந்தாள்.

மெஹந்தி பார்ட்டி முடிந்து வீடு கிளம்பினோம். எங்களுடன் மிஸஸ் குப்தா வந்து கொண்டிருந்தார். இவர் தன் மகனுக்கு வலை வீசி பெண்ணைத் தேடிக் கொண்டிருப்பவர். நான் அந்த எமரால்ட் பெண்ணை ஸ்ட்ராங்காக சிபாரிசு செய்தேன். "அஜி, காஹே கீ சுந்தர்தா, லட்கி தோ பஹ்ரி ஹை" (ஆங், என்ன பெரிய அழகு, பெண் செவிடாக்கும்) என்று அணுகுண்டை போட்டார்.

இத்தனை நேரமும் சிரித்து சிரித்து எல்லாரையும் மயக்கிய பெண் மௌன உலகத்தின் பிரதிநிதியா? எந்தக் காதுக்கு தோடு போட்டு அழகு பார்த்தாளோ அது பயனற்றவையா? கடவுளே, அழகு பண்பு என்று டன் டன்னாக அள்ளிக் கொடுத்து விட்டு 'நீ ரொம்ப அழகாக இருக்கே, நீ கெட்டிக்கார பொண்ணும்மா' என்று பிறர் பாராட்டைக் கேட்க முடியாமல் செய்து விட்டாயே இது நியாயமா?

அந்தப் பெண்ணுக்கு நல்ல ஒரு வாழ்க்கை அமைய வேண்டும், என்றென்றும் அவள் சிரித்துக் கொண்டிருக்க வேண்டுமென்று ஸ்ரீ அரவிந்த அன்னையின் பாதார விந்தங்களுக்கு இந்தக் கோரிக்கையை சமர்ப்பிக்கிறேன்.

— லதா சேகர், ஹைதராபாத் - 7.

**பிரகாரத்திற்கு....**

## தோடு இல்லா செவியன்

"தோடுடைய செவியன்" எனத் தொடங்கும் சம்பந்தர் தேவாரத்தைக் கேட்கும் போதெல்லாம் என் சிறு வயதில் நடந்த அந்த நிகழ்ச்சி என் நினைவிற்கு வரும்.

எனக்கு அப்போது பத்துப் பன்னிரெண்டு வயதிருக்கும். திருமதி ராஜம்மாள் சுந்தரராஜன் அவர்களால் நடத்தப்பட்டு வந்த திருப்பாவை - திருவெம்பாவை இசை மற்றும் நாட்டியப் பள்ளியில் நான் ஒரு மாணவி.

கலாக்ஷேத்ராவின் 'அத்தை' போல எங்களுக்கு அவர் அத்தம்மா. எல்லா குழந்தைகளிடமும் மிகவும் அன்பு காட்டுவார். ஆனால் அவரது வளர்ப்பு மகளான விசாலி நடனம் என்று வரும் போது மிகவும் கண்டிப்பானவர். அவரைக் கண்டால் எங்களுக்கு பயம்.

அநேகமாக தமிழ்நாட்டிலுள்ள எல்லா கோயில் திருவிழாவிலும் எங்கள் நாட்டிய நிகழ்ச்சி நடந்திருக்கும். ஆடாத ஊர்கள் இல்லை. போடாத வேஷமில்லை.

நான் இந்தப் பள்ளியில் சேர்ந்த புதிது. சீர்காழியில் எங்கள் நாட்டிய நிகழ்ச்சி ஏற்பாடாகியிருந்தது. எனக்கு "மார்க்கண்டேயா" நாட்டியத்தில் சிவன் வேடம். விசாலி அவர்கள் எமனாக நடித்தார். (நல்ல உயரமும் பருமனும்






# யோகக்ஷேமம்

*(a welfare organisation in association with)*

## யோகக்ஷேமா நிரந்தர நிதி லிமிடெட்

(மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்டது)
23, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம்
சென்னை – 600 033. ✆ : 484 8652.

## கல்யாண யோகம் (முகூர்த்த நிதி)

உங்கள் அன்புக்கும், ஆசைக்கும் உரித்த பெண்ணின் திருமணத்தை பற்றிய கவலை இனி உங்களுக்கு தேவையில்லை.

ரூ. 1500 ஒரே முறையிலோ அல்லது 12 மாதத்திற்கு ரூ. 125, விதமோ கட்டி ரூ. 1,00,000 திருமணத்திற்காக 20 ஆண்டுகள் கழித்து பெறுங்கள்.

## பிஸி மணி பாலிஸி

இனி நீங்கள் பணத்தேவைக்காக சீட்டு கம்பெனியை நாடிச் செல்ல வேண்டாம். மாதம் ரூ. 1,250 விதம் 12 மாதங்கள் கட்டினால் போதும். குறைந்த வட்டியில் ரூ. 1,00,000 கடனாக 13வது மாதத்தில் பெறலாம்.

## நிரந்தர ஓய்வூதியம்

ரூ. 250/- ஒருமுறை செலுத்தி 30 ஆண்டுகளுக்கு பிறகு 1000/-பென்சனாக தருகிறோம்.
ரூ. 500/- ஒருமுறை செலுத்தி 20 ஆண்டுகளுக்கு பிறகு 1000/-பென்சனாக தருகிறோம்.
ரூ. 1500/- ஒருமுறை செலுத்தி 15 ஆண்டுகளுக்கு பிறகு 1000/-பென்சனாக தருகிறோம்.
ரூ. 6000/- ஒருமுறை செலுத்தி 10 ஆண்டுகளுக்கு பிறகு 1000/-பென்சனாக தருகிறோம்.

## ஆத்ம சாந்தி

ரூ. 1,000 செலுத்தினால் அந்திம கிரியைக்காக ரூ. 5,000 குடும்பத்தில் ஒவ்வொரு நபருக்காகவும் வழங்குகிறோம்.

## அதிவேக மாதாந்திர வருமான திட்டம்

மாதம் ரூ. 100 விதம் 48 மாதங்கள் கட்டினால் போதும். 49வது மாதத்திலிருந்து ரூ. 100/-மாதமாதம் உங்கள் வாழ்நாள் முடிய பெறலாம். அல்லது ரூ. 6000/- ஒரே முறையாக பெறலாம். இதில் சேருபவர்களுக்கு 20 ஆண்டுகள் முடிந்ததும் மாதாந்திர பென்ஷனாக ரூ. 1,000/- கொடுக்கப்படும். (இது ஒரு பரிசு) இதில் சேருபவர்களுக்கு கடன் வசதி உண்டு.

**வாருங்கள், சேருங்கள், பயன்பெறுங்கள்**

**எங்களது சேவைப்பிரிவுகள்**

திரு. சீனிவாசமூர்த்தி, (பிராஸஜ் எக்ஸ்பிரஸ்) 5, சங்குராம செட்டி தெரு, 2வது மாடி, சென்னை - 01. ✆ : 583748.
திரு. நாகராஜன், 3C-A, 6வது தெரு, பாலாஜி நகர், நங்கநல்லூர், சென்னை - 61.
திரு. வீரராகவன், 5, ராஜராஜேஸ்வரி நகர், கூத்தப்பாக்கம், கடலூர் - 02.
Mr. Murugesh, 22/H/6, Bright Street, Calcutta - 17. Ph : 2409339

**ஆத்மசாந்தி நிகேதன் - முதியோர் இல்லம் கூடியவிரைவில் ஆரம்பமாகிறது. முற்றிலும் பிராமண சம்பிரதாயத்தில் இயங்க இருக்கிறது. சேர விரும்புபவர்கள் அணுகவும்.**

கொண்ட அவர் உருட்டி முழித்தால் நிஜ எமன் கெட்டான், போங்கள்). அட்டை சிவலிங்கத்திற் குப் பின் நான் பாசக்கயிற்றுக்காக சூலாயுதத் துடன் காத்திருந்தேன்.

மார்க்கண்டேயன் சிவனைக் கட்டிக் கொள்ள பாசக்கயிறும் வந்து விழுந்தாயிற்று. லிங்கம் பிளந்து சிவன் தோன்றி சிவதாண் டவம் ஆட வேண்டிய காட்சி. நான் எழுந்து எழுந்து பார்க்கிறேன். எழ இயலவில்லை. ருத் ராட்சம் அணிந்த காதுகளில் ஒன்று அட்டை லிங்கத்தின் கொக்கியில் மாட்டிக் கொண்டு எடுக்க வரவில்லை. பல்லைக் கடித்து கோபா வேசமாக முறைக்கும் விசாலி (எமன்) ஒருபுறம்; மாட்டிக் கொண்ட காது ஒருபுறம். நீண்ட நேரம் சிவன் பிரத்யட்சமாகாததால் ஆடி யன்ஸ் பக்கமிருந்து சலசலப்பு.

ஆனது ஆகட்டும் என்று படக்கென்று நான் எழ எனது வலது காது கொக்கியில் மாட்டி அறுந்தது. ஒருபக்க ருத்ராட்சதோடு(?)ம் கீழே விழுந்தது. வலியைப் பொறுத்துக் கொண்டு ஆடினேன்.

அதற்கடுத்த சீன் ஞானசம்பந்தருக்கு உமை சமேதராய் காட்சியருளி ஞானப்பால் அளிக் கும் காட்சி. அதிலும் ஒருகாது தோடோடு நான் சிவனாக நிற்க, சம்பந்தர் பாடுகிறார்:

"தோடுடைய செவியன்...."

ஆனால் சிவனுக்கு ஒரு காதில் தோடேயில் லாத செவியன் தோற்றம். வலி ஒருபுறம். சிரிப்பு ஒரு புறம்.. ஆகவே, இந்த தேவாரம் சம்பந்தர் தேவாரம் மட்டுமன்று; என் வாழ்வோடு சம் பந்தமுள்ளதும் கூட.

பி.கு.: என் அறுந்த காது அதற்குப் பின் தைக்கப்பட்டு சரிசெய்யப் பட்டாலும், இன்னும் பிஞ்சுக்காதாகவே இருப்பதால் பெரிய கல் தோடுகளையெல்லாம் ஆசைக்காக சிறிது நேரமே அணிகிறேன்.

**— மீனாட்சி பட்டாபிராமன், மதுரை.**

## சேமிக்கும் பழக்கம் வந்தது

எட்டாம் வகுப்பு படிக்கும் போது வய துக்குக் குறைவான சம்பளம். எங்கள் குடும்பத் தில் பத்து பேர் வறுமையில் இருந்தோம். வீட் டிற்கு அழைக்கும் போது யாரையும் கூப்பிடா விட்டாலும், எனக்கு மட்டும் இனிப்பு வாங்கித் தந்து, பூப்பின்னல் போட்டார்கள். வாடகைக் குக் கூட கவரிங் நகை வாங்க ஒரு பைசா கூட கிடையாது.

எங்களது நெருங்கிய உறவினர் ஒருவரிடம் 'காதுக் காவது உன் மகளின் தோட்டைக் குடு. போட்டோ பிடித்த உடன் திருப்பித் தந்து விடு




கிறேன்' என்றார். (என் அப்பா ஆசிரியராக பணியாற்றிவர். அவரிடம் படித்த மாணவன் ஒரு போட்டோ ஸ்டுடியோ வைத்திருந்தான். முதல் நாளே அவனிடம் தன் ஆசையை தெரி வித்ததால், அவன் பணம் வாங்காமல் போட்டோ பிடித்துத் தருவதாகக் கூறினான்.)

என் உறவினர் 'உனக்குத் தோட்டைக் கொடுத்தால் உனக்கு இருக்கும் கஷ்டத்தில் நகையை அடகு வைத்தோ, அல்லது விற்றோ பணம் வாங்கிச் செலவழிப்பாய். ஆகையால் நான் தரமாட்டேன்' என நேருக்கு நேராகக் கூறிவிட்டார்.

அன்று என் அப்பா அடைந்த வேதனை! இன்று என் அப்பா இல்லை ஆனாலும் அந்த நாள் நினைவு என் நெஞ்சை விட்டு அகல வில்லை. அன்று முதல் எனக்குக் கொடுக்கும் பைசாவை சிறிதளவு கூட செலவு செய்யாமல், யார் தரமாட்டேன் என்று சொன்னாரோ அவ ரிடமே ரூ. 29.5/- சேர்த்து ½ பவுன் தோடு வாங்கினேன். சேமிக்கும் பழக்கம் ஏற்பட்டது. என் கணவருக்குக் குறைந்த சம்பளம் இருந் தாலும் அனாவசியமாக செலவு செய்யாமல் சேமித்து வைத்து ஒரு சிறு வீட்டையும், பல நகைகளையும், வீட்டிற்குத் தேவையானவற்றை யும் வாங்குகிறேன். ஒரு தோட்டினால் சேமிக் கும் பழக்கம் ஏற்பட்டு குடும்பத்தையும் நல்ல முறையில் நடத்தி வருகிறேன்.

**— ஆர். ராஜேஸ்வரி, சென்னை - 53.**

## ஒரு தோடு படுத்திய பாடு

ஒழுங்காக ஆபீஸ் சென்று வந்து கொண் டிருந்த என் மகளுக்கு ஒரு நாள் கழுத்தில் வலது காதிற்குப் பின்னால் ஒரு வீக்கம் தோன் றியது. மறுநாள் அந்த வீக்கம் அதிகமாகி ஒரே வலி. ஜுரம் வேறு அனலாய்க் கொதிக்க ஆரம் பித்தது. எங்களுடைய போதாத காலமோ என்

# ஆயிரமாயிரம் ஆனந்தம் என்டைஸ் உடன் ஆரம்பம்

தீபாவளி
வாழ்த்துக்களுடன்
என்டைஸ்
வழங்குகிறது
வண்ண வண்ண
துணிரகங்கள்.
உங்கள்
குடும்பத்தில்
ஒவ்வொருவருக்கும்
மலைக்க வைக்கும்
டிசைன்கள்.
வியக்க வைக்கும்
விலைகளில்.

**என்டைஸ்®**

சிறந்த ரகங்கள். சரியான விலை.

நேஷனல் டெக்ஸ்டைல் கார்ப்பொரேஷன்
தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரி லிமிடெட்
ஒரு மத்திய அரசு நிறுவனம்





1.10.96 முதல் 10.11.96 வரை
அனைத்து ரகங்களுக்கும்

விழாக்கால
**10%**
தள்ளுபடி

SASI/1178/96



னவோ, எங்கள் குடும்ப டாக்டர் வெளியூர் சென்றிருந்தார். அதனால் வேறு ஒரு டாக்டரிடம் சென்றோம். அவரும் நான்கு நாட்கள் மருந்து கொடுத்துப் பார்த்தார். ஜுரமோ வலியோ, வீக்கமோ குறையவே இல்லை. அவர் உங்கள் பெண்ணிற்கு டி.பி. ஆக இருக்கு மென்று நினைக்கிறேன். அதனால் பயாப்ஸி டெஸ்ட் எடுக்க வேண்டும் என்று ஒரு இடியைத் தூக்கிப் போட்டார்.

நாங்களும் ஒரு பிரபல ஹாஸ்பிடலுக்குச் சென்று பாயப்ஸி டெஸ்ட் எடுத்தோம். அந்த ரிப்போர்ட்டில் டி.பி.தான் என்று வரவில்லையென்றாலும், டி.பி. ஆக இருக்கலாம் என்று வந்தது. ஆனாலும் அந்த ஹாஸ்பிடல் டாக்டர் உடனடியாக டி.பி.க்குரிய ட்ரீட்மென்ட்டை ஆரம்பித்து விட்டார். அது மட்டுமில்லாமல், இது டி.பியின் ஆரம்பம். மருந்து சாப்பிடா விட்டால் அதிகமாகி விடும். ஒரு வேளை மருந்தை நிறுத்தினால் கூட, விளைவு விபரீதமாகி விடும் என்று எச்சரித்தார். எங்களுக்கு என்ன செய்வது என்றே புரியவில்லை. என் மகளுக்கு டி.பி. இருக்குமென்று எங்களுக்கு தோன்றவே இல்லை. ஆனாலும் சொன்னது பிரபல டாக்டர் ஆயிற்றே அதனால் மருந்து கொடுக்க முடிவு செய்தோம்.

முதல் டோஸ் மருந்து உள்ளே போனதுமே ஆரம்பித்து விட்டது அவஸ்தை. அப்படி ஒரு வயிற்றுப் பிரட்டல் வாந்தி. ஜுரமும் குறையவே இல்லை. தண்ணீர் குடித்தால் கூட வாந்தி தான். ஒரு நிமிடம் கூடத் தூக்கமில்லை. எழுந்து உட்காரக் கூட முடியவில்லை அவளால். அவள் படும் அவஸ்தையை எங்களால் பார்க்கவே முடியவில்லை. எனக்கு உடம்பு சரியாகுமா? நான் பழையபடி ஆவேனா? என்று புலம்பவே ஆரம்பித்து விட்டாள். நாங்களும் வேண்டாத தெய்வம் இல்லை.

ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு யுகமாக ஐந்து நாட்கள் சென்றது. அதற்கு மேல் எங்களால் பொறுக்கவே முடியவில்லை. வேறு ஒரு டாக்டரிடம் போனோம். அவர் என் மகளை நன்றாகப் பரிசோதித்து விட்டு, அவளுக்கு உடம்புக்கு ஒன்றுமில்லை ஏதோ அலர்ஜிதான். அதனால் நீங்கள் கொடுத்துக் கொண்டிருக்கும் மருந்தை எல்லாம் நிறுத்திவிடுங்கள் என்று கூறினார். அதன் படியே அன்று இரவு மருந்தை நிறுத்தி விட்டோம். என்ன ஆச்சர்யம்! இரவு முழுவதும் நன்றாகத் தூங்கி, காலையில் புத்தம் புது மலரைப் போல என் மகள் எழுந்து உட்கார்ந்தாள். எங்களுக்கு ஒரே சந்தோஷம் ஆண்டவனுக்கு நன்றி கூறினோம்.

இந்த டாக்டர் கூறியபடி மறுபடியும் இரண்டு லாபரெட்டரிகளில் டெஸ்ட் எடுத்தோம். இரண்டு ரிப்போர்ட்டிலும் அலர்ஜிதான் என்று வந்தது. இந்த அலர்ஜிக்கு என்ன காரணம் தெரியுமா? ஒரு சிறிய தோடு. தங்கத் தோடு அல்ல. மூன்று ரூபாய் விலையில் கண்ணைப் பறித்த ஒரு ஒயிட்மெட்டல் தோடு. எதற்குமே ஆசைப்பட மாட்டாள் என் மகள். எங்கள் கஷ்டகாலம் அவளுக்கு இந்தத் தோடு மேல் ஆசைப்பட்டு, அதை வாங்கி, ஒரே ஒரு நாள், சில மணி நேரம் அணிந்து, இவ்வளவு அவஸ்தையும் பட்டாள். 3000 ரூபாய் செலவையும், சொல்லவொண்ணா வேதனையையும் அளித்த அந்த மூன்று ரூபாய் தோட்டை ஆஸ்பத்திரியிலிருந்து வந்ததும் முதல் வேலையாக குப்பைத் தொட்டியில் வீசி எறிந்தோம்.

— சரோஜா ராமன், சென்னை - 78.

**ஸ்டிக்கர் பொட்டை உபயோகிக்கும் பெண்கள், குளிய லறையில், கண்ணாடி பிரேமில், வாஷ்பேசினில் என்று எங்கு பார்த்தாலும் பொட்டை ஒட்டி அலங்கோலம் பண்ணுவதை விட்டு, ஷில்பா போன்ற ஸ்டிக்கர் பொட்டு வரும் அட்டையை குளிய லறை, கண்ணாடி அருகில் என, வேண்டும் இடத்தில் செல்லோ டேப் வைத்து ஒட்டி விட்டால், பொட்டை தேவையில்லாத போது அட்டையில் ஒட்டி வைத்து விடலாம். கண்ட இடங்களில் சுவரில் ஒட்டியதை மீண்டும் பயன்படுத்துவதால் தோலில் ஏற்படும் தமைச் சலையும் தவிர்க்கலாம், பொட்டு தேடுவதையும் தவிர்க்கலாம்.**

**— லலிதா முரளீதரன்**



◆ 'நவராத்திரி' என்றால் பெண்களுக்கு மட்டுமே பங்கு என்பது இல்லை. எங்களுக்கும் (ஆண்களுக்கும்) உண்டு. 'இன்றைய நிலையில் இதுதான் நவராத்திரி' பேட்டியில் பெண்கள் எல்லோருமே டென்ஷனாக பேசியிருக்கிறார்கள். ஆண்வர்க்கத்தினரிடமும் சில வார்த்தைகள் கேட்டு இருக்கலாமே! ஒன்பது நாளும் விரதம் இருந்து பூஜை, சகஸ்ரநாமம் என்று செய்யும் பல ஆண்கள் இன்றும் இருக்கின்றோம். அவர்களின் கருத்தையும் கேட்டிருக்கலாம்.

டி.ஜி. நாராயணராவ், சென்னை - 39.

◆ சிறு நீரகக் கற்களால் பாதிக்கப்பட்டு, சிகிச்சை பெற்றவன் நான். டாக்டர் ஆர். ஞானசம்பந்தம் சொல்லிய அத்தனை இடையூறுகளையும் அனுபவித்தவனும் ஆவேன். அலோபதியைப் போலவே ஹோமியோபதியிலும் 'கற்களை' நீக்க பல மருந்துகள் உள்ளன என விரிவாக அறிந்ததில் மகிழ்ச்சியே ஏற்பட்டது.

வில்லழகன், சென்னை - 39.




◆ 'இனியும் கதையும் தொடரும்' குறுநாவல் மூலம் இலகவதி சமூக மேம்பாட்டிற்கான கல்வி, தியாகம், பொது அறிவு ஆகியவற்றில் தனியார் தொலைக் காட்சிகள் சிறிதும் அக்கறை காட்டுவதில்லை; இந்த அக்கறையின்மை அங்குள்ள சிலரின் தனிநபர் ஒழுக்கத்தையும் பாதித்து விடுகிறது போன்ற கருத்துக்களை மிக அழகாக எழுதியுள்ளார். பாராட்டுக்கள்.

பிரேமா சேதுநாராயணன், மதுரை - 3.

◆ குழந்தைகளுக்காக... என்ற கட்டுரை மிகவும் சிலிர்ப்பூட்டும் வகையில் அமைந்தது. அதிலும் குறிப்பாக ஆடம்பரப் பொருட்களை வாங்குவதை தவிர்க்கவும் என்று கூறிய விதம் பாராட்டிற்குரியது. வரவேற்கிறேன்.

பிரியதர்ஷன், சென்னை - 118.

◆ நாச்சியார் கோயில் படங்களும் செய்திகளும் அருமை. அருகில் உள்ள எங்களுக்கே தெரியாத பல செய்திகளை தெரிந்து கொள்ள உதவியாய் இருந்தது. மேலும் நேரில் சென்று பார்க்க வேண்டிய ஆவலை தூண்டி விட்டது.

தி. கமலா தியாகராஜன், பவித்திரமாணிக்கம்.

◆ ராமர் பிள்ளையின் அரிய கண்டுபிடிப்பை வெளி உலகத்திற்கு அறிமுகப்படுத்துவதை விட அவரின் கண்டுபிடிப்புகளை விலை பேசியவர்களே அதிகமாக இருந்திருக்கிறார்கள் என்ற செய்தி வேதனையளித்தது. அவருக்குத் துணையாக அவரின் சகோதரி உற்ற துணையாக இருந்து உதவி செய்த செய்தியை மங்கையர் மலரே விட்டு விட்டது. ஏன் என்று தெரியவில்லை!

என். ராஜலெட்சுமி, மேலப்பாதி.

◆ இணைப்புத் துணைப் புத்தக, (அம்மன் ஸ்ரீயோகமாயா புவனேஸ்வரி) அட்டைப்படத்தை லேமினேஷன் செய்து, பூஜையறையில் வைத்து பூப்போட்டு எம் குடும்பமே வணங்கி மகிழ்கிறோம். மீண்டும் கரம் குவித்த நன்றிகள்.

எல்.எம். மகாலெட்சுமி, பல்லவன் நகர்.

◆ நாங்கள் நவராத்திரி கொண்டாடும் வழக்கம் இல்லாதவர்கள். இருந்தாலும் நவராத்திரி பற்றி நீங்கள் எழுதியுள்ள கருத்துகளும், பலருடைய பேட்டியையும் படித்த பொழுது நவராத்திரியின் சிறப்பை அறிய நேர்ந்தது. எனக்குக் கலைகளில் ஆர்வம் அதிகம் அதனால் நீங்கள் கூறிய குறிப்புகள் மூலம் பல பொம்மைகள் செய்து பார்க்க எண்ணியுள்ளேன்.

யசோதா பழனிச்சாமி, ஈரோடு - 11.

◆ நாணயத்தின் இரு பக்கம் என்பது போல் கடவுளைப் பற்றி இருவரின் கருத்துக்களை வெளியிட்டு உள்ளதை உள்ளபடியே சொல்ல வைத்துவிட்டீர்கள். கொலுவைப் பற்றி எழுதி விட்டு கொலு வைக்காதவர்களையும் கொலுவைக்கும் அளவிற்கு ஆசைகளைத் தூண்டி விட்டு விட்டது அக்டோபர் மாத மலர்.

ராஜி குருஸ்வாமி, சென்னை - 88.

◆ ராமர் பிள்ளை பற்றிய தலையங்கம் சிறப்பாக இருந்தது. திரைப்படத் துறையிலுள்ளவர்களுக்கும், அரசியல் பிரமுகர்களுக்கும், விளையாட்டு வீரர்களுக்கும் கிடைக்கும் புகழில் பத்தில் ஒரு பங்கு கூட விஞ்ஞானிகளுக்குக் கிடைப்பதில்லை என்பது வருத்தத்திற்குரிய நிஜம்.

ஆனால் தங்களின் 'தமிழன்' மற்றும் 'தெற்கு' என்ற வார்த்தைப் பிரயோகங்கள் படித்து அதிர்ச்சி அடைந்தேன். உங்களுக்கு எப்போதுமே தேசியக் கண்ணோட்டம் உண்டு என்று எண்ணியிருந்தேன். ஆனால் ''வடக்கு வாழ்கிறது; தெற்கு தேய்கிறது'' என்று அரசியல் வாதிகள் கூறுவது போல தாங்களும் கூறியிருப்பது தவிர்க்கப்பட்டிருக்க வேண்டும்.

எஸ். சுந்தரராஜன், மதுரை - 3.

சிறப்பிதழ் - 1 அட்டை
வண்ணப்படம் : ஜி. சுரேஷ்
சிறப்பிதழ் - 2 அட்டை
வண்ணப்படங்கள் :
ஓம். சுப்ரமண்யம், ஜி. சுரேஷ்

# கல்கி

3.11.96

தீபாவளிச் சிறப்பிதழ்!

பிரபஞ்சன் எழுதும்

# பூக்கள் நாளையும் மலரும்

உணர்ச்சிமயமான புதிய தொடர்கதை ஆரம்பம்!

- எதிர்ப்பை வென்றது எப்படி?
- பிரபலங்களின் குடும்பங்கள்...!
- இண்டர்நெட்டில் பிடித்தவை...
- காணாமல் போனவர்கள்...
- தளபதிகள்...

ஏராளமான புதிய அம்சங்களுடன் உங்களை அசத்த வருகிறது!

# வெண்புள்ளி நோய் குணமாகும்!

சருமத்தில் ஒரு சிறு புள்ளி விழுந்தால் போதும் மிகுந்த அக்கறை, சிரமம் எடுத்து சிகிச்சை பெற விரும்புகிறோம். இதில் வெண்புள்ளி நோய் பற்றி கேட்கவே வேண்டாம்.

இந்த நோய் குணமாகாது.



என்னால் வெளியில் தலைகாட்ட முடியவில்லை. என் மகளுக்கு எப்படித் திருமணம் செய்வேன்? என் சந்ததியை தாக்குமோ? தொற்றிக் கொள்ளுமோ? இதற்கு சரியான சிகிச்சையே இல்லையா? இப்படி பல கேள்விகள் சந்தேகங்கள் ஏற்படுகின்றன. வெண்படை நோயை ஹோமியோபதி மருந்துகளால் முழுமையாக குணப்படுத்தலாம் என்கிறார் பிரபல டாக்டர் ஆர். ஞானசம்பந்தம்.

## தோன்ற காரணம்:

இந்த வெண்படை நோய் தோன்ற அடிப்படை காரணமாக இருப்பது "மெலானின்" (Melanin) எனப்படும் நிறமி அணுக்கள்தான். இந்த நிறமி அணுக்கள்தான் நாம் சிகப்பாக, கருப்பாக தோன்றுவதற்கு அடிப்படையாக விளங்குகிறது.

மெலானின்தான் உடல் முழுவதிலும் சீராக இயங்கி நம் சரும நிறத்தை அழகாக வைத்துக் கொள்கிறது. ஒரு சில சமயங்களில் அதிகமாக பாதிக்கப்பட்ட இடங்களில் இயங்கினால் கரும்புள்ளிகள் தோற்றுவிக்கிறது. அளவில் குறைந்தால் வெண்புள்ளிகளை தோன்ற வைத்துவிடுகிறது.

பொதுவாக இரத்தக் குறைபாடு, சோகையால் எனக்கு இந்த நோய் வந்திருக்குமோ? சாப்பாட்டில் சத்துக் குறைவால் வந்திருக்குமோ? என்ற பயம் பலருக்கும் உண்டு. இவை காரணங்களாகக் கருத முடியாது.

பாம்பை மிதித்துவிட்டேன், என்னை பூச்சி கடித்து விட்டது என்று கூறுவதும் அறிவியல் பூர்வமான கருத்து அல்ல.

வெண்படை நோய் தோன்றக் காரணம் மெலானின் நிறமி அணுக்களின் செயலாக்கத் தன்மையைப் பொறுத்தே அமையும். பரம்பரையாக தொடரலாம். செல்களின் உள்ள ஜீன்களின் வழியாகத் தொடர வைத்து விடுகிறது. சில சமயங்களில் கல்லீரல், குடலை பாதிக்கும் நோய்களால் உண்ட சத்து சரியானபடி உடலில் உட்கிரகிக்க முடியாதபடி தடை செய்து உண்டாக்கலாம்.

## வகைகள்:

வெண்படை நோய் தோன்றும்

தன்மையை வைத்து முக்கியமாக இரண்டு பிரிவுகள் உள்ளன. ஒன்று உடல் முழுவதும் பாதிக்கும் "விட்டிலிகோ" (Vitiligo) எனப்படும் வகை. மற்றொன்று லூக்கோ டெர்மா (Leucoderma) எனப்படும் வகை.

## விட்டிலிகோ:

இது பரம்பரை வகை. சிலருக்குக் குடல் பூச்சிகள், டைபாய்டு, காமாலை போன்ற நோய்களுக்குப் பின் தோன்றியுள்ளது. "அமீபியாசிஸ்" (Amoebiasis) எனும் குடல் பூச்சி தொந்தரவு பலருக்கு இந்த வகையை உண்டாக்கி இருக்கிறது. இது சிறுவர் முதல் பெரியவர்கள் வரை பாதிக்கும்.

முதலில் உதடு, மர்ம உறுப்புகள், கை, கால் விரல்களில், நகங்களின் இடுக்குகளில் வெண்புள்ளிகள் தோன்ற ஆரம்பிக்கும். சிறிது காலம் கழித்து படிப்படியாக உடலில் ஆங்காங்கே வெண்புள்ளிகள் தோன்ற ஆரம்பித்துவிடும். இடது பக்கம் ஆரம்பித்தால் வலது பக்கமும் சீராக தோன்ற ஆரம்பிப்பது இந்த வகையில் இருக்கும். காலம் செல்ல செல்ல உடல் முழுவதும் பரவி வெள்ளை மனிதரை போல ஆக்கிவிடும். இந்த நோயை பலர் தொற்றுவியாதி என்று நினைக்கின்றனர். 'வெண்குஷ்டம்' என்ற பெயரையும் சூட்டி பரவும் என்ற எண்ணத்தை உருவாக்கி விடுகின்றனர். இது நிச்சயமாக தொற்றுவியாதி அல்ல, பரவாது. குஷ்டமும் பழுப்பு நிறமாக இருக்கும். இதை எப்படி வேறுபடுத்தி அறிவது என்று சந்தேகம் எழலாம். தொழுநோய் பாதிக்கப்பட்ட இடத்தில் மரமரப்பு, வலி இல்லாமல் இருக்கும். குண்டூசி வைத்துக் குத்தினால் கூட வலிக்காது. ஆனால் வெண்புள்ளிகள் வலிக்கும் உணர்ச்சிகள் இருக்கும். சிலர் தேமலைக்கூட வெண்புள்ளி நோய் என்று நினைத்து பயந்து

பாதுஷா செய்யும் போது டால்டா முழுவதும் போடாமல் பாதிநெய் + பாதி டால்டா போட்டுச் செய்யவும். 4-5 ஸ்பூன் பால் பவுடர் சேர்க்கவும். வாசனையும், சாஃப்ட்டும், சுவையும் எல்லாமே கூடும்!

— கமலா



ஆலோசனைக்கு வந்துள்ளனர். தேமல் குண்டூசி போல சிறு புள்ளிகளாகத் தோன்றி பரவி விடும். வெண்மையாக இருக்காது. பாதிக்கப்பட்ட இடங்களில் அழுக்கு போல உதிரும்.

இவைகளில் குழப்பம் ஏதேனும் இருந்தால் தோல் நுண்ணுருவி சோதனையால் (Skin Smear) அறியலாம். சில குழந்தைகள் பிறவியிலேயே வெண்மையாக "வெள்ளைக் காரரைப் போல" இருக்கும். முடி பிரௌன் கலரில், கண்கள் சுழன்ற படி நிஸ்டோக்மஸ் (Nystagmus) என்ற குறையுடன் இருக்கும். அல்புனிசம் (Albunism) எனப்படும். சிலருக்குப் பிறவியிலேயே கருப்பு அல்லது வெண்மை மச்சங்கள் இருந்தால் பரவாது.

## லூக்கோடெர்மா (Leucoderma)

உடலில் ஒருசில பாகங்கள் மட்டும் பாதிக்கும் வகை லூக்கோடெர்மா எனப்படும். சிலருக்கு முகத்தில் மட்டும் தோன்றும். சிலருக்குத் தீக்காயங்கள் ஏற்பட்டபின் வெண்புள்ளிகள் நீடித்திருக்கும். இரசாயனத் தொழிற்சாலைகளில் பணிபுரிவோருக்கும், வயல்வெளியில் வேலை செய்வோருக்கும் வேதியல் பொருள்களால் வெண்புள்ளிகள் தோன்றியுள்ளன.

கால்களில் இரப்பர் செருப்பு அணிவதால் ஏற்பட்டு இருப்பதாக பலரும் பார்த்திருக்கலாம். இறுக்கி அணியப்பட்ட அரைஞாண் கயிறு, உள்ளாடைகள், நைலான் துணிகளால் கூட வெண்புள்ளிகள் உண்டாகி இருக்கின்றன. எக்ஸ்ரே, ஸ்கேன் போன்ற ஊதா கதிர்கள் வெண்படை நோயை தோற்றுவித்திருக்கிறது.

நிறம் மங்கி டல்லடிக்கும் சப்பாத்தி, பூரிக்குழவிகளை அதிகக் கடினமில்லாத உப்புத்தாள் கொண்டுத் தேய்த்து சுத்தம் செய்து தண்ணீரில் கழுவி வைத்தால் புதிது போல் ஆகிவிடும். சப்பாத்தி, பூரி இடும்போது ஒட்டாமல் இட வரும்.

— லட்சுமி சுந்தரம்



> எவன் அழைக்காமல் பிறர் வீட்டிற்கு அடிக்கடி செல்லுகின்றானோ, தன்னைக் கேளாமல் இருப்பவனிடம் தானாகவே பல விஷயங்களைக் கூறுகின்றானோ, அவன் மூடபுத்தியுள்ள கீழ்ப்பட்ட மனிதன்.
>
> — விதுரநீதி
>
> தகவல் : வயலூர் பா. குணா

எக்சிமா (Eczema) எனப்படும் ஒவ்வாமை நோய், செதில் உரிதல் (Psuriasis) எனப்படும் நோய் கூட அடிப்படை காரணமாக இருந்து மெலானின் செயலாக்கத்தைக் குன்ற வைத்துவிடுகிறது.

## இளநரை :

"நாற்பதுக்குப் பின் நரை" என்பார்கள். ஆனால் இப்போது சிறுவயதிலேயே நரை (Premature grey hair) வர ஆரம்பித்து விடுகிறது. இந்த நரைக்கு அடிப்படை காரணம் மெலானின் நிறமிகள்தான். இதன் செயலாக்கம் பரம்பரையாகக் குறைகிறது. கவலை, துக்கம் போன்ற மன உளைச்சல்கள் கூட உருவாக்கிவிடுகிறது. ஹார்மோன்கள் சிரின்மை கூட காரணமாகிறது. 25 வயதுக்குட்பட்ட சிகிச்சை பலன் தந்திருக்கிறது.

## உணவுக் கட்டுப்பாடு:

உணவில் பால், தயிர், மோர், மீன், முட்டை, மாமிசம் போன்றவைகளை விலக்க வேண்டும். உணவில் கேரட், பீட்ரூட், அன்னாசி, நெல்லி கீரைகளை அதிகம் சேர்க்கலாம்.

## சிகிச்சை :

வெண்புள்ளிகளுக்கு சிகிச்சை என்றால் யாரும் நம்ப மாட்டார்கள். பல டாக்டர்களை பார்த்து சலித்துதான் போயிருப்பார்கள். சீக்கிரம் குணமாக வேண்டும் என்ற அவசரம் பல டாக்டர்களை மாற்றிப் பார்க்க வைத்துவிடுகிறது.

வெண்படை நோயை ஹோமியோபதி மருந்துகளால் குணமாக்கலாம். ஒரு சிறுபுள்ளி விழுந்தால் குணமாகும், உடல் முழுதும் இருந்தால் குணமாகாது என்ற வித்தியாசம் இல்லை. விட்டிலிகோ, லூக்கோடெர்மா இரு வகைகளையும் நிச்சயமாக குணமாக்கலாம்.

ஹோமியோபதி மருந்துகளால் முழுமையாக குணமாகும். வெளிப்பூச்சு மருந்துகளால் பூசி சூரிய ஒளியில் காட்டும் மருந்துகள் தற்காலிகமாக புள்ளிகளை தோன்ற வைக்கும் பின் மறைந்து விடும். வெண்படை நோயைப் பொறுத்த வரையில் பொறுமைதான் முக்கியம். ஹோமியோபதி சிகிச்சையில் முழுமையாக குணமாக்கலாம்.

உடல் முழுதும் பரவிய வெண்புள்ளிகள் நோயாளிகள் நலம் பெற்று இருக்கின்றனர். வெண்படை நோய் குணமாகாத நோய் என கவலைப்பட தேவையில்லை. ஹோமியோபதி மருத்துவம் கை கொடுக்கும்.

*(டாக்டர் ஆர். ஞானசம்பந்தம் ஈரோடு அரசு மருத்துமனை எதிரில் மருத்துவமனை நடத்தி வருகிறார். போன்: 219344. சென்னையில் வெள்ளி சனி தோறும் இராயப் பேட்டை வாயிட்ஸ் ரோடு சிவா மருத்துவ மனை. போன்: 8260451 வந்து சிகிச்சை அளிக்கிறார்.)*

**சமீபத்தில் மணிப்பாலில் இருக்கும் என் சகோதரன் வீட்டிற்கு சென்றிருந்தேன். அப்போது பக்கத்து வீட்டுக்காரர்கள் பலா இலையை மடித்து, அதற்குள் இட்லி மாவை ஊற்றிச் செய்த இட்லி கொண்டு வந்தார்கள். (கன்னடத்துக்காரர்களின் 'ஸ்பெஷல்' இது)ம்... இட்லி தானாக்கும் என்று அலட்சியத்தோடு எடுத்த என்னை திகைக்க வைத்தது. மெது என்றால் மெது. அப்படி ஒரு மெது. (ஸ்பாஞ்ச் தோற்றுவிடும்) எப்படிச் செய்தீர்கள்? ஒரு கிலோ பச்சரிசிக்கு ½ கிலோ உளுந்து என்ற அளவில் போட்டுச் செய்தோம் என்றார்கள். உளுந்து விற்கும் விலையில் இது யோசிக்க வேண்டிய விஷயம் என்றாலும் இனமும் இல்லை என்றாலும், அதன் சுவையை அறிவதற்காக சகோதரிகளும் ஒருமுறை செய்து பார்க்கலாம். (மெதுவுக்குக் காரணம் பலா இலையாக இருக்கலாம் என சில சகோதரிகள் முணு, முணுப்பது கேட்கிறது. ஆனால் பாத்திரத்தில் செய்தாலும் அதே மெது கிடைக்கும் என்றார்கள்.**

**— பூர்ணிமா பாலன்.**

வந்துவிட்டது தமிழ்நாட்டிற்கு !

# வாசு புளியோதரை



## அம்மா பண்றா மாதிரியே!

பழைய கால முறைப்படி கலந்த
**18 சுத்தமான**
**இயற்கையான**
பொருள்கள்

வெறும் சாதத்துடன் கலந்தால் போதும்
காரசாரமான, வாய் ஊறும்,
கலாசார ருசியான உணவு
இத்துடன் உப்பும் தாளிதமும் உள்ளது.




சுகாதார முறையில் தயாரிக்கப்பட்டு
நிமிர்ந்து நிற்கும்படியான பைகளில்
நிரப்பப்பட்டுள்ளது.

Vasu

தயாரிப்பாளர் :- வாசு ஹோம் ப்ராடக்ட்ஸ் ப்ரைவேட் லிமிடெட், சென்னை - 600 097

# இல்லத்தரசிகளுக்கு **8 in 1** வெட்கிரைண்டர்



இணைப்புகள்: 1. வெட்கிரைண்டர், 2. சப்பாத்தி பூரி மாவு பிசைதல், 3. தேங்காய் துருவுதல், 4. பழரசம் பிழிதல், 5. காய்கறி வெட்டுதல், 6. சிப்ஸ் வெட்டுதல், 7. காய்கறி துருவுதல் (சிறியது), 8. காய்கறி துருவுதல் (பெரியது)

சிறப்பம்சங்கள்: மாவு டில்டிங் மற்றும் தானாகவே வெளியேறும் வசதி, 100% Stainless Steel ஆல் ஆனது. Nylo Tuf gear transmission. குறைந்த இடத்தையே ஆக்கிரமிக்கிறது. இறக்குமதி செய்யப்பட்ட டபுள் பால் பேரிங்ஸ் அகன்ற பாகம் கொண்ட உருளைக் கற்கள், இயக்குவதும் பராமரிப்பதும் எளிது. விரைந்து செயலாற்ற வல்லது.

கொள்ளளவு: மாவு அரைத்தல் 2 ltr சப்பாத்தி மாவு பிசைதல் 1 kg.

FITTED WITH




MOTOR

## *Universal*

8 அற்புதங்கள்!

ஒரு வெட்கிரைண்டரின் விலைக்கே!!

---

Marketed by: San Domestic Appliances (P) Ltd., 182, 100, Ft.Road, Tatabad, Coimbatore-641012. Ph:436925. Dealers: Essarr Agencies, Madras. Ph:4347005, Anantha Agencies, Madurai. Ph:30281; Kasianantha & Co., Tirunelveli, Ph:26044, Selvan Shopping Centre, Nazareth, R.M.H.Corporation, Trichy. Ph:703092; A.Venkatraman, Mayiladuthurai. Ph:22153; Shanthi Electricals, Madras. Ph:5221634; Lakshmi Electronics, Attur. Ph:40576; Lakshmi Agencies, Pondicherry. Ph:34736; Lakshmi Agencies, Villupuram. Ph:3057; Cuddalore, Ph:853; Lakshmi Enterprises, Karaikal, Ph:32597; Haseen Enterprises, Neyveli, Ph:22033; Ramco Agencies, Salem, Ph:44171; Vijayathenu Vilas, Karaikudi. Ph:32886; Prakash Traders, Hosur. Ph:22829; Sri Rams, Nagercoil. Ph:27886; Rajendra & Co., Coimbatore. Ph:231265; M.M.Home Appliances, Vijayawada, Ph:65370; Madras Stores, New Delhi. Ph:345703; Bhima Stainless Steel & Ind., Alleppey, Ph:60027. Murthy Radio Service, Krishnagiri.



# அழகுக்கு அழகு செய்ய...

## மருதாணி :

இது ஓர் அற்புதமான இலை. கற்பவிருட்சம் போன்றது. தலைமுதல் பாதத்திற்கு வேண்டிய அத்தனை போஷாக்கும் அடங்கியது மருதாணியின் இலையின் சக்தி. பெண்களுக்கு மங்கலமும், அழகும், உடலுக்குக் குளிர்ச்சியும் தருவது மருதாணி. சங்க காலத்தில் பெண்கள் 'செம்பஞ்சுக் குழம்' என்னும் வண்ணத்தைப் பூசி கரங்களை அழகுபடுத்திக் கொண்டதாக இலக்கியங்களில் கூறப்படுகிறது. பெண்கள் உள்ளங்கை விரல் நுனி கால்களில் மருதாணியைப் பூசிக் கொள்கிறார்கள். அழகுக் கலை நிபுணர்கள் கலைத்திறனோடு மிகவும் அழகாக டிசைன் போடுகிறார்கள்.

அதிகமாக ராஜஸ்தான், குஜராத், மத்தியப் பிரதேசம் ஆகியவற்றில் இக்கலை பிரசித்தி பெற்றது. இங்கும் வடஇந்தியர்கள் அதிகம் இருக்கும் பகுதியில் இக்கலை இருக்கும். இவர்கள் கல்யாணங்கள் 'மெஹந்தி'யில்தான் ஆரம்பம் ஆகிறது. கல்யாணத்திற்கு முன் மெஹந்தி இடும் நாள் அமர்க்களமாகக் கொண்டாடப்படும். வரும் உறவினர் பெண்கள், வீட்டுப் பெண்கள் அனைவரும் மெஹந்தி இட்டுக் கொள்வார்கள். கைகளில் மணிக்கட்டிலிருந்து விரல் நுனி வரை, மேல் கை உள்ளங்கை இரண்டிலும், காலில் ஷூ அணிவது போல் கணுக் காலுக்குச் சற்று மேல் இருந்தும் வரையலாம். மணப்பெண் அலங்காரத்தில் மெஹந்தி சிறப்பான இடத்தை வகிக்கிறது.

மருதாணிப் பொடியுடன், கததா, நெல்லிக்காய்ப் பொடி உயர்தர மூலிகைகளைக் கொண்டு நான் தயாரிக்கும் 'ஹென்னா' கண்டிஷனர் மிகவும் எல்லாராலும் வரவேற்கப்படு கிறது. மருதாணி போட்டால் தலைமுடி சிவப்பாக மாறிவிடும் என்று நினைத்துப் பலர் போடாமல் இருக்கின்றனர். கட்டாயம் சிவப்பாக மாறாது. மாறாக தலைமுடிக்கு நல்ல கருமையான நிறமும், பளபளப்பும் கிடைக்கும். ஹென்னா கண்டிஷனர் தலைமுடிக்குப் போடுவதால் பொடுகுத் தொல்லை குறைகிறது. உடல் உஷ்ணம் குறைவதால் முகத்திற்கு நல்ல பளபளப்பும் கிடைக்கிறது. நான் பூரா கறுகறுப்பாக இருக்க உதவுகிறது. சரியான விகிதாசாரத்தில் கலக்கும் ஹென்னா தலை முதல் பாதம் வரை சிறக்க பயன்படுத்தப்படுகிறது.

உதட்டுச் சாயத்தின் வண்ணத்தின் மூலம் பெண்கள் தங்களின் அழகைக் கூட்ட முடியும். கம்பீரமாகத் தோற்றமளிக்க முடியும்! பார்ப்பவர்களுக்கு ரம்மியமாக இருக்குமாறு உதட்டுச் சாயம் உபயோகப்படுத்த வேண்டும். உதட்டுச் சாயத்தினால் மகிழ்ச்சியை பிரதிபலிக்க முடியும். இன்றைய நவநாகரிகப் பெண்ணும் தன் வாழ்வின் மிக முக்கியமான திருமண நாளன்று சர்வாலங்கார பூஷிதையாக கணவனுக்குகந்த மனைவியாக புகுகிறாள்.

அதே போல திருமணத்திற்கு வரும்

பெண்களிடையே பலவித அலங்காரங்கள் இருக்கின்றன. மூக்குத்தி மறுபடியும் ஃபாஷனாக வந்து விட்டது. திருமணங்களில் அழகாகத் தோற்றமளிக்க காலை வேளைகளில் மெல்லிய சங்கிலி, வளையல், வாட்ச் என்று அணியலாம். மாலை வேளைகளில் வைரம், பவழம், முத்து போன்ற நகைகள் செட் செட்டாக அணிவது எடுப்பாக இருக்கும். உயரமான பெண்கள் காசுமாலை, லாங்செயின் அணியலாம். புராதான நகைகள் இப்போது ஃபாஷனாகி வருகிறது. பவழத்தினாலான புராதான மாலைகள் இப்போது அணியப்படுகிறது.

இன்று பல பெண்களுக்கு தலையில் பொடுகு வந்து மிகவும் அவதியுறுகின்றனர். அதிகமான எண்ணெய்ப் பசையினால் தலையின் தோல் (scalp) உரிந்து சிலருக்கு சிகப்பாகி முடி விழுந்து சிறிய வழுக்கையாக (patches) இருக்கும். மூலிகை எண்ணெய் உதவி கொண்டு இதற்கு சிகிச்சை அளிக்கலாம். தினமும் இரவில் அரை ஸ்பூன் விளக்கெண்ணெயை உச்சந்தலையில் தேய்த்துக் கொள்ளவும். உடல் சூடு தணியும். பொடுகுத் தொல்லை தீர உடல் சூட்டைக் குறைப்பது அவசியம்.

ரொம்பவும் பொடுகு உபத்திரம் இருப்பின் எலுமிச்சம்பழத்தை இரண்டாகப்

கால் டம்ளர் தண்ணீரில் இரண்டு அல்லது மூன்று ஸ்பூன் வெந்தயத்தை முதல் நாள் இரவு ஊறவைத்து மறுநாள் காலையில் வெறும் வயிற்றில் அந்த ஊறிய வெந்தயத் தண்ணீரைக் குடித்தால் உடல் உஷ்ணம் நன்றாகக் குறையும். அதே வெந்தயத்தில் இரண்டு, மூன்று முறை மேலும் தண்ணீர் விட்டு நான்கு மணி நேரம் ஊற வைத்து அந்தத் தண்ணீரைக் குடிக்கலாம். பிறகு அந்த வெந்தயத்தைத் தூர எறியாமல் ஒரு செடிச்சட்டியில் மணல் பரப்பித் தூவிக் கிளறி வைத் தால் மறுநாளே வெந்தயச் செடி முளைத்து விடும். ஜோராகக் கீரை மசியல் செய்யலாம்.

— சியாமளா



பிளந்து, தலை முழுவதும் சீராக தேய்த்து ஒரு மணி ஊறியபின் ஷாம்பூ கொண்டு தலைக்குக் குளிக்கவும். அழுக்கு போக வாரம் இருமுறை சுத்தப்படுத்த வேண்டும். முடிக்கு வித்தாக இருப்பது இரும்புச்சத்து. இரும்புச்சத்து அதிகம் உள்ள முருங்கைக்கீரை, அகத்திக்கீரை, புளிச்சக் கீரை, கறிவேப்பிலை போன்ற கீரை வகைகளையும், பருப்பு வகைகளையும், பால் ஆகியவற்றையும் தினசரி உட்கொள்ள வேண்டும்.

எவ்வளவு பெண்களைத் தலையிலிருந்து கழுத்து வரை ஒரு நிறத்திலும், முழங்கால் வரை வேறொரு நிறத்திலும், அதற்குக் கீழே இன்னுமொரு நிறத்திலும் காண்கிறோம்? இம்மாதிரியான தோற்றம் ஓரளவு சீதோஷ்ண நிலை அல்லது உடைப் பழக்கத்தைப் பொறுத்து அமைகிறது. உண்மையில் தங்களை அவர்கள் போதிய அளவு கவனிக்கத் தவறி விட்டார்கள் என்றுதான் இதற்குப் பொருள்.

சருமத்திற்கு உட்பராமரிப்பு (internalcare) வெளிப் பராமரிப்பு (external care) இரண்டுமே மிக அவசியம். நிறைய பவுடர் போட்டுக் கொள்ளுவதாலோ, அல்லது நிறைய கிரீம் அப்பிக் கொள்வதாலோ சருமம் பாதுகாப்பு பெற்று விடாது. வறண்ட சருமம், அதிகமாய் எண்ணெய் சுரக்கும் சருமம், சொரசொர சருமம், அளவுக்கு அதிகமாய் கருங்கித் தொய்யும் சருமம் இவைகளுக்கு ஏற்றவாறு உயர்தர மூலிகைப் 'பேக்'குகள் இருக்கின்றன. நானும் 'ஹெர்பல் பேக்' (Herbal pack) தயார் செய்கிறேன். மூலிகைச் சத்து நிறைந்த வைட்டமின் ஆயில் மணப்பெண் அலங்காரத்திற்குப் பயன்படுத்துகிறோம். இது சருமம் பளபளக்கச் செய்ய உதவுகிறது. இவை பற்றியெல்லாம் என்னோடு பேச விரும்புபவர்கள் 6383596 எனும் என் தொலைபேசியில் பேசலாம்.

வறண்டு அதோடு எண்ணெய்ப் பசையுடனும் விளங்கும் சருமத்தில் பொதுவாய் எண்ணெய்ப் பசைப் பகுதி T. வடிவில் நெற்றியிலும் மூக்கு பாகங்களிலும் காணப்படும். கன்னங்களின் மேல் பகுதியும், கன்னமும் வறண்டு காணப்படும். மூலிகை ஃபேஷியல் மூலம் சரிசெய்து சருமத்திற்கு பளபளப்பு ஏற்படுத்தலாம். மூலிகை பேக் சருமம் மென்மையாகவும் இளமையோடும் விளங்க அவசியம் தேவைப்படுகிறது. சருமத்திலுள்ள இயற்கை ஈரத்தன்மையைப் பாதுகாக்க உதவுகிறது.

— **ஹேமா லக்ஷ்மண்**

*அழகு மற்றும் சிகை அலங்கார நிபுணர்.*

# கைவிடப்பட்ட குழந்தைகள்



### மும்பாய் சம்பவம் – ஒருத்தி மகளாய்ப் பிறந்து.

உஷா – ஜக்துப் தம்பதியர், மணமாகிப் பல வருடங்களாகியும், வீட்டில் பேசும் பொற்சித்திரம் இன்றி வருந்தினர். மும்பாய் அந்தேரியில் குடியிருக்கும் அவர்களது வாழ்க்கையில், ஜூன் மாதம் 25 அன்று ஒரு அதிர்ஷ்டத் தென்றல் வீசியது. பிறந்து ஒரு நாளான, பெண் சிசு ஒன்று அவர்களது வீட்டில் மணம் வீசிற்று.

அது வந்து சேர்ந்த விதம்தான் கதை போன்றது.

தெருக் குப்பைத் தொட்டியில் ரிக்ஷாக்காரன் ஒருவன் இந்தக் குழந்தையைக் கண்டெடுத்து வீட்டிற்கு எடுத்துச் சென்றான். அவன் மனைவி அதை வளர்க்க மறுத்தாள். அருகே சலவைத் தொழிலாளி லஷ்மியிடம் கொடுத்தனர்.

இந்த விவரம் தெரிந்து பலர் கூடினர். உஷாவும் வந்தாள். குழந்தை கண்டு அவள் நெஞ்சம் நெகிழ்ந்தது. இறைஞ்சினாள். இறுதியில் லட்சுமி ரூ. 700க்கு அக்குழந்தையை உஷாவிற்கு விற்று விட்டாள்.

உஷா தனது நகைகளை அடமானித்து ரூ. 1500 தந்து, குழந்தையுடன் வீடு திரும்பினாள். விலையுயர்ந்த சில அத்தியாவசியப் பொருட்களை வாங்கிக் குவித்தாள். ஆரோக்கிய குழவியைக் கண்டு உஷா குதூகலம் அடைந்தாள்.

அதற்குள் போலீசிற்கு விஷயம் தெரியவந்தது. இன்ஸ்பெக்டர் பிருதிவி ராஜ் கூறினார். "நீங்கள் குழந்தையை நேரடியாகப் பொறுப்பேற்க முடியாது. அதனைக் குப்பைத் தொட்டியில் கண்டெடுத்தேன் என்று மனு எழுதித் தாருங்கள். விசாரணை முடிந்ததும் உங்களிடம் தருகிறோம்..."

உஷா முகம் இருண்டது.

காவற்படை சிசுவை கூப்பர் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்று, சிகிச்சை பெற்றபின், மாதுங்கா மானவ மந்திர் என்ற கைவிடப்பட்ட குழந்தைகளைப் பாதுகாக்கும் சமூக ஸ்தாபனத்திற்கு அனுப்பினர்.

"நான் பால் வாங்கப் போனபோது குழந்தையைக் கண்டேன். உஷாவிற்கு மகப்பேறு இல்லை என்பதற்காக அவளுக்கு அளித்து விட்டேன். விற்கவில்லை" என்று லஷ்மி கூறினாள்.

இந்தக் குழந்தை நாடகம் இன்னும் முடியவில்லை.

"என்ன செலவானாலும் அந்தச் சிசுவை மீட்டு வளர்ப்பேன்" என்கிறாள் குழந்தைக்கு ஏங்கும் உஷா.

போலீஸ் சட்டப்படி விசாரணை நடத்தும்.

உண்மையான பெற்ற தாய்க்கு இந்த விஷயம் தெரியுமா?



அடுத்து ஹைதராபாத் நிகழ்ச்சியைக் காண்போம் -

### சாக்கடையிலிருந்து பூக்கூடைக்கு...

ஜூன் மாதம் 14 வெள்ளிக்கிழமை. ஆந்திர அரசு பஸ் கார்ப்பரேஷன் ஓட்டுனர் வெங்கடேஷ் இரவு உணவுக்குப் பின் உலா சென்று வீடு திரும்பினார். ஹைதராபாத் ஆனந்த் நகர் தும்மலா பஸ்தியில் அவரது வீடு.

ஒரு குழந்தையின் அழுகை சப்தம் ஓயாது கேட்டது. அடுத்த வீட்டு சிசு என எண்ணினார்கள். அழுகுரல் அலறலாக ஒலிக்க வெங்கடேஷும், மனைவியும் இருட்டில் டார்ச் எடுத்துக் கொண்டு, குரல் வரும் திசையில் சென்றனர்.

அங்குள்ள கழிவு சாக்கடையில் ஈர மண்



ணில், புற்களின் நடுவே நிராதரவாக பாலுக்கும், தாயன்பிற்கும் ஏங்கும் இளம் சிசு. போதுமான துணி இல்லை. எறும்புகள் மொய்த்த வண்ணம். ஐயோ பாவம்! வெங்கடேஷ் குழந்தையைத் தூக்கினார். இரண்டு நாளான, பால் மணம் அறியாத சிசு.

வீட்டிற்குக் கொண்டு வந்து துடைத்துப் பார்த்ததில், வலது கால் விரலில் எலி கொறித்த காயங்கள். அறியாக் குழந்தையே, பிறக்கும் போதே உனக்கு இத்தனை இடிபாடா? பால் குடித்த குழந்தையை மருத்துவரிடம் அழைத்துச் சென்று கால் விரலுக்குக் கட்டுப் போட்டனர்.

வெங்கடேஷ் - விஜயலட்சுமி தம்பதிக்கு ஒரு பெண் இரு பிள்ளைக் குழந்தைகள் இருந்தனர். "இது நாலாவதாக இறைவன் தந்த பரிசு. இதனை வளர்ப்போம்" என முடிவு செய்தனர். கருணை நிரம்பிய வளர்ப்புத் தாய் வெள்ளிக் கிழமை வீட்டுக்கு வந்த பெண் குழந்தையை வரலட்சுமி என்று அழைத்தாள்.

செய்தி பரவிய போது சுற்று ஜனம் கூடினர். ஓட்டுனரின் மனிதாபிமானத்தைப் பாராட்டினர். மகப்பேறு இல்லாத ஒரு சில பெண்கள் "உங்களுக்கு மூன்று குழந்தைகள் இருக்கிறார்கள். என்னிடம் தந்தால் நான் வளர்க்கிறேன்" என்றனர்.

இவளைப் பெற்றத் தாய் வந்தால் கூட தர மாட்டேன். குழந்தையை கைவிட்ட அவளுக்கு இனி உரிமை இல்லை என்று வெங்கடேஷ் தம்பதியர் கூறி குழந்தையை அணைத்துக் கொண்டனர். சாக்கடையில் கிடந்த சிசுவிற்கு, பூக்கூடையில் நுழைந்த மாதிரி சுகமான அனுபவம்.

இதைப் பற்றி கேள்விப்பட்ட ஆந்திர மாநில ஆளுனர் கிருஷ்ணகாந்தும், வெங்கடேஷ் குடும்பத்தை தன் ராஜ் பவனிற்கு வரவழைத்து வெங்கடேஷின் மனிதாபிமான உணர்வைப் பாராட்டினார். ஆளுனர் துணைவி ஸ்ரீமதி சுமன் கிருஷ்ணகாந்த் குழந்தையை உச்சிமுகர்ந்து மகிழ்ந்தார். அவர் மஹிளா சமாஜத் தலைவி.

வெங்கடேஷ் குழந்தைகள் ஸ்ரீதரும், சிதாவும் இரண்டு நாட்கள் பள்ளிக்கு மட்டும் போட்டு வரலட்சுமியைக் கொஞ்சினர். வெங்கடேஷ் ஒரு வாரம் ஆபீஸில் விடுமுறை கோரி வீட்டில் சிசு பராமரிப்பு.

ஒரு அரசு இலாகா, தும்மல் பஸ்தி புதிய பிரஜை வளர்ப்புக்கு ரூ 5000/- ஐ கொடை வழங்கியது. ஒரு டீ.வி. ஸ்தாபனம் இந்த நற்பணியை ஒரு செய்திக் கதையாக வழங்கி வெங்கடேஷ் குடும்பத்தைப் பாராட்டியது.

கைவிடப்பட்ட அனாதை மாணிக்கம், போக்கத்து சாக்கடையில் கிடந்த ரோஜா கவர்னர் மாளிகை வரை சென்று வந்தது.

### சட்டம் என்ன கூறுகிறது?

மும்பாய், ஹைதராபாத் இரண்டு நிகழ்ச்சிகளிலும் கைவிடப்பட்ட குழந்தைகளை ஒரு குடும்பம் வளர்க்க முன் வருவதை ஒரு மனிதநேயக் கதையாகத் தான், நாம் எண்ணுகிறோம். ஆனால் சட்டம் என்ன கூறுகிறது?

இந்த மாதிரி அநாதரவு கேஸ்களில் சிசு கண்டுபிடிப்பை போலீஸாருக்குத் தெரிவிக்க வேண்டும். அல்லது இளங் குற்றவாளிகள் கோர்ட்டில், தாக்கல் செய்ய வேண்டும். அவர்கள் விசாரணை புரிந்து,

# நெஞ்சைத் தொடும் பரிசு... நிலையான பரிசு.

**தித்திக்கும் தீபாவளித் திருநாளில், உங்கள் மனம் கவர்ந்தோருக்கு வாழ்த்துக் கூற விரும்புவீர்கள் அல்லவா?** வாழ்த்துடன், பரிசு தருவதுமல்லவா நமது மரபு! எனவேதான், மில்டன் அறிமுகப்படுத்துகிறது நெஞ்சைத் தொடும் பரிசுகளை! இவை மிக மிக வித்தியாசமானவை. நினைவை விட்டு அகலாதவை. ஒவ்வொருவரின் ரசனைக்கும், பர்சுக்கும் ஏற்றவாறு மில்டன் திருவிழா கால பரிசு அணிவரிசை வடிவமைக்கப்பட்டுள்ளது. கேஸரோல்ஸ், வேக்யூம் ஃபிளாஸ்க்ஸ் அல்லது டிஃபன் பாக்ஸ்-இவை அனைத்துமே, முன்பின் காணாத புதுமையான வடிவங்களிலே, கவர்ச்சிகர நிறங்களிலே வருகின்றன. மில்டன் மட்டுமே புரட்சிகர டஃப் பஃப் இன்சுலேஷனை, தனது எல்லா தெர்மோவேர் தயாரிப்புகளிலும் பொருத்தி இருக்கிறது. எனவே, இந்த தீபாவளித் திருநாளில் எப்படி வாழ்த்தினால், உங்கள் மனம் கவர்ந்தோரின் மனம் கவர முடியும் என்று இப்போது உங்களுக்குத் தெரியுமல்லவா?!

எத்தனை தீபாவளிகளுக்குத்தான், இனிப்புகளையும், உலர் பழங்களையுமே திரும்பத் திரும்பத் தருவது?!












தட்டை செய்யும் போது கையால் தட்டி வட்டமாக்கிய பிறகு வட்டமான மூடி அல்லது பிஸ்கட் கட்டர் அல்லது குழந்தைகள் விளையாட்டு பிளாஸ்டிக் செட்டில் உள்ள விலங்கு அச்சுக்களை உபயோகித்து வெட்டிப் பொரித்தால் தட்டை வாய்க்கு ருசியோடு மட்டும் இல்லாமல் கண்ணுக்கும் ரம்யமாக இருக்கும்.

– சுமதி



அனுமதிக்கப்பட்ட சிசு காப்பகங்களுக்கு தற்காலிகமாக அனுப்பி வைப்பார்கள்.

'கைவிடப்பட்ட' குழந்தை என்ற சொல்லுக்கு உரியதாவதற்கே சில விதிமுறைகள் உள் ளன. அது அந்த ஊரிலேயே 'காணாமற் போன' சிசுவாக இருக்கலாம். குந்தி போன்று அது விடப்பட்ட குழந்தையாக இருந்தாலும் அவருக்கு மூன்று மாத காலத்திற்குள் திரும்பி வந்து தன் குழவியைத் திரும்பக் கேட்க உரிமை உண்டு. இது சட்டம்.

அந்த மூன்று மாத கால கட்டத்திற்குள் அதற்கு உரிமை கொண்டாடி ஒருவரும் வராவிட்டால் அது 'கைவிடப்பட்ட' (abandoned) பிறப்பாகக் கருதப்படும். பிறகு தனியார் அல்லது அரசு சார்ந்த ஆஸ்ரமங்களில் அது விடப்படும். தனி மனிதரிடம் 'தத்து' கொடுப்பதில்லை.

ஹிந்து குழந்தை சுவீகார, வளர்ப்புச் சட்டம் (1956) கீழ், 'தத்து' எடுக்கும் போது அந்த சிசு காப்பகம் பல விதிமுறைகளை கவனிக்க வேண்டும்.

குழந்தையை வளர்க்க மனுகோரும் பெற்றோர்களுக்கு சில தகுதிகள் வீடு, சூழ்நிலை, சமூகத் தகுதி, நிதி நிலைமை இவற்றை ஆராய்வார்கள். ஆண் குழந்தை உள்ளவர்கள் பெண் குழந்தையையும், பெண்ணுள்ளவர்கள் ஆண் சிசுவையும் வளர்க்க உரிமை பெறுவார். ஆண்-பெண் இரண்டும் இருந்தால் உரிமை இல்லை.

'கண்டெடுத்தது நான், வளர்க்கும் உரிமை எனக்கே' என யாரும் கூறிப் பெற இயலாது.

ஹைதராபாத் கேஸில் போலீஸ் விதிமுறையைக் கண்டு கொள்ளவே இல்லை. கவர்னர் பாராட்டினார். ஸ்ரீமதியும் சிசுவைக் கொஞ்சினார் என்பதால் காவற்படையும், அரசும் வாயடைத்து விட்டனவோ என்னவோ? ஒரு பெண் நலசமூக ஸ்தாபனம் இந்த நிகழ்ச்சியிலுள்ள விதிக்குப் புறம்பான பல குளறுபடிகளைச் சாடுகிறது.

ஸ்ரீமதி கிருஷ்ணகாந்த் ஒரு சமூக சேவகி. அவருக்கு சட்டங்கள் தெரியாதா?

எப்படி இருந்தால் என்ன? வரலட்சுமி இன்று டிரைவர் வீட்டில் லக்ஷ்மியாக வளர்கிறாள். பொது மக்கள் கண்களுக்கு மனிதநேயமே புலப்படுகிறது. சட்டத்தின் விதிமுறைகள் அல்ல!

- சுபஸ்ரீ

ஃப்ளாட்களில் பட்டாக விட ஆரம்பிக்கும் முன் பார்க்கிங் லாட்டில் நிற்கும் கார்களையும், ஸ்கூட்டர்களையும் ஏதாவது ஒரு ஒதுக்குப்புறமான இடத்தில் வைத்து விடச் சொல்வது நல்லது. விபத்துக்கள் தவிர்க்கப்படும்.

- உஷா





சில வட இந்திய மாநிலங்களில் ஒவ்வொரு தீபாவளிக்கும் ஒரு புதுப் பாத்திரம் வாங்குவது என்ற பழக்கம் உண்டு. இந்தப் பழக்கம் இங்கும் நடைமுறைப்படுத்தப் பட்டால், நீங்கள் எந்தப் பாத்திரத்தை முதலில் வாங்குவீர்கள்? என்று சிலரைக் கேட்டோம்.

# தீபாவளிப் பாத்திரம்

**பத்மாவதி :**

"சொம்புதான் என் சாய்ஸ். அந்தக் காலத்திலேயே வீட்டுக்கு பித்தளைச் சொம்பு ரொம்ப அவசியம்னு சொல்வாங்க. தண்ணீர் குடிப்பதற்காக மட்டுமில்லே. நம் வீட்டுக் கிணற்றிலே ஏதாவது சாமான் விழுந்து, அதை எடுக்க பக்கத்து வீட்டிலே பாதாள கொலுசைக் கடன் வாங்கணும்னால், அதுக்கு ஈடாக நம் வீட்டுச் சொம்பை அங்கே வச்சிட்டு வரணும். அப்போதான் வாங்கிட்டுப் போனதை மறக்காமல் திருப்பித் தருவோமாம்! என்னைப் பொறுத்தவரை ஒவ்வொரு வீட்டிலுமே ரெண்டு மூணு சொம்பாவது புழக்கத்திலே இருககணும்னு சொல்வேன். சாப்பிடும்போது சொம்பிலே தண்ணி வச்சுக்கறது நல்லது. நிறைய தண்ணி குடிச்சா உடம்புக்கு நல்லதுன்றாங்க. அதற்கு சொம்பு உதவுமே."

**உமா மகேஸ்வரி :**


• பத்மாவதி

"பாத்திரம் என்பது எப்போதுமே நல்ல முதலீடு. சமையல் தொடர்பான பாத்திரத்தைத்தான் முதலில் வாங்குவேன். வீட்டிலிருக்கும்போது அதிகம் புழங்கும்படி இருப்பது கிச்சன்தானே. காப்பர்-பாட்டம் கொண்ட கடாயைத்தான் வாங்குவேன். இதில் எதையுமே சீக்கிரம் வறுத்தெடுக்கலாம் என்பது ஒருபுறம் இருக்க, எரிபொருளும் மிச்சமாகுதே. எரிபொருள் சிக்கனம் என்பது நாட்டுக்கும் சரி, 'காஸ'க்கு தகவல் சொல்லிவிட்டு காத்துக் கிடக்கிற காலகட்டத்தில் இருக்கும் நமக்கும்


• சௌம்யா

சரி, ரொம்ப முக்கியமானதாச்சே."

**சௌம்யா :**

"அப்பா அம்மாவுக்கு ஓர் அழகான பித்தளை ஃப்ளவர் – வாஸை தேர்வு செய்வேன். சூரியன், சந்திரன் இதெல்லாம் கூட அதிலே பொறிக்கப்பட்டிருக்கும். அதனுள்ளே செயற்கைப் பூக்களை வைக்க மாட்டேன். என் பாசத்தைத் தெரிவிக்கிற மாதிரி வெள்ளை மற்றும் சிகப்பு ரோஜாக்களை வச்சுத் தருவேன். என்னையும் என் தங்கையையும் பூ மாதிரி வச்சுத் தாங்கிக்கிட்டிருக்கிற என் பெற்றோருக்கு என்னுடைய தீபாவளிப் பரிசு இதுதான்."

**உமா ராணி :**

"ஒரு ஃப்ரெண்ட் வீட்டிலே ரொம்ப நாளாக ஒரு செப்புப் பானையைப் பார்க்கிறேன். அதிலே தண்ணீரை விட்டு சுமார் ஆறு மணி நேரம் கழிச்சுக் குடித்தால் உடலுக்கு நல்லதாம். இதை வாங்கணும்னு எனக்கு ரொம்ப ஆசை. ஆனால் ஏனோ இதுவரை வாங்கக் கை வரவில்லை. நீங்க சொல்ற மாதிரி பழக்கம் இங்கேயும் வந்ததுன்னா, இதுதான் சாக்குன்னு இந்தப் பானையை [illegible] வாங்கிடுவேன்."





• உமா மகேஸ்வரி

**கோமதி :**

"ஒரு அழகிய வேலைப்பாடமைந்த தாம்பாளத் தட்டைத்தான் வாங்குவேன். ஒன்றுக்கு இரண்டாக இது வீட்டில் இருந்தாலும் நல்லதுதான். வீட்டுக்கு வரும் பெண்களுக்குத் தாம்பூலம் வைத்துக் கொடுக்க வேண்டுமானால் தேட வேண்டிய அவசியமில்லாமல் டக்கென்று தட்டுப்படும் இல்லையா? முன்பு நான் குடியிருந்த வீட்டில் சக குடித்தனக்காரப் பெண்மணி ஒருவர் 'விளக்கு வைப்பதற்கு ஏற்ற மாதிரி சின்னதாக ஒரு தாம்பாளம் வாங்கணும்'னு வெகு நாட்களாகச் சொல்லிக் கொண்டிருந்தார். அந்த வீட்டை காலி செய்யும்போது அது போல் ஒரு சின்ன தாம்பாளம் ஒன்றை வாங்கிக் கொடுத்து விட்டு வந்தேன். நிறைவாக இருந்தது."



• கோமதி

— அருண்சரண்யா

• உமா ராணி

# மூலநோயை அகற்றும் மூலிகை மருந்துகள்

டாக்டர் எஸ். அக்பர் கவுஸர்



அலுவலகத்தில் பணிபுரிபவர்கள், அதிக நேரம் உட்கார்ந்திருப்பவர்கள், மாமிசம், மீன், முட்டை, மிளகாய், பட்டை, லவங்கம் போன்ற உஷ்ணமான உணவு வகைகளை சாப்பிடுபவர்கள், வெளியூரில் வேலை செய்பவர்கள், ஓட்டல் சாப்பாட்டில் உயிர் வாழ்பவர்கள், காரமான உணவு சாப்பிடுபவர்கள், மது மற்றும் போதை பழக்கத்திற்கு அடிமையானவர்கள், இவர்களுக்கு மலத்துவாரத்திற்குள் மருக்களின் வடிவில் கட்டிகள் தோன்றும். இவைகளிலிருந்து சில சமயம் இரத்தம் கொட்டும்.

## இரத்தம் கொட்டும் மூலம் :

மலத்துவாரத்திற்குள் உள்ள நரம்புகளில் கெட்டுப் போன சூடான இரத்தம் கூடும். இதனால் மலத்துவார மருக்களில் வீக்கம், அரிப்பு ஏற்பட்டு இரத்தக் குழாய்கள் வெடித்து இரத்தம் கொட்டும். மலத்துடன் சில சொட்டுகள் இரத்தம் கலந்து வரும் சிலருக்கு மலம் கழித்தபின் இரத்தம் அதிக அளவில் வெளியேறும். இதனால் உடல் பலவீனமாகும். இதை இரத்தம் கொட்டும் மூலம் என்பார்கள்.



## உள் மூலம் :

மலத்துவாரத்திற்குள் சிறிய மருக்களின் வடிவில் கட்டிகள் தோன்றும். இவைகள் கூர்மையான காம்பு வடிவிலும், திராட்சைகளின் கொத்தாகவும் காணப்படும். இவைகளில் வீக்கம், எரிச்சல் உண்டாகும். இடுப்பு முதல் பாதம் வரை வலி சோர்வு, உடல் வலி, மலத்துவாரத்தில் எரிச்சல், வீக்கம் ஏற்படும். நடமாடவோ ஓய்வு எடுக்கவோ மிகவும் சிரமமாக இருக்கும். இந்தக் கட்டிகளிலும் கெட்டுப் போன இரத்தம் இருக்கும். இவைகளை ஆங்கில மருத்துவர்கள் அறுவை சிகிச்சை செய்து அகற்றி விடுவார்கள். ஆயினும் மூலக் கட்டிகள் அவ்வப்போது தோன்றிக் கொண்டேதான் இருக்கும்.

மூலக்கட்டிகளிலிருந்து வெளியேறும் இரத்தத்தை உடனடியாக நிறுத்துவதால் அது மற்ற பாகங்களுக்குச் சென்று விடுகிறது. எனவே அதை திடீரென்று நிறுத்தக் கூடாது. இரத்தம் அதிக அளவில் வெளியேறிக் கொண்டிருக்கும் போது நோயாளி அசைவில்லாமல் ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும். கால்கள் மேல் நோக்கி வைத்துப் படுக்க வேண்டும்.

நோய் வந்த பிறகு மருத்துவரை அணுகுவதை விட நோய் வராமல் தடுக்கும் முறைகளுக்கே நபி வழி மருத்துவம் முன்னுரிமை அளிக்கிறது. கந்தனா விதைகள் இரவில் சாப்பிடுபவர்களுக்கு மூலநோய் ஏற்படாது என்று அண்ணல் நபிகள் நாயகம்

(ஸல்) அவர்கள் தெரிவித்துள்ளார்கள். சுமார் 1400 ஆண்டுகளுக்கு முன்பு அவர்கள் தெரிவித்த மருத்துவ ஆலோசனைகளை இன்றைய மருத்துவ உலகம் நிரூபித்துள்ளது. இந்தியா, பாகிஸ்தான், பங்களாதேஷ் போன்ற நாடுகளிலும், ஐரோப்பா நாடுகளிலும், நடைபெற்ற ஆராய்ச்சியில் கந்தனா விதைகளும், அதன் இலைகளும் மூலநோயை முழுமையாக குணமாக்குகிறது என்று மருத்துவ விஞ்ஞானிகள் அறிவித்துள்ளனர்.

நம் நாட்டில் வட மாநிலங்களிலும், பாகிஸ்தான், ஆப்கானிஸ்தான் மற்றும் அரபு நாடுகளிலும் கோதுமை பயிர் செய்யும்போது அத்துடன் கந்தனாவையும் சேர்த்து விதைப்பார்கள். கந்தனா செடி, வெங்காயத்தின் வேரைப் போல் இருக்கும். இதன் சுவையும் வாசனையும் பூண்டு போல் இருக்கும். இதன் இலைகள் வேரிலிருந்து தொடங்கும். இலைகளின் நடுவில் தண்டு இருக்கும். இது சுமார் 30 சென்டி மீட்டர் வரை உயரமாக வளரும். இதன் அடிப்பாகம் திடமாகவும் மேல்பாகம் பம்பரம் வடிவில் கொத்து கொத்தான பூக்களுடனும் காணப்படும். ஒவ்வொரு கொத்திலும் சுமார் 300 வெள்ளை நிற சிறிய பூக்கள் இருக்கும். இவைகளைப் பார்க்கும்போது வெங்காய பூக்களைப் போல் தோன்றும். பூக்களுக்குள் மெல்லிய கருநிற விதைகள் இருக்கும். இதன் பச்சிலையை இடித்து அதன் சாற்றையும் விதைகளையும் மருந்தாக பயன்படுத்துவார்கள். ஆப்கானிஸ்தானில் கந்தனாவை ரொட்டியாகவும், இலைகளை கீரையாகவும் சமைத்துச் சாப்பிடுவார்கள். நம் நாட்டில் கந்தனாவை உணவாகவும், மருந்தாகவும் பரவலாக பயன்படுத்துகிறார்கள். தமிழகத்தில் கந்தனா பயிரிடப்படுவதில்லை என்றாலும் இது யுனானி நாட்டு மருந்துக் கடைகளில் தாராளமாக விற்கப்படுகிறது. இதைத் தேடி அலைய வேண்டாம்.

கந்தனாவுக்கு அரபி மொழியில் குர்ராஸ் என்றும், ஆங்கிலத்தில் ஷல்லாச் என்றும், மருத்துவமொழியில் அல்லம் அம்பலோ ராசம் லின் என்றும் பெயர்.

## மூலமும் கந்தனாவும்

கந்தனாவின் பச்சிலைகளை இடித்து அதன் சாற்றைப் பிழிந்து 15 கிராம் அளவில் காலை மாலை இரண்டு வேளை குடித்தால் மூலக்கட்டி வெடிப்புகளால் வெளியேறும் இரத்தம் நின்றுவிடும். இதை சமாக்கு இலைகளுடன் அரைத்து மூலக்கட்டிகள் மீது பூசினால் மூலம் குணம்பெறும். கந்தனா விதைகளை தினசரி 7 கிராம் அளவு இரவில் சாப்பிட்டால் மூலம், பேதி, சீதபேதி ஆகியவை குணம்பெறும். மேலும் நோய் வராமல் தடுக்கும்.

கந்தனா இலைகளையும், விதைகளையும் பக்குவப்படுத்தி தயாரிக்கப்பட்டு யுனானி மருந்துக் கடைகளில் விற்கப்படும். மருந்துகளை மருத்துவரின் ஆலோசனைப்படி வாங்கிப் பயன்படுத்தலாம்.

## கந்தனாவின் பொதுவான பயன்கள் :

அரபு நாட்டு மருத்துவர்கள் கந்தனாவை மேலும் பல வியாதிகளை குணமாக்கும் மாமருந்தாக பயன்படுத்துகின்றார்கள். இவற்றை நீங்களும் நல்ல யுனானி மருத்துவரின் ஆலோசனையோடு சாப்பிடலாம்.

## வயிற்றுக் கோளாறுகள் :

வாய்வுத் தொல்லைகளை நீக்க கந்தனாவை பயன்படுத்துங்கள் என்று நபி பெருமானார் (ஸல்) அவர்கள் கூறி இருக்கின்றார்கள். 7 கிராம் கந்தனா விதைகளைப் பவுடராக்கி உணவுக்குப் பின்



"வருஷா வருஷம் காரா பூந்தியும் லட்டுவும் தானா. போர்..." எதிர்ப்புக்குரல்கள்.

லட்டுக்குத் தேய்த்த பூந்தியை நான்கு பாகங்களாகப் பிரித்தேன். சர்க்கரை பாகையும் நான்காகப் பிரித்து வித விதமான வர்ணங்களையும் **(food colouring)** எஸ்ஸென்சையும் சேர்த்து அதில் பூந்தியை ஊறவிட்டு எடுத்தேன்.

மல்டி கலர் பூந்திக்கு ஏக டிமாண்டு!

— உஷா

"**பருவா!** எனக்கா! அது மறைஞ்சு போய்
எத்தனையோ நாளாச்சு !" என்கிறார் நளினி.

தன் **சருமம் வறண்டு** போய் இருந்ததை
சங்கீதா எப்போதோ மறந்து விட்டார்.

"இப்போதெல்லாம் **வெயிலில்** போனா முகம்
கறுக்காமல் இருக்க எனக்குச் சரியான
**பாதுகாப்பு கிடைச்சாச்சு"** என்கிறார் விஜயா.

"என் **மென்மையான சருமத்தை** நினைச்சா எனக்கு
ரொம்ப **பெருமையா** இருக்கு" என்கிறார் மது.



**ப**ருக்களினால் அவதியா? சருமம் வறண்டு போகிறதா? முகத்தில் சுருக்கம் விழுகிறதா? வெயிலினால் முகம் கறுத்து விடுகிறதா? ஃபேஸ் டு ஃபேஸ் ஆயுர்வேத க்ரீம் இத்தகைய பிரச்னைகளை நிச்சயமாகப் போக்கி விடுகிறது. நமது முன்னோர்கள் நமக்கு விட்டுச் சென்றுள்ள ஆயுர்வேத மருத்துவமுறைதான் அதற்குக் காரணம். அந்த மருத்துவ முறையினால்தான் ஒரே ஃபார்முலேஷனைக் கொண்டு பல்வேறு சருமப் பிரச்னைகளையும் தீர்க்க முடிகிறது. முக்கியமாக, எத்தகைய பக்க விளைவுகளும் இல்லாமல். எனவே, உங்கள் சருமம் நாள் முழுவதும் பளிச்சென்று மிருதுவாகத் திகழ முடிகிறது. ஃபேஸ் டு ஃபேஸ் பல்லாயிரக்கணக்கான பெண்களுக்குப் பலனளித்து வரும் அழகு சாதனம். நீங்களும் பலனடையுங்களேன்.

**Face to Face**

25 gms Nett

**ஃபேஸ் டு ஃபேஸ்** பல்வேறு சருமப் பிரச்னைகளுக்கும் ஆயுர்வேதம் அளித்திடும் நிவாரணம்.



தீபாவளிக்கு பர்பி செய்யும் போது பர்பி இறுகி தட்டில் கொட்டியவுடன் அதன் மேலே நெய்யில் வறுத்த வேர்க்கடலையைப் போட்டால் மிகவும் சுவையாக இருப்பதுடன் புதுமையாகவும் இருக்கும்.

— ஆர். ஜெயலெட்சுமி



சாப்பிட்டால் வாய்வுத் தொல்லைகள் நீங்கும். புளித்த ஏப்பம், பசியின்மை, மலச்சிக்கல் ஆகியவை குணம்பெறும். வயிற்றில் வாழும் நாக்குப் பூச்சிகளும் செத்துவிடும்.

## கல்லீரல் கோளாறுகள் :

கந்தனா விதைகளை உடைத்து 40 நாட்கள் காடியில் ஊறவைத்து ஊறுகாயாக உணவுடன் சேர்த்து சாப்பிடலாம். இது கல்லீரல், மண்ணீரல் கோளாறுகளை குணமாக்கும்.

## பெண்கள் பிரச்சினைகள் :

சில பெண்களின் கர்ப்பப்பை சுருங்கி சிறியதாக இருக்கும். அதன் வாய் மூடிக் கொண்டிருக்கும். அதனால் அவர்களுக்கு கருத்தரிக்காது. அவர்களுக்குக் கந்தனாவை கஷாயமாக்கி வெதுவெதுப்பாக இருக்கும்போது கர்ப்பப்பைக்குள் செலுத்தினால் விரிவடைந்து ஆரோக்கிய நிலைக்கு வரும். கர்ப்பப்பையின் சுருக்கம் நீங்கி அதன் வாயும் திறக்கும். பெண்களுக்குக் குழந்தை பிறக்கும்.

## தோல் வியாதிகள் :

கந்தனா விதைகளை தண்ணீரில் அரைத்து அதில் கந்தகம் சிறிதளவுடன் சேர்த்து அதில் காடி கலந்து பசையாக்கிக் கொள்ள வேண்டும். தோல் நோய்கள் உள்ள இடத்தின் மீது இதை பூசலாம்.

கந்தனா விதைகளை நெருப்பில் எரித்து அதைச் சாம்பலாக்கி தொடை, இடுப்பு, அக்குள் மற்றும் தசை மடிப்புகளில் உண்டாகும் கரும்படையை குணமாக்க பூசலாம்.

கந்தனா விதைகளை நல்லெண்ணெயில் கொதிக்க வைத்து வடிகட்டி மசாஜ் எண்ணெயாக பயன்படுத்தினால் மூட்டு வலிகள், தோல் வியாதிகள் குணம்பெறும். இந்த எண்ணெயை இரண்டு பக்க நெற்றியின் பள்ளத்திலும் பூசினால் இயற்கையான தூக்கம் வரும்.

வடாற்காடு அம்பேத்கார் மாவட்டம் வாணியம்பாடி, நியு டவுன், மசூதி வீதியிலுள்ள அல்கவுஸர் யுனானி கிட்னி ஃபவுண்டேஷன் மையத்தில் மூலிகை மருந்துகளைக் கொண்டு மூலநோய்க் கட்டிகளுக்கு அறுவை சிகிச்சை இல்லாமல் நிறைய சிகிச்சை அளிக்கிறோம். 24094 எனும் தொலைபேசி எண்ணிலும் ஏதேனும் ஐயங்கள் இருந்தால் கேட்கலாம்.

## மூலக்கட்டிகளைக் கரைக்கும் மூலிகை மருந்துகள் :

கீழ்க்காணும் மருந்துகளை வீட்டிலேயே தயாரித்து பயன்படுத்திக் கொள்ளலாம்.

• கத்தரிக்காயை உலரவைத்து எரித்து அதன் சாம்பலை மூலக்கட்டிகள் மீது பூசலாம்.

• எருமை மாட்டின் கொம்பை எரித்து கோவைக்காய் இலைகளுடன் அரைத்து பசையாக்கிக் கொள்ளுங்கள். இதை மூலக்கட்டிகள் மீது பூசலாம்.

• மாசு 4 கிராம், கற்பூரம் 2 கிராம் இரண்டையும் பவுடராக்கி 12 கிராம் வெண்ணெயில் கலந்து மூலக்கட்டிகளின் மீது பூசலாம்.

• 7 வேப்பம் பூக்களை தினசரி காலையில் தண்ணீருடன் சாப்பிடலாம்.

• கருங்கல்லில் சிறிது தண்ணீரிட்டு அதன் மீது எட்டிக்காய் விதையை தேய்த்தால் பசை வரும். அதை மூலக்கட்டிகளின் மீது பூசலாம்.

• 2 கிராம் கொத்துமல்லி இலைகள் ஒரு கிராம் காவிக்கல் இரண்டையும் பசையாக்கி மூலக்கட்டிகள் மீது பூசலாம்.

# 6

கூடத்து அறையின் ஜன்னலில் அமர்ந்து அந்த வழியே வரும் வாகனங்களையும் மனிதர்களையும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள் ரம்யா.

மெயின் ரோடை அடுத்த தெருவில் முதல் வீடு அது. அதனால் ஜன்னல் விளிம்பில் இருந்து விர்விர்ரென்று சீறிப்பாயும் வாகனங்களைப் பார்ப்பதுதான் பொழுதுபோக்கு ரம்யாவுக்கு.

டி.வியில் ஏதோ நாடகம். அதற்கு ஆகா ஓகோ என்று சிரிப்பும் கும்மாளமுமாக ஹாலே அமளிப்பட்டது. மங்களம், வனஜா, கிரிஜா அவர்களுடன் மாமா பையன் ரமணி, சித்தி பையன் கோபி இவர்களும் சேர்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

இன்னும் சாப்பாடே ஆகவில்லை. இனி எட்டரைக்கு டிராமா முடிந்துதான் வருவார்கள். மாமனார் பொழுதோடு சாப்பிட்டு விட்டு காலாற வாக்கிங் போய் விடுவார். சங்கர் இன்னும் வரவில்லை. வெளியே போய் விட்டானோ, அவர் டைமோ தெரியவில்லை.

காலையில் அவசரத்தில் ஒரு வாய் அள்ளிப் போட்டுக் கொண்டு ஆபீஸ் போனது. மதியானம் நீர்த்த மோரும் சோறும் தொண்டைக்குக் கீழ் இறங்கவே இல்லை. டப்பாவுடன் தலைகுப்புற தொட்டியில் கவிழ்த்து விட்டாள். காலியான வயிறு இரைகிறது. ஏதாவது கொடு என்று புரட்சி செய்கிறது.

வந்தவுடன் காப்பியாவது சூடாக, கொஞ்சம் ஸ்டிராங்காய்க் குடித்து இருந்தால் இதமாய் இருந்திருக்கும்.

கறுப்பாய் திரவமாய் காப்பி என்ற பெயரில் எதையோ கலந்து 'டொங்' என்று சத்தம் கேட்கும்படி மேஜையின் மேல் வைத்து விட்டுப் போனாள் மங்களம். சூடு ஒன்றுதான் அதில் இருந்தது. அதுவாவது இருக்கிறதே என்ற ஆறுதலுடன் தலைவலி பொறுக்காமல் குடித்து வைத்தாள்.

அவர்கள் குடித்தபின் இரண்டாவதாகக் கொட்டி இறக்கின டிகாக்ஷன். உள்ளே நுழையும் முன்பே கொதிக்கக் கொதிக்க புதுப் பாலில் தண்ணீர் விடாமல் பூஸ்ட் கலந்து கொண்டு கொடுக்கும் மன்னி ஞாபகம் வந்தது.



குழந்தைங்க சாப்பிடாம அடம்பிடிப்பாங்கதான்!

எம் பொண்ணு ப்ரியா, வயிறு நிறைய சாப்பிட்டாளா அதுவும் சரியானத சாப்பிட்டாளான்னு எனக்கு எப்பவுமே கவலையா இருந்தது.

நான், டாக்டரை பார்த்து இதுக்கு என்ன செய்யலாம்னு கேட்டது ரொம்பவே நல்லதா போயிடுச்சு.

அப்போதான் தெரிஞ்சது, 1-லிருந்து 3 வயசு குழந்தைங்களுக்கு ஸ்பெஷல் ஊட்டச்சத்து ரொம்ப அவசியம்ன்னு. இந்த வயசுல அவங்க எவ்ளோ வேகமா வளர்றாங்க!

அப்புறம்தான் Junior Horlicks பத்தி எனக்கு தெரிய வந்தது.

பால், கோதுமை, மால்டட் பார்லி இதெல்லாம் சேர்த்து சின்ன குழந்தைகளுக்குன்னு ஸ்பெஷலா தயாரிச்சிருக்காங்க. நேச்சுரல் பொருட்களால் தயாரிச்சிருக்கிறதால ஈஸியா ஜீரணமாகுது.

அதோட, இதுல எக்ஸ்ட்ரா கால்ஷியம், எக்ஸ்ட்ரா அயர்ன், முக்கிய விட்டமின், புரோட்டீன் எல்லாம் இருக்கு.

தயார் பண்றதா? ரொம்ப ஈஸிங்க! பால்ல கலந்து அப்படியே குடுக்கலாம்.
தெனமும் ரெண்டு தடவை.

உண்மையா சொன்னா, மனசு சந்தோஷப்படறப்போ, எனக்கு இதத்தான் சொல்லத் தோணுது...

ஸ்பெஷல் 1·2·3 ஊட்டச்சத்து




க்யூ, .

"இனிமே என்னாலே ஆகாதுடியம்மா. நீ பாத்துக்கோ சமையல் பாட்டை!" என்று நகர்ந்து விட்டாள் மங்களம். அரிசியும் உளுந்தும் தண்ணீரில் ஊறி கொட்டக் கொட்ட விழித்தன. ஆபீஸ் வேலை முடிந்து விட்டிலும் இவ்வளவு வேலை தினசரி செய்ய வேண்டுமென்றால்...

ஒருகணம் மலைப்பாகத்தான் இருந்தது. ஆனால் வேறு வழி? 'அழுதாலும் பிள்ளை அவதானே பெறணும்' என்பாள். அது போல் வேறு யார் வந்து உதவப் போகிறார்கள்?

பரபரவென்று குக்கரை ஏற்றி மேடையிலேயே வைத்து காய் நறுக்கிக் கொண்டாள். காயை அடுப்பில் போட்டு 'சிம்'மில் வைத்து விட்டு, கல்லுரலை அலம்பி உளுந்தைக் களைந்து போட்டு அரைக்க ஆரம்பித்தாள்.

காலம் இவ்வளவு முன்னேறியிருக்கிறது. சங்கரும் நன்றாகச் சம்பாதிக்கிறான். ஒரு சுமீத்தோ, கிரைண்டரோ வாங்கிக் கொள்ளலாம். வந்த புதிதில் ரம்யா கூட தெரியாமல் கேட்டு விட்டாள்.

"அதெல்லாம் எதுக்கு அனாவசியமா? குதிராட்டம் ரெண்டு பெண் கல்யாணத்துக்கு நிக்கறது. ஏதாவது நகை, நட்டு பண்ணினாலும் உண்டு. இதிலெல்லாம் அரைச்சா அவனுக்குப் பிடிக்காது. அம்மாடி! இந்த நாளைய பொண்டுகளுக்கு உடம்பு எங்கே வளைகிறது?

வந்ததும் வராததுமா மிக்சி இருக்கா, கிரைண்டர் இருக்கா? என்கிறது. அந்த நான்ல ஜாயிண்ட் பேமிலி. வீட்டிலே இருபது பேருக்குக் குறையாது. படியும் மரக்காலுமா அரைச்சு வழிப்போம்" என்று பழைய புராணம் பாட ஆரம்பிப்பாள்.

"வீட்டிலே நாலு பொம்மனாட்டி இருந்துண்டு ஆள் எதுக்கு?" என்பது அவள் வாதம். வனஜா, கிரிஜா இருவரால் உதவி என்பதே இல்லை. மங்களமோ வயசானவள். நாளொரு உடம்பும் பொழுதொரு நோவும்.

ஆக எல்லா வேலையும் ரம்யாவின் தலையில்தான் விழுந்தது. அதைப் பற்றிக் கூட அவள் கவலைப்படவில்லை. இதோ சாப்பாடு முடிந்ததும் அவர்கள் தூங்கப் போய் விடுவார்கள். அதன் பிறகு சமையலறையை சுத்தம் செய்ய ஒரு மணி நேரம் பிடிக்கும்.

'உனக்குப் பசிக்கிறதாம்மா? நீ வேணுமானால் சாப்பிடுகிறாயா? என்று அவளை அன்புடன் விசாரிக்க யாரும் இல்லை. 'நீ உட்காரு மன்னி. நான் உனக்குப் பரிமாறுகிறேன்னு வனியோ கிரியோ சொன்னதில்லை. எல்லாரும் சாப்பிட்டதும் தட்டுக்களை கழுவி அடுக்கி, பாத்திரங்கள் தேய்த்து சமையலறையைக் கழுவினால்தான் காலையில் ஆபீஸ் அவசரத்துக்கு சரியாக இருக்கும்.

வனஜா கிரிஜாவுக்குக் கட்டித் தயிர் விட்டு லஞ்சுக்கு சாப்பாடு. அதே பாத்திரத்தில் கொஞ்சம் மோரை விட்டு ரம்யாவுக்கு. பாக்கெட் மணி அவர்கள் கையில் தாராளமாக இருக்கும். நாலு மணிக்கு கடச்கட வாய்க்குப் பிடித்ததை வாங்கிச் சாப்பிடுவார்கள்.

ரம்யா சம்பாதித்தாலும் பஸ் சார்ஜுக்கு மட்டும்தான் அனுமதி. அதிகப்படி கிடையாது. டீ.வி.யின் முன் கொறிக்கவென்றே நொறுக்குத் தீனியும் வாங்கி வந்து விடுவார்கள். இவள் வரை வராது. எப்போதும் அரவை மில் மாதிரி வாய் அரைத்துக் கொண்டே இருந்தால் பசி எப்படி எடுக்கும்?

ரம்யா வேலைக்குப் போகாமல் ஆரம்பத்தில் கொஞ்ச நாள் வீட்டில் இருந்ததால், வேலைக்காரியை நிறுத்தினதாகச் சொன்ன மங்களம், இப்போது அவள் வேலைக்குப் போக ஆரம்பித்த பின்னர் வேலைக்காரி தேடுவது பற்றிய பேச்சே எடுக்கவில்லை.

"நெனைச்சபடி எங்கே வேலைக்காரி கிடைக்கறா? நல்லவளா எங்கே அமையறா? ஆளுக்கு ஒரு காரியமா செஞ்சா போச்சு. சமையல் என்ன பிரமாதம்? காலையிலே அஞ்சு மணிக்கு எழுந்தா ஒன்பது மணிக்கு ஆபீஸ் போறதுக்குள்ளே சமாராதனையே பண்ணிடலாம்" என்பாள் மங்களம்.

வேலைக்குப் போவது ஒரு ஆறுதல்.

தீபாவளி சமயத்தில் குழந்தைகளை அலங்காரம் பண்ணுகிறேன் பேர்வழி என்று பல தாய்மார்கள் தங்க நகைகளையோ, அல்லது தங்கம் போல் தோன்றும் இமிடேஷன் நகைகளையோ அணிவித்து குழந்தைகளுக்குப் பெரும் ஆபத்துகளை உண்டு பண்ணுகிறார்கள். பட்டாசு விடும் குழந்தையின் கழுத்துச் சங்கிலியைப் பறிப்பதற்கே ஒரு கூட்டம் அன்று சுற்றும். உஷார்!

— உஷா





**எந்தப் பாயாசம் செய்வதானாலும் தேங்காய்ப் பால் ஒரு தம்ளர் ஊற்றிச் செய்தால் ருசி கூடும்.**
**— எஸ். விஜயா சீனிவாசன்**

வேலைக்கு அனுப்பியது வரை சந்தோஷம் தான். வீட்டில் இருந்தால் பகலும் இரவும் மங்களத்தின் பிடுங்கல். தொணதொணப்பு. அதைச் செய்யவில்லை, இதைச் செய்யவில்லைன்னு அப்பா, அம்மாவை, அண்ணா மன்னியைத் திட்டும் போது ரோஷம் வரும்.

பேச்சு வளரும். எதிர்த்துப் பேச முடியாமல் தவிப்பாள். இப்போது காலையிலிருந்து ரோபாட் மாதிரி உழைப்பதில் புத்தி போய் விடுவதால் எதுவும் உறைப்பதில்லை. இரவு படுக்கும் போதுதான் மனசு உருகும். உற்ற மனிதர்களுக்காக ஏங்க ஆரம்பிக்கும்.

அவளும் வித்யாவும் படிக்கும் போது, விஜி மறுத்தாலும் சின்னச் சின்ன உதவிகள் மன்னிக்குப் பரிந்து செய்வார்கள். வேலைக்குப் போக ஆரம்பித்த பின்தான் மன்னி விடுவதில்லை.

'அலுத்துக் களைச்சு வரே! ரெஸ்ட் எடுத்துக்கோ ரமி!' என்று கூறி விடுவாள். முன்பெல்லாம் அம்மா நிறைய வேலை செய்வாள்.

நினைக்கும்போதே நெஞ்சு கனத்தது. எப்படி இருக்காளோ?

வனி, கிரி இருவரும் வீட்டில் படிப்பதாகவே தெரியவில்லை. வனஜாவுக்கும் அப்பா மூலம் ஒரு நல்ல வேலை கிடைத்தது. தபால் மூலம் மேற்படிப்புக்கு பணம் கட்டி இருக்கிறது. எப்படி பாஸ் செய்து வெளியே வந்தார்கள் என்று ஆச்சரியமாகவே இருக்கிறது.

யாரும் வீட்டில் அவர்கள் படிப்பைப் பற்றி அக்கறை எடுத்துக் கொள்வதாகவே தெரியவில்லை. மட்டரகமான நாவல்களை வைத்துக் கொண்டு தனிமையில் கனவு காண்பது ஒன்றே அவர்கள் பொழுதுபோக்கு.

வந்த புதிதில் அவர்களிடம் அன்பினால் நயமாகச் சொன்னாள். 'இந்த வயசில் படிப்பு தான் முக்கியம். புரியாவிட்டால் நான் சொல்லித் தருகிறேன்' என்றாள். ரம்யா ஏதோ அவமானப்படுத்தி விட்டதாக ரகளை பண்ணி அழ, மங்களமும் ரம்யாவை எதுவும் விசாரிக்காமல் சங்கரிடம் சொல்ல, சங்கர் கோபித்துக் கொண்டான்.

முதலில் வருத்தமாக இருந்தாலும், பிறகு அதுவும் பழகிப் போயிற்று. மாமனார் பரம சாது. காலையில் காப்பிக்காக ஒருமுறை சமையலறையை எட்டிப் பார்ப்பார். காப்பியை மங்களம்தான் கொடுக்க வேண்டும். தப்பித் தவறிக் கூட ரம்யா அவரிடம் பேசக் கூடாது. அவர் எதிரே உட்காரக் கூடாது. சாப்பாடும் மங்களம் தான் போட வேண்டும்.

மாமனார் எதிரில் ஹாலில் உட்காரக் கூடாது. எல்லாமே ரம்யாவுக்குப் புதிதாக இருந்தது.

தங்கள் வீட்டில் இன்னொரு மகளாய் 'அப்பா, அம்மா' என்று கூப்பிட்டபடி வளைய வரும் விஜி.

விஜி – விஜிம்மா என்று பெற்ற பெண்களுக்கு மேலாய்ப் பாசத்தைச் சொரியும் அம்மா – அப்பா.

ஹாலில் அப்பா ஈசிசேரில் சாய்ந்திருக்க, அம்மா சோபாவில் படுத்திருக்க, மற்றவர்கள் நல்ல புரோக்ராம் இருந்தால் கூடி உட்கார்ந்து பார்ப்பது நினைவு வந்தது. மன்னி மடியில் ரம்யா, அவன் மேல் சாய்ந்தபடி விஜி, மன்னியின் தோளை அணைத்தபடி பிரியா.

குழந்தைகள் பாட்டி செல்லம். பாட்டியுடன் கட்டிலில் ராஜா – ரவி. ரமேஷ் சோபாவில். எல்லோரும் டீ.வி. ஓடும்போதே கமெண்ட் அடித்துக் கொண்டு, முடிந்தபின் விமரிசனம் செய்து கொண்டு, அப்பாவும் மன்னியும் விவாதத்தில் இறங்கி விட்டால் சூடு பறக்கும்.

அந்த வீட்டில் மரியாதை தெரியவில்லை என்று அர்த்தமா?

'மரியாதை மனசிலே இருந்தா போறும்மா. கால் கடுக்க நிற்க வேண்டாம். நான் பேயோ பூதமோ இல்லையே. என்னைப் பார்த்து பயந்து ஓட வேண்டாம்' என்பார் அப்பா.

சங்கர் வந்து விட்டான் போலிருக்கு. கூடத்தில் குரல் கேட்கிறது.

"ஏண்டியம்மா. அலுத்துக் களைத்து ஆபீசிலிருந்து புருஷன் வந்தால், சுறுசுறுப்பா எழுந்து வர மாட்டியோ? அந்த ஜன்னலில் உட்கார்ந்து ஒரு குட்டித் தூக்கம் போட்டாச்சாக்கும். அஸ்தமிக்கச்சே அப்படி என்னமாத்தான் தூக்கம் வருமோ?" என்று அங்கலாய்த்தபடி எழுந்து வருகிறாள் மங்களம்.

"இதோ வந்துட்டேம்மா!" என்று ஓடி வந்தாள் ரம்யா.

ஆச்சு. மறுபடியும், சாப்பிட்டு விட்டு, அரட்டைக் கச்சேரி. 'நீயும் உட்காரேன். சேர்ந்து சாப்பிடலாம்' என்று ஒருநாளும் மங்களம் சொன்னது கிடையாது. வந்த புதிதில் தங்கள் வீட்டில் பழக்கமாதலால் சாப்பாட்டை நடுவில் வைத்து வட்டமாகச் சுற்றிலும் கூட்டு போட்டிருந்தாள்.

பல்லில் தேங்காய்த் துண்டு, மாம்பழ நாறு அல்லது உணவுத் துண்டுகள் மாட்டிக் கொண்டு விட்டதா? கையையோ, அல்லது குண்டூசியையோ விட்டுக் கிளறாதீர்கள். அது பல் ஈறுகளை சேதப்படுத்தி விடும். தேய்க்கும் 'டூத் பிரஷ்' ஷினால் அந்த இடத்தில் நன்றாக பிரஷ் செய்து தண்ணீர் விட்டு கொப்பளித்தால் அந்த நாரோ, உணவுத் துண்டோ எளிதாக வெளியில் வந்து விடும். இதனால் பல் வலியும் இல்லை.

– சியாமளா



"இது என்ன வட்டமேஜை மகாநாடா?"

கிரி சிரிக்காமல் கேட்க மற்றவர்கள் பெரிதாக சிரிக்கத் தொடங்கியதும் ரம்யாவுக்கு வெட்கமாகி விட்டது.

'என்ன தவறு செய்து விட்டோம்.'

"ஆண் பிள்ளைகள் முகம் பார்த்து வேண்டியதைப் போட்டு விட்டு அப்புறம் சாப்பிடறதுதான் இங்கே பழக்கம். உங்க வழக்கம் எல்லாம் எங்களுக்குப் பிடிக்காது" என்றாள் மங்களம்.

**க**ல்யாணம் முடிந்து இங்கு வந்த பிறகு பிரார்த்தனைகள் எல்லாம் முடிய ஒரு மாதமாகி விட்டது. சங்கருக்கும் லீவு முடிந்து மறு நாளிலிருந்து ஆபீஸ் போகணும். ஹனிமூன், அது இது என்று பந்தாவாகப் பேசி பணத்தைக் கறந்து கொண்டாள் மங்களம்.

ஆனால் எங்கும் போகிற மாதிரி தெரியவில்லை. ஏதோ வேலை தலைக்கு மேல் இருப்பதால் போக முடியவில்லை என்று சொல்லிக் கொண்டான். போகாததாலும் ரம்யாவுக்கு வருத்தம் இல்லை. ஒருவரையொருவர் தெரிந்து கொள்ள புரிந்து கொள்ளத்தானே தேனிலவு?

வந்த அன்று மாடியில் படுத்துக் கொள்ளும்படி வனஜாவுடன் மேலே அனுப்பினாள். வழக்கம் போல் வனஜா நாவலில் மூழ்கி விட, மொட்டை மாடிக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தாள். பால் போல் நிலா காய்ந்து கொண்டிருந்தது.

மாடியில் அந்த ரூம் மட்டும்தான். அது தங்களுக்காக ஒதுக்கப்பட்டு இருப்பதாக சந்தோஷப்பட்டாள் ரம்யா. கட்டைச் சுவரின் மேல் உட்கார்ந்து பார்த்தால் திருப்பரங்குன்றம் கோயில் கோபுரம் தெரியும். அவர்கள் ரூமை ஒட்டிப் போட்டிருந்த சிறிய படிகளில் ஏறி இன்னும் மேலே போனால் மீனாக்ஷியம்மன் கோவிலே தெரிகிறது.

மொட்டை மாடி வரை தலையை நீட்டிக் கொண்டு குசலம் விசாரிக்கும் தென்னை மரங்கள். இரவு முழுக்க பூத்துக் குலுங்கி மணம் வீசும் பவழமல்லி மரம். வாசல்படிக்கும் காம்பவுண்டு கேட்டுக்குமாக போடப்பட்ட பந்தலில் பூத்துச் சொரியும் மல்லிகை.

இப்படி ரம்மியமான சூழ்நிலையில் அந்த வீடு அமைந்திருந்தது. புதிதாக கட்டின வீட்டை கொஞ்ச நாள் வாடகைக்கு விட்டிருக்கிறார்கள். வனி, கிரி, படிப்பு, சங்கரின் மாற்றல் தள்ளிப் போனது இதனால் கட்டிய உடன் குடிபோற முடியவில்லை.

அதற்கு முன் குடி இருந்தவர்கள் நல்ல ரசனை படைத்தவர்களாக இருக்க வேண்டும். இவ்வளவு ரசனையுடன் செடியும் கொடியும் வளர்த்தவர்கள் பிரிந்து போக எவ்வளவு கஷ்டப்பட்டார்களோ?

தனிமையில் ஒரு வாரம் அந்த ரூமை ஒழுங்கு பண்ணுகிற சாக்கில் அந்தச் சூழ்நிலையை ரசிக்க முடிந்தது. இன்று அந்த ரூமில் போய்ப் படுத்துக் கொள்ளும்படி மங்களம் கையில் ஒரு பால் டம்ளருடன் ரம்யாவை அனுப்பினாள்.

சங்கர் முன்னதாகவே மேலே படுக்கப் போயிருந்தான். ரம்யாவின் மனம் குதி போட்டது. இன்று தனிமையில் சங்கரை சந்திக்கப் போகிறோம். அதுவும் இன்று பௌர்ணமி. சங்கருடன் சேர்ந்து மொட்டை மாடியில் அமர்ந்து இந்தச் சூழலை ரசிக்க வேண்டும்.

இப்படி மனத்தில் பல ஆசைகளுடன், கனவுகளுடன் மாடிக்குப் போனாள் ரம்யா. ஆனால் சங்கர் அவசரக்காரனாக இருந்தான். இன்னமும் அவனுடன் சேர்ந்த மாதிரி இரண்டு வார்த்தைப் பேச அவகாசம் கிடைக்கவில்லை. கையில் இருந்த பாலை மேஜையின் மேல் வைத்துவிட்டு அவனை கீழே விழுந்து நமஸ்கரித்தாள்.

எதுவும் பேசுமுன் அவள் உதடுகள் சிறைப்பட்டன. மேலும் ஒரு முரட்டு வேகத்துடன் அவளைக் கட்டிலில் தள்ளி...

"அண்ணா!" – கீழேயிருந்து கிரிஜா அலறும் சப்தம்.

ஒரு நிமிஷம் நிதானித்தவன், சட்டையை

நீடித்து நிலைக்கும் வெண்மைக்கு

# உஜாலா

இப்பொழுது
ரூ. 3.50 நீங்கள்
சேமிக்கலாம்







## உஜாலாவின் இரகசியம்

நூதனமான மைக்ரோ ஒயிட்னிங் மற்றும் மைக்ரோ டிஸ்பெர்ஷன் தொழில் டெக்னாலஜியில் ஜோதி லேபினுடைய லேபாரட்டரியால் V+ ஃபார்முலா கொண்டு தயாரிக்கப்பட்டது உஜாலா.

இந்தியாவிலும், வெளிநாடுகளிலும் கோடிக் கணக்கான மக்களின் இதயங்களை கவர்ந்து நிரந்தரமாக விரும்பப்படுகிறது உஜாலா. இதுவே உஜாலாவின் அபார வெற்றியின் இரகசியமாகும்.

உஜாலாவைப் போன்று தோற்றமளிக்கும் ஏராளமானவைகள் விற்பனைக்கு வருகின்றன. அவைகள் உஜாலாவின் இரகசியத்தை பெற முடியாது.

**இப்போது 250 மிலி ஃபேமிலி பேக்கிலும் கிடைக்கிறது.**




ஜோதி லேபாரட்டரீஸ்
பம்பாய்.

கோவிலுக்கு எண்ணெய், திரி எடுத்துச் செல்லும் பொழுது கூடவே சிறு துண்டு பேப்பரையும் எடுத்துச் செல்லுங்கள். விளக்கு ஏற்றியதும் அங்குள்ள சுவர்களை பாழடிக்காமல் பேப்பரை உபயோகித்துக் கொள்ளலாமே!

– ஜெயா

♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦

மாட்டிக் கொண்டு கதவைத் திறந்து கீழே போய் விட்டான்.

'யாருக்கு என்னவோ? ஏன் கிரிஜா அப்படிக் கத்தினாள்?'

உடையைத் திருத்திக் கொண்டு, தலையை ஒதுக்கிக் கொண்டு ரம்யாவும் கீழே வந்தாள்.

கீழே ஹாலில் சோபாவில் மங்களம் புலம்பிக் கொண்டிருந்தாள்.

"அய்யோ. அம்மா நெஞ்சு வலிக்குதே. தாங்கல்லையே!"

"ஏம்மா நெஞ்சு வலிக்கிறதா? டாக்டரைக் கூப்பிடட்டுமா?" என்று பதறிய மகனை அப்போதுதான் பார்ப்பது போல் மெதுவாகக் கண்ணைத் திறந்து பார்த்தாள்.

"அய்யோ. நீ ஏம்பா இறங்கி வந்தே.' இந்தப் பாவிப் பசங்களை 'சத்தம் போடாதே அண்ணா எழுந்துடுவான்'னு. சொன்னேன். கேட்கல்லை. ஒருதரம் தட்டினா மூணு தரம் தட்டும்பா.

அங்கே அந்த மனுஷன் என்னைக் கேக்காம ஏற்பாடு பண்ணி, தட்டிண்டு வரும்படி ஆச்சு. இப்ப நான் ஆசையா பாத்து வெச்ச நாளும் தட்டிப் போகக் கூடாது. எனக்கு ஒண்ணுமில்லை. இத்தனை அமளிக்குப் பிறகும், இந்த மனுஷன் எழுந்து வரல்லையே.

ஏண்டி இப்படிக் கலாட்டா பண்ணிட்டீங்க? சங்கர் என் ராஜா. எனக்கு ஒண்ணுமில்லைடா. நீ மேலே போய்ப் படுத்துக்கோப்பா! அம்மா வலி தாங்கல்லையே!" என்று துடித்தாள் மங்களம்.

"அம்மா – இது என்ன உனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா, என்ன? நீ இப்படி துடிக்கறச்சே என்னை ஏன் மாடிக்கு விரட்டறே? நா போய் டாக்டரைக் கூட்டிண்டு வரேன்!"

"டாக்டரும் வேணாம். ஒண்ணும் வேணாம்பா. சுக்குக் கஷாயம் போட்டு சாப்பிட்டா சரியாகி விடும். வெறும் காஸ் டிரபிள் தான். டாக்டர் வந்தா இல்லாத வியாதியெல்லாம் சொல்லி ஆசுபத்திரியிலே கொண்டு

போட்டுடுவான்" என்று கெஞ்சினான்.

"ஏண்டி, மரமாட்டம் பாத்துண்டு நிக்கறே. அம்மா சுக்குக் கஷாயம் கேட்கறாளே. போய்ப் போட்டுண்டு வாயேன்!" என்று ரம்யாவிடம் எரிந்து விழுந்தான். பல நாளாகப் பார்த்திருந்து கைக்கு எட்டியது வாய்க்கு எட்டலையே என்ற கோபம் அவனுக்கு.

பயந்தபடி சுக்கைத் தட்டி வென்னீரில் போட்டவள், சூடாக ஹார்லிக்ஸ் குடித்ததும் அன்று இதமாக இருந்ததாக அம்மா சொன்னாளே! கொண்டு வரட்டுமா என்று கேட்பதற்காக ஹாலுக்கு வந்தாள்.

''கிணத்துத் தண்ணியை வெள்ளம் கொண்டு போயிடாதுடா. கண்ணா நாம்தான் கொஞ்சம் பிகுவா இருக்கணும். அப்பத்தான் அவங்களுக்கு உறைக்கும். இல்லைன்னா நம்ம தலையிலே மிளகரைச்சுடுவா. என்ன நான் சொல்றது?' என்று மங்களம் உபதேசிக்க, பூம் பூம் மாடு மாதிரி தலையாட்டிக் கொண்டு இருந்தான் சங்கர்.

மனைவி ஓதினால் தலையணை மந்திரம். அம்மா ஓதினால்?

ஒன்றும் தெரியாதவள் போல் சுக்குக் கஷாயத்துடன் வந்து, "சூடா கொஞ்சம் ஹார்லிக்ஸ் வேணா கரைச்சிண்டு வரட்டுமா?" என்றாள் ரம்யா.

"வேண்டாம்மா. இது போதும். இப்ப சரியாகி விடும். வேணும்னா வனஜாவை கரைச்சுத் தரச் சொல்றேன். நீ மேலே போய்ப் படுத்துக்கோம்மா!" என்றாள் மங்களம் தேனொழுக.

"பரவாயில்லைம்மா. நீங்க தூங்குங்க!" என்றாள் ரம்யா.

கால்மாட்டில் இரு பெண்களும் அமுக்க, தலைமாட்டில் பிள்ளையும் மாட்டுப் பெண்ணும் அமர்ந்து நெஞ்சைத் தடவிக் கொடுக்க மங்களம் ஐந்து நிமிஷத்தில் ஆனந்தமாகக் குறட்டை விட ஆரம்பித்தாள். அவரவர் உட்கார்ந்த இடத்தில் அப்படியே சாய்ந்து தூங்க, ரம்யா மட்டும் இரவு முழுதும் தூங்க முடியாமலும், கண்ணீர் சிந்தி மனதை ஆற்றிக் கொள்ளவும் முடியாமல் துடித்தாள்.

சித்தி பையன் கோபியும் மாமா பையன் ரமணியும் சங்கர் சிபாரிசில் மதுரையிலேயே வேலை கிடைத்து மறுநாளே வந்து விட மாடிரூம் அவர்களுக்கு ஒழித்துக் கொடுக்கப்பட்டது. மங்களத்துக்கும் உடம்பு சரி இல்லாததால் சங்கர் இரவில் கீழே படுத்துண்டால் சௌகர்யமாக இருக்கும் என்று கீழ் ரூம் அவனுக்கு ஒதுக்கப்பட்டது.

சங்கர் ரூம் என்று பேரே ஒழிய, மங்களம் தான் அந்த ரூமில் படுத்து இருப்பாள். ஆசையாக மகாதேவன் வாங்கி அனுப்பிய கட்டில்களில் ஒன்று மங்களத்துக்கும், மற்றது அவளுக்குத் துணைக்காக படுத்துக் கொள்ளும் சங்கருக்

குமாக பிரித்துப் போடப்பட்டது.

இப்படியே நாட்கள் ஓட, மங்களத்தின் பிளான் புரிந்து விட்டது. வாயால் சொட்டா ததை செயலில் காட்டுகிறாள். வாழ்க்கை என்கிற பரீட்சை ஹாலில் அவள் நுழைய வேண்டுமா னால், நுழைவுக் கட்டணமாக பச்சை செட் நகைகளை செலுத்த வேண்டும். அதுவரை பரீட்சை எழுத அவளுக்கு அனுமதி இல்லை.

ரம்யாவுக்கு வெறுத்து விட்டது. நடக்கிறபடி நடக்கட்டும். பாதிக்கப்படுவது சங்கரும்தானே? அவன் என்ன முடிவு எடுக்கிறானோ, எடுக் கட்டும். இதுவரை சங்கர் அவளிடம் எண்ணி பத்து வார்த்தைகள் பேசியிருப்பானா, அது கூடச் சந்தேகம்தான்.

ஒரு வாரம் கழித்து கரிசனமாக ஒரு கவரை அவள் கையில் திணித்து, "வந்து பதினைஞ்சு நாளாச்சு. மாமியார் வீட்டுக்குப் போன பெண்ணை 'இருக்கியா செத்தாயா'ன்னு ஒரு வரி கடிதாக கூட இல்லை. அப்பா பல ஜோலித்காரர். அம்மா உடம்பு சரி இல்லாதவ ஒத்துக்கறேன்.

அண்ணாவும் மன்னியுமா பல தினம் பறச்சே நீலிக்கண்ணீர் விட்டாளே. இப்ப ஒரு கார்டு கூட எழுத முடியல்லையா. பரவா யில்லை. பாவம் நீ வரச்சே அம்மாவுக்கு உடம்பு சரியில்லை. கவலைப்படுவாளேங்கிற அக்கறை அவங்களுக்கு இல்லாட்டாலும் நீ எழுதி விசாரி."

வாரா விட்டு சொல்லாவிட்டாலும் மங் களத்தின் [illegible] புரிந்து [illegible] வெளிப்படும் என்று தெரிந்ததும், இங்கு நடப் பது எதையும் ரம்யா எழுதவில்லை.

இவள் எழுதி அவர்கள் பச்சை செட்டுடன் ஓடி வரவேண்டும் என்பதுதானே மங்களத்தின் எண்ணம். இதையெல்லாம் எழுதி அவள் குடும் பத்தினரின் ஏற்கெனவே கலங்கிப் போயிருக் கும் மனதைப் புண்படுத்த வேண்டாம் என்று ரம்யா எழுதவில்லை.

அதிலிருந்து அவள் மனப்போக்கைப் புரிந்து கொண்ட மங்களம் அந்தக் கடிதங் களையே போஸ்ட் பண்ணவில்லை.

'நீயாவது எழுதுன்னு எழுதச் சொன்னேன். அதுக்குக் கூட பதிலே இல்லையே. எல்லாம் போட்ட லெட்டர் போறும்' என்று கவர் தானத்தை நிறுத்தி விட்டாள். உண்மையிலேயே லெட்டர் எழுதியும் பதில் வரல்லையேன்னு ரம்யாவுக்குக் கவலை கோபம் கூட வந்தது. இந்த மன்னியாவது எழுதக் கூடாதா?

கடைசியாக ஒருநாள் தபால்காரர் வரும்போது அவள் கூடத்தில் இருந்தாள். 'போஸ்ட்' என்ற சத்தம் கேட்டதும், மங்களம் வேகமாக எழுந்து வர அவளையும் முந்திக் கொண்டு போய் லெட்டரைத் தானே வாங்கிக் கொண்டாள். அவள் இடித்துக் கொண்டு போன வேகத்தில் சுவரில் சாய்ந்தாற்போல் நின்று விட்ட மங்களம் திகைத்துப் போனாள்.

கடிதத்தை வாங்கியதுமே தெரிந்து விட்டது. ஓ.. அது மன்னியின் கையெழுத்து. சிறு குழந்தை போல துள்ளிக் குதித்துத் திரும்பிய வள், மங்களம் கையைப் பிடித்துக் கொண்டு முனகுவதைப் பார்த்து பயந்து போனாள்.

"சாரிம்மா. ரொம்ப நாளா லெட்டரே வரல் லையா? அந்த வேகத்துல ஓடினதில மோதிட் டேன். ரொம்பவ் அடிபட்டுடுத்தா?" என்று வருத் தத்துடன் கேட்டாள்.

"அன்புபமா அடிபடலை'யென்று வருத் தமா இருக்கா? வேணும்னா இன்னொரு தரம் வந்து மோது. ஏன்னு கேட்க நாதியில்லாம இருக்கச்சேயே இந்த ஓட்டம் ஓடறே? இன்னும் தலையில வெச்சுத் தாங்கற பிறந்தகமா இருந்தா எப்படி குதிப்பியோ!

அம்மா – கை நல்லா சுளுக்கிண்டுடுத்து. அடியே, வனி – கிரி எங்கேடி ஒழிஞ்சு போனீங்க! கையிலேதான் இடிச்சா காலு கூட அடி எடுத்து வைக்க முடியல்லையே!" என்று வனி வேலைக்கும், கிரி காலேஜுக்கும் போய் இருப்பதை மறந்து புலம்ப ஆரம்பித்தாள்.

பொறுமையுடன் மெதுவாகக் கையைப் பிடித்து, அழைத்து வந்து கட்டிலில் உட்கார வைத்துத் தைலம் தடவி உருவி எல்லா சிசுரு ஷையும் செய்து பின் மெதுவாக பாத்ரூமுக்குப் போய்க் கதவைத் தாளிட்டுக் கொண்டு கடிதத் தைப் படிக்க ஆரம்பித்தாள்.

'அன்புள்ள ரமி,

மன்னியின் மனப்பூர்வமான ஆசீர்வாதங் கள். இப்பவும் உன்னிடம் இருந்து கடிதம் இல் லாதது கண்டு ஆச்சரியமாக இருக்கு. அம்மா உடம்பு தேவலை. டாக்டர் இன்னும் கவன மாக, டயட், எக்சர்சைஸ், மருந்து மூணும் இருந் தால் பிரச்னை இருக்காதுன்னார்.

பலரும் பெரிய வெடிகளும், சரவெடி களும், ராக்கெட் வகைகளுமே ஆபத்தா னவை என்று நினைக்கின்றனர். ஆனால், அதிகபட்ச விபத்துக்களை ஏற்படுத்துவது புஸ்வாணங்களும், மத்தாப்புக்களும்தான்.

— உஷா



நீ போகும்போதே அம்மா உடம்பு சரி இல்லையே, கவலைப்படுவாயே என்று அண்ணாவை மாப்பிள்ளைக்கு போன் பண்ணச் சொன்னேனே? டாக்டர் நர்சிங்ஹோம்தான் ரெஸ்ட்டாக இருக்க முடியும்னதால் சேர்த்து விட்டோம்.

இரண்டு போன், இரண்டு லெட்டர் ஒண்ணுக்கும் பதிலே இல்லையே? ஹனிமூன் அலைச்சல், பிசியாக இருப்பாய்னு பார்த்தால் போகவே இல்லையாமே? லீவை கான்சல் பண்ணிட்டதாக மாப்பிள்ளை சொன்னாராம். இப்படியா எங்களை அடியோடு மறந்து போவாய்?

நாங்கள் இருவரும் வந்து உங்களை தீபாவளிக்கு அழைச்சிண்டு வரணும்னு ஆசை. இத்துடன் தனியாக ஒரு கடிதம் உன் மாமனாருக்கும் மாமியாருக்கும் அப்பாவும் அம்மாவும் லெட்டர் எழுதி இருக்கிறார்கள்.

காதைகிட்ட கொண்டு வா. ஒரு ரகசியம் கேட்கணும். கல்யாணமாகி பேருக்கு மூணு மாசம் ஆகப்போறதே. ஏதாவது விசேஷம் உண்டா? அல்லது நல்லா ஜாலியா எல்லாம் என்ஜாய் பண்ணப் பிறகுதானா? நல்ல செய்தியுடன் காத்திரு. வருகிறேன்.

இப்படிக்கு,
உன் பிரிய மன்னி
விஜயா.

கடிதத்தைப் படித்து குலுங்கக் குலுங்க அழுதாள்.

"மன்னி, ரெண்டு லெட்டர் போட்டீர்களா? அண்ணா போன் பண்ணினார்களா? எனக்கு எதுவுமே தெரியாதே. சங்கர் சொல்லக் கூடாதா போன் வந்ததாக? கொஞ்சம் நிம்மதியாக இருந்திருக்குமே.

தபால் விஷயம் ரம்யாவுக்கு சந்தேகம்தான். மன்னி கையெழுத்து எங்கிருந்தாலும் அவளுக்குத் தெரியும். இருமுறை மங்களம் தபாலை வாங்கி வரும்போது, 'தனக்கு இருக்கிறதா?' என்று விசாரித்தாள்.

"இல்லையேம்மா. இருந்தால் தர மாட்டேனா?" என்றாள் மங்களம். டேபிளின் மேல் இருக்கும் ரேடியோவுக்கும் சுவற்றுக்கும் இடையில்தான் கடிதங்களைச் சொருகுவது வழக்கம். டேபிள் துடைப்பது போல், எட்டிப் பார்த்த போது மூன்று கடிதங்கள் இருந்தன.

'இன்று நாலு லெட்டர் வந்தது போல் இருக்கே!'

இதுபோல் இருமுறை நடந்தது. ஆக எழுதின லெட்டரும் போகல்லை. வந்த லெட்டரும் கொடுக்கல்லை. எப்படிக் கேட்பது? சங்கருடன் பேச வாய்ப்பில்லை.

"மன்னி நான் இன்னும் பரீக்ஷையே எழுதல்லை. நீ ரிசல்ட் கேட்கிறாயே?" என்று அழுதது உள்ளம்.

மனக்குமுறல் தீரும் வரை அழுதுவிட்டு, லெட்டரைக் கிழித்து ஃப்ளஷில் போட்டு தண்ணீரைத் திறந்து விட்டாள்.

பின் முகத்தைக் கழுவி துடைத்ததுபோல், மனதையும் கழுவித் துடைத்து விட்டு வேலையைக் கவனிக்க ஆரம்பித்தாள். மங்களம் உண்மையிலேயே தூங்கி விட்டாள். 'உனக்கு என்ன லெட்டர் வந்தது?' என்று கேட்கவே இல்லை.

ரவியும் விஜியும் அடுத்த வாரம் வந்தார்கள். மாமனார் வரச் சொல்லி லெட்டர் போட்டிருந்தாராம்.

"தீபாவளிக்கு இன்னும் பத்து நாள் இருக்கு. ரம்யா வந்தும் மூணு மாசம் ஆச்சு. அம்மா ஆஸ்பத்திரியிலிருந்து வந்ததில் இருந்து ரம்யாவைப் பார்க்கணும்னு புலம்பறா. மாப்பிள்ளையையும் ரம்யாவையும் அனுப்பி வைக்கணும்" என்று பணிவாகக் கேட்டுக் கொண்டான் ரவி.

"ரம்யாவை வேணா அழைச்சிண்டு போம்மா உன்னோட. அவனுக்கு அத்தனை நாள் லீவெல்லாம் கிடைக்காது. தீபாவளி சேர அனுப்பி வைக்கிறேன்" என்றாள் பெரிய மனதோடு.

"வனி, கிரியை அழைச்சிண்டு நீங்களும் மாமாவும் மாப்பிள்ளையோடு, தலைதீபாவளிக்கு அவசியம் வரணும். உங்களை நேரில் அழைக்கத்தான் வந்தோம்." என்றாள் ரவி.

கொழுக்கட்டை செய்ய இடித்த அரிசி மாவுக்குப் பதிலாக பச்சரிசியை ஒரு மணி நேரம் ஊறவைத்து நன்கு களைந்து மிக்சியில் வெண்ணெய் போல் அரைத்து நன்கு தண்ணீர் விட்டுக் கரைத்து அடுப்பில் வாணலியில் தேவையான அளவு நல்லெண்ணெய் ஊற்றி இந்த மாவை ஊற்றிக் கைவிடாமல் கிளறி பந்தாக பளபளவென்று வந்தவுடன் இறக்கி சிறிது ஆறியவுடன் சொப்பு செய்தால் மெல்லிசாக அழகாக வரும். அதில் பூர்ணம் வைத்து வேகவைக்க கொழுக்கட்டை மிக மிக மிருதுவாக இருக்கும்.

- லலிதா நடராஜன்








Murugan















"ஆகட்டும், பார்க்கலாம்" என்று கம்பீரமாக பதில் சொன்னாள் மங்களம். இனம்பும் போது ரம்யா புடைவை மாற்றிக் கொள்ள உள்ளே போன சமயம் பார்த்து விஜியிடம், 'அம்மாடி விஜி. சங்கருக்கு ஒரே கோபம். சிலரைப் போல நான் ஸ்கூட்டர் கேட்டேனா, கார் கேட்டேனா. பொண்ணுக்குப் போடறேன்னு சொன்ன நகையைக் கூட போட வக்கில்லையா?'ன்னு எரிஞ்சு விழறான்.

சொல்லவே கஷ்டமாயிருக்கு. கோச்சுண்டு தனித்தனிப் படுக்கை. இந்தக் கஷ்டமெல்லாம் எனக்கு இந்த வயசில, பார்க்கவும் கேட்கவும் சகிக்கல்லைடிம்மா. சிறுசுகள் சந்தோஷமா சேர்ந்து வாழணும். இப்படிப் பிரிஞ்சு இருக்கறதைப் பார்த்துண்டு இருக்கேனே, பாவி நான்."

வாழைப்பழத்தில் ஊசியேற்றுவது போல் 'பச்சை செட் வந்தால் தான் ரம்யா இங்கே வர முடியும்' என்பதை [illegible] சொல்லி விட்டாள்.

விஜிக்கு [illegible] பிரச்னை இருக்கும் என்பது [illegible] மங்களம் ஏதாவது சொல்லிக் கொண்டு [illegible] ருப்பாள். ஆனால் இப்படி ஒரு இக்கட்டா[illegible] உருவாக்குவாள் என்று எதிர்பார்க்கவில்லை. இவ்வளவுக்கும் சங்கர் எப்படி உடந்தையாக இருக்கிறான்?

தாய் சொல்லைக் கேட்க வேண்டியதுதான். ஆனால் இப்படியா அல்ப நகைக்காக, தன்னையே நம்பி எல்லோரையும் விட்டு வந்த மனைவியையும் ஒதுக்கி, ஜீவாதாரமான உரிமையை விட்டுக் கொடுத்து!

சென்னையில் இருந்தபோது மறந்தும் தன் நிலை பற்றி மூச்சு விடவில்லை. தீபாவளிக்கு எல்லாரும் வந்தார்கள். விஜி உண்மை நிலையை உள்ளபடி மாமனாரிடம் சொல்ல, சங்கர் ரம்யாவுக்குப் புடைவை, வேஷ்டி, வைர மோதிரம், பச்சைக் கல்செட் என்று ஜமாய்த்து விட்டார்.

மங்களத்துக்கு நாலு விரல் கடை கெட்டி ஜரிகை போட்டுப் புடைவை. விஜிக்கு இரேப் சில்க். மாமனாருக்கு வேஷ்டி ஷர்ட் என்று எல்லாமே வாங்கி இருந்தார். மங்களத்துக்கு சந்தோஷம் பிடிபடவில்லை. இருந்தாலும் வெளியில் காட்டிக் கொண்டால், மதிப்பு குறைந்து விடுமே!

திரும்பி வந்ததும் கட்டில்கள் ஒன்று சேர்ந்தன. மங்களத்தின் படுக்கை ஹாலுக்கு வந்தது. ரம்யாவுக்கு ஹால் டிக்கெட் கிடைத்து விட்டது. ஆனால் இப்போது அவளுக்கு எல்லாமே வெறுப்பாக இருந்தது. சீ... பணம்தான் பெரிதா என்று தோன்றியது. என்ன செய்ய? அவள் அபிப்ராயத்தை யார் கேட்டார்கள்?

தனி அறையில் ஒன்றாகப் படுப்பதே வெறுக்கும் அளவு சங்கர் நடந்து கொண்டான். ஏதோ அன்றாடக் கடமை போல் அந்தப் புனிதமான உறவை அவன் மதித்தது வேதனையாக இருந்தது. அல்ப காரணத்துக்காக ஒதுக்கினவன், அட்லீஸ்ட் அம்மாவை மீற முடியாமல் அப்படி நடந்து கொண்டதாக, சொல்லியிருந்தால் கூடப் போதும். அவள் என்ன ஆடப் பொருளா, வேண்டாமென்றால் தூக்கிப் போடுவதும், வேணுமென்றால் மடியில் வைத்துக் கொஞ்சுவதும்!

தலைதீபாவளிக்குப் போயிருந்த போதுதான் மகாதேவனிடம் சொல்லி பழைய கம்பெனியின் மதுரைக் கிளையிலேயே வேலை ரம்யாவுக்கு வாங்கிக் கொடுக்கும்படி மங்களம்தான் சொன்னாள். வேலைக்குப் போவது தப்பில்லை என்றும் காலையில் எல்லாரும் ஆபீசுக்கும், காலேஜுக்கும் என்று போன பிறகு தனியாக எப்படிப் பொழுது போகும்? வீண் பொழுது போக்காமல் நல்ல வேலை கிடைத்தால் நல்லது என்றும் பொன்மொழிகளை உதிர்த்தாள்.

வேலை பொறுப்பானது. எம்.டிக்கு, பி.ஏ., வீட்டு வேலையும் சேர்ந்து உடல் துவண்டு போனாலும், பகலில் தன்னையொத்த பெண்களுடன் கலந்து பழகுவது மனசுக்குத் தெம்பாக இருந்தது. அண்ணாவுடன் அடிக்கடி டெலிபோனில் பேச முடிகிறது. இன்று போனில் அண்ணா சொன்ன செய்தி...?

அவளை ஜிவ்வென்று ஆகாயத்தில் பறக்கச் செய்தது.

ராஜா அவன் காதலித்த பெண்ணையே கல்யாணம் செய்து கொள்ளப் போகிறான். அடுத்த மாசம் கல்யாணம். எத்தனை சந்தோஷமான செய்தி!

"என்ன உட்கார்ந்தே தூக்கமா? படுக்கப் போலாமா?" என்றபடி சங்கர் அவளை உலுக்கி எழுப்பினான்.

(தொடரும்)

● மகிழ்ச்சியை உருவாக்காதவனுக்கு மகிழ்ச்சியை அனுபவிக்க உரிமை இல்லை.

— பெர்னாட்ஷா

தொகுப்பு : கே. விஜயலட்சுமி

# திருமண மலர்

## மணமகள் தேவை

■ ஐயர் தமிழ் பிரஹசரணம், பாரத்வாஜ கோத்திரம், மூலம், வயது 31, உயரம் 5.3", எஸ்.எஸ்.எல்.சி. சொந்த பிஸினஸ் (பிரிண்ட்டிங்) பையனுக்கு நடுத்தர குடும்பத்தில் குடும்பப்பாங்கான பெண் ஜாதகத்துடன் விண்ணபிக்கவும். குடும்ப விவரமும் தேவை. பெட்டி எண் : 13303

■ Brahacharanam, Koundinya, Swathi, 33/166/1600/ M.Sc., B.Ed., Private School Teacher. Fair, seeks PG/ Graduate employed in and around Madras and Chengalpattu girl. Reply with horoscope and family details to Box No. 13304

■ ஐயர், வடமாள், கர்கை திருவாதிரை வயது 30 உயரம் 5.7". KRIBHCO Fertilizer Surat. பொது நிறுவனத்தில் வேலை பார்க்கும் மாத வருமானம் ரூ. 7500/- உள்ள மணமகனுக்கு பட்டதாரி பெண் தேவை. பெட்டி எண் : 13305

■ ஐயர், சாங்கிருதி கோத்திரம், பிரஹசரணம், வயது 31, (பி.காம்.) கேட்டை, 165 செ.மீ., மாநிறம் மாத வருமானம் ரூ. 2500/- தனியார் கம்பெனியில் வேலை பார்க்கும் பையனுக்கு வேலையில் இருக்கும்/+2 படித்த மணமகள் தேவை. உட்பிரிவு சம்மதம். பெட்டி எண் : 13306

■ இந்து கவுண்டர் (வன்னியர்) சைவம் பூசம், லக்கினம் துலாமில் சனி மேஷம் 7ல் செவ்வாய், எம்.ஏ., எம்.எட்., 41/ 167/5000/- மாநில அரசு வேலையில் உள்ளோர், எதிர்பார்ப்போர் இணையான, மேம்பட்ட சாதியைச் சேர்ந்த மணமகள் தேவை. மதம், அசைவம் தடையல்ல. பெட்டி எண் : 13307

■ மனைவியை இழந்த இளம் இன்ஜினியருக்கு 2ஆம் தாரமாக மணமகள் தேவை. பிரஹசரணம், கர்க கோத்திரம், சுவாதி, வயது 29, 168 செ.மீ. தனியார் துறையில் மாதம் ரூ. 5000/- சம்பளம். 5 வயதில் ஒரு பெண் குழந்தை உள்ளது. உட்பிரிவு சம்மதம். ஆடம்பரமில்ல உடன் திருமணம். பெட்டி எண் : 13308

■ Dixit Iyer boy, Bharani, Sankriti, 36/5.5"/10,000/- MD (Medicine), Multi-talented, ambitious, USMLE (US Medical entrance) cleared, wishing to go abroad, right leg polio. Bride's horoscope optional. Box No. 13309

■ Brahacharanam, Poorattadhi, 29/155/4000/- B.A., D.Coop., seeks employed girls. Subsects no bar. Apply with horoscope to Box No. 13310

■ Wanted graduate good looking Balija Naidu girl 23/ 153 for Balija Naidu boy 26/155/5000/- Contact with horoscope to Box No. 13311

■ வன்னிய குல க்ஷத்திரியர், மேல்பட்ட படிப்பு, நல்ல நிறம், தீய பழக்கம் எதுவுமில்லை. 25/170/7000, புனர்பூசம், மிதுன ராசி, செவ்வா தோஷம் நிவர்த்தியான employed in Multinational Company at Madras ல் உள்ள மணமகனுக்கு, பட்டதாரி, நல்ல நிறம், வேலையில் உள்ள, நல்ல குடும்பப்பாங்கான பெண் ஜாதகம், குடும்ப விவரத்துடன் அனுகவும். பெட்டி எண் : 13312

■ வடமாள் ஐயர், பாரத்வாஜ கோத்திரம், உத்திரட்டாதி பி.காம், 29/5.7" தனியார் நிறுவனத்தில் பணிபுரியும் ரூ. 5000/- வருமானமுள்ள வரனுக்கு படித்த பட்டதாரி வேலையில் உள்ள/இல்லாத மணமகள் தேவை. பெட்டி எண் : 13313

■ வடமாள், ஆத்ரேய கோத்திரம், மிருகசீரிஷ நட்சத்திரம் எஸ்.எஸ்.எல்.சி படித்துள்ள, 178 செ.மீ. உயரமுள்ள 37 வயதான தனியார் நிறுவனத்தில் மாதம் ரூ. 1000/- வருமானமுள்ள வரனுக்கு மணமகள் தேவை. பெட்டி எண் : 13314

■ Wanted graduate, Govt/Private Company, Trichy based employed girl below 25 years for 29 years boy B.Com., employed at Ltd. Co., in Trichy, Bharadwaja, Brahacharanam, Revathi, salary Rs. 3500/- p.m. Subsect no bar. Horoscope essential. Box No. 13315

■ மாநில அரசு பணி பிள்ளை, 6000, 50, தீய பழக்கம் எதுமற்ற ஆரோக்கியமானவர், தன்னையும் வீட்டுப் பொறுப்பையும் ஏற்க அன்பும் பண்பும் நட்புள்ளமும் 37 க்கு மேல் வயதும் எஸ்.எஸ்.எல்.சி, அமைதியான தோற்றமும் கொண்ட பெண்மணியை வேண்டுகிறார். திருமணச் செலவுகள் இல்லை. ஆதரவற்றோர் விதவைகள் விண்ணப்பிக்கலாம். நிபந்தனைகள் இல்லை. பெட்டி எண் : 13316

■ Iyer, Vadamal, Srivatsa Gothram, Chitthirai, M.Sc Maths, Software Engineer in USA. Clean habits, fair, tall 5.8", 37 yrs. wants tall, fair, home loving, professionally qualified girl interested in music. Box No. 13317

■ Smartha Iyer Krithigai II padam, SSLC ITI employed Govt. Transport Corporation, 36/166/3500. Horoscope and details to Box No. 13318

■ Smartha Iyer, Haritha, Pooram graduate employed Private Firm, 30/174/2200, Vehicle Allownace Commission extra, seeks graduate girl. Box No. 13319

■ Alliance invited for Vadama, Viswamitra, Thiruvathirai, 38, Double graduate employed as Junior Executive in Multinational Organisation from decent Tamil Brahmin family Iyer graduate girls. Reply

திருமண மலர் பகுதியில் விளம்பரம் செய்ய, கட்டணம் ரூ. 100/-. இதை சென்னையில் மாற்றலாகக் கூடிய டிமாண்ட் டிராப்ஃடாக, "மங்கையர் மலர்" என்ற பெயருக்கு எடுத்து விளம்பர வாசகத்துடன் அனுப்ப வேண்டும். மணியார்டர், போஸ்டல் ஆர்டர் காசோலை கண்டிப்பாக ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது. விளம்பரக் கட்டணத்தை எங்கள் அலுவலகத்திற்கு நேரில் வந்து பணமாகவும் செலுத்தலாம்.

தீபாவளி வரும் போதே மழையும் வந்து விடுகிறது. அடுத்து குளிரும் வந்துவிடுகிறது. இந்த மழை, குளிர் காலங்களில் சரும பராமரிப்பு எப்படிச் செய்ய வேண்டும் என்பதை கோயமுத்தூரில் 'தேவி பியூட்டி கிளினிக்கைக் கடந்த பதினைந்து வருடங்களாக நடத்தி வரும் திருமதி. ரமா விஜயகுமார் அவர்களைக் கேட்டோம். பேசிக் கொண்டிருந்த போது இவர் சட்டம் படித்தவர் எனக் கேள்விப்பட்ட போது வியப்பாக இருந்தது. வழக்கறிஞர் தொழிலைவிட அழகுக்கலை மீது ஆர்வம் ஏற்பட்டு அமெரிக்கா, சிங்கப்பூர் சென்று கற்று தேர்ந்து வந்து பியூட்டி பார்லரை துவங்கி முழுநேர தொழிலாகச் செய்து வருகிறாராம். கேரளாவைச் சேர்ந்த ஆயுர்வேத டாக்டர் பரம்பரையில் வந்த ரமா மூலிகைகள், செடி கொடிகளை வைத்து அழகு சாதன கிரீம்கள், தைலங்களைத் தயாரித்து 'ஹெர்பல்' சிகிச்சையும் அளித்து வருகிறார், பாராட்டினோம். அழகுக்கலை அனுபவம் மிக்க ரமா இங்கே மழை குளிர்கால சரும பராமரிப்பு முறைகளைக் கூறுகிறார்:

# சட்டம் படித்த அழகுக்கலை நிபுணர்

நமது உடல் நிலை, குறிப்பாக சருமம், சீதோஷ்ண நிலைக்கேற்ப ஒருசில மாறுதலுக்கு உள்ளாகின்றன. இதைத் தெளிவாக புரிந்து கொண்டு, அதற்கேற்றார் போல் சருமத்தைப் பராமரிப்பது நல்லது. இப்பொழுது, குளிர்கால - மழைக் காலங்களில் ஏற்படும் சில பிரச்சனைகளைப் பார்ப்போம்.

மழைக் காலத்தில் காற்றில் ஈரப்பசை அதிக மாக உள்ளதால், எண்ணெய் வழியும் சருமமும், வறண்ட சருமமும் எந்தவிதமான மாறுதலுக்கும் உள்ளாவதில்லை. ஆனால் முக்கிய பிரச்னையாகக் காணப்படுவது, காலில் வெடிப்பும், கால் விரல்களிடையே புண்களும்தான். காலில் வரும் சேற்றுப் புண்ணிற்கு, வேப்ப இலை மற்றும் வேப்பம் பட்டையிட்டு நீரைக் கொதிக்க வைத்து, அதில் கால்களைக் கழுவ வேண்டும். இவ்வாறு செய்யும் போது, நீர் வெது வெதுப்பாக இருப்பது முக்கியம். (இதே பராமரிப்பை, முகத்தில் பரு உள்ளவர்கள், முகத்தைக் கழுவ உபயோகிக்கலாம்) வேப்ப இலையும், கத்திரி மஞ்சள், சிறிது கிராம்பு இவற்றைக் காய வைத்துப் பொடி பண்ணி, இப்பொடியைக் கால் புண்களில் இடவேண்டும்.

காலில் பாதத்தில் காணும் வெடிப்பிற்கு உப்பும், டெட்டாலும் கலந்த வெது வெது நீரில் காலைக் கழுவி, பின்னர் பச்சைத் தண்ணீரில் ஒரு முறை கழுவ வேண்டும். கிளிசரின், வாசலின் (Petroleum Jelly) இவற்றைக் கலந்து, இரவில் இவ்வெடிப்புகளில் இடலாம்.



குளிர் காலங்களில் ஏற்படும் பிரச்னைகளில் முக்கியமானவை, கால்வெடிப்பு, வறண்ட சருமம், சருமம் செதில் செதிலாகக் காணப்படுவது போன்றவை. ஏற்கெனவே வறண்ட சருமம் உள்ளவர்களுக்கு, சருமம் மீண்டும் வறட்சி ஆகி, பின்னர் வெடிப்புகளும்,



எங்கள் வீட்டு தேங்காய் போட்ட கறிக்கும் (பொரியலுக்கும்) தேங்காய் சாதத் திற்கும் 'அவர்' ஆபீசிலும் பெண்ணின் ஸ்கூலிலும் ஏகப்பட்ட டிமாண்ட் எப்போதும். பொரியலுக்குத் தேங்காய் போடும்போது ஒரு ஸ்பூன் சர்க்கரையையும் தூவுங்கள். பொரியல் சுவையாக பசுமை மாறாமல் இருக்கும். தேங்காய் சாதம் கிளறும்போதும் ஒரு ஸ்பூன் சர்க்கரையைத் தூவினால் போதும், சுவை சூப்பரோ சூப்பர்!

— லலிதா முரளீதரன்

செதில்களும் ஏற்படுவதுண்டு. காலையில் குளிக்கும் பொழுது சுடு தண்ணீரில் குளித்தால், தோலுக்கடியில் உள்ள ரத்தக் குழாய்கள் விரிவடைந்து, உடம்பில் உள்ள வெப்பம் வெளியே வருவதால், தோலுக்குச் சேதமேற்படுகிறது. இதனால், குளிர்காலங்களில், கொஞ்சம் கஷ்டமாக இருந்தாலும், பச்சைத் தண்ணீரில் குளிப்பது நல்லது. வறண்ட தோல் உள்ளவர்கள், இக்காலங்களில் சோப்பு உபயோகிக்கக் கூடாது. இதற்குப் பதிலாக, கடலை மாவோ, பயத்தமாவோ, பாலில் கலந்து தேய்த்துக் குளிக்க வேண்டும். சோப்பு கட்டாயம் உபயோகிப்பவர்கள், வசதியிருந்தால் இதன் பின் பச்சைப் பாலை உடம்பு முழுவதும் தேய்த்துத் தண்ணீரில் கழுவலாம். முகத்தில் சருமம் வறண்டு இருப்பவர்கள், இரவில் படுப்பதற்கு முன், பச்சைப் பாலில் பாதாம் அரைத்து, அதில் சிறிது தேன், மற்றும் இரண்டு சொட்டு கிளிசரின் கலந்து முகத்திற்கு 'மசாஜ்' செய்ய வேண்டும். ஐந்து நிமிடம் கழித்து, கழுவி படுக்கச் செல்லலாம்.

எண்ணெய் பசை முகச் சருமம் உள்ளவர்கள், செம்பருத்தி பூ, ரோஜாப்பூ அரைத்து, அதில் கிளிசரின், தேன் கேரட் ஜூஸ் இவற்றைக் கலந்து மேற்கூறியபடி செய்யலாம்.

முகத்தில் பரு உள்ளவர்கள், சந்தனம், கிராம்பு, வேப்பிலை, ரோஜா ஆகியவற்றை அரைத்து முகத்தில் இட்டு, பின் காய்ந்தவுடன் கழுவலாம்.

பலவகையான மூலிகை அழகு சிகிச்சை முறைகளில் எங்களிடம் பயிற்சி பெற்று மூலிகை ஃபேஷியல் பேக், ஹேர்பேக் இவற்றைப் பெற அழகு நிலையம் நடத்தும் பெண்மணிகள் எங்களை அணுகலாம். எனக்கு ஒவ்வொரு வெள்ளிக்கிழமை மதியம் மூன்று மணி முதல் நான்கு மணி வரை 449678 நம்பருக்கு போன் செய்து அழகு சிகிச்சை ஆலோசனைகளை பெண்கள் இலவசமாக பெறலாம். அல்லது தேவி பியூட்டி கிளினிக், சிவசக்தி தியேட்டர் அருகில், கே.கே. புதூர் ஆறாவது தெரு, நம்பர் ஏழு, எம்.வி.ஜி தெரு சாய்பாபா காலனி, கோயமுத்தூர் என்ற முகவரிக்கு சந்தேகங்களைக் கடிதம் மூலமும் எழுதலாம்.

பேட்டி : ஆர். சுமதி.

உங்கள் வீட்டில் இருக்கும் டீ கப்ஸ் உபயோகப்படுத்தி போர் அடித்து விட்டதா! அதன் வெளிப்புறத்தில் பெய்ண்டினால் சின்னப் பூக்களோ அல்லது குழந்தைகளுக்குப் பிடித்த மிக்கி, டோநால்ட் டக் போன்ற ஸ்டிக்கர் ஒட்டி அழகுப்படுத்தி பென் ஸ்டேண்டாக மாற்றுங்கள். குழந்தைகளும் அதைச் சுத்தமாக வைத்துக் கொள்வார்கள்.

— வித்யா சதீஷ்



* லக்ஷ்மி ஹயக்ரீவர்

உடலுக்கு, உள்ளத்திற்குக் கேடுவிளைவிக்கும் போது பகவான் பல அவதாரங்களை எடுத்து நம்மை ரக்ஷித்திருக்கிறார் எனப் படிக்கிறோம். உடல், உள்ளத்தையும் விட அறிவுக்குக் கேடு விளைவித்தால் மகாபாபம் அன்றோ? அது சமூகத்தையே விஷக்கிருமிகள் செலுத்தி அழிப்பதற்குச் சமம் அல்லவா? அப்படி ஒரு நிலைமை ஏற்பட்ட போதும் அதனையும் காத்து ரக்ஷித்திருக்கிறார் என்றால் அது மிகச் சிறப்பானதன்றோ? அந்த அவதார மூர்த்தியைத் தியானித்து வணங்கும்போது அளவிலா ஞானம் பெருகும் என்பதால் இன்றும் பல பெரியவர்கள் கடைபிடித்து வருகிற ஆராதனைதான் 'ஹயக்கிரீவ ஆராதனை.'



ஹயக்கிரீவ அவதாரம் பகவான் அவதாரங்களில் மிக விசேஷமானது. பகவானின் தசா அவதாரங்களில் சேராத ஒன்று. மது, கைடபன் எனும் இரு அரக்கர்கள் பிரம்மாவிடமிருந்து வேதத்தை எடுத்துச் சென்று, மாயையினால் அதனை ஒரு பெண் குதிரை வடிவமாக்கி ஒளித்து வைத்து விடுகிறார்கள். தன் படைப்புத் தொழிலுக்கே ஆதாரமான வேதங்கள் இல்லாததால் திணறிப்

# கலைமகள் தந்த லக்ஷ்மி ஹயக்ரீவர்



போகும் பிரம்மன் பாற்கடலில் பள்ளிகொண்டுள்ள பரந்தாமனிடம் முறையிட்டு நின்றார். கருணைக் கண்ணன் வேதங்கள் பெண் குதிரையாகி இருப்பதை உணர்ந்துதான் குதிரை வடிவு கொண்டு வேதங்களை மீட்டு, மது கைடபர்களை வென்று பிரம்மனிடம் ஒப்படைக்கின்றான். 'அரக்கர்கள் எடுத்துக் கொண்டதால் சற்றே பவித்ரம் குறைந்துவிட்ட வேதங்களை மீண்டும் பழைய பவித்ரத்துடன் அளிக்க வேண்டும்' என பிரம்மன் வேண்டினான்.

கருணைக் கடலான மாதவன் தலை குதிரை வடிவமாகவும், உடல் மானுடவடிவமாகவும் கொண்டு ஹயக்ரீவனாகத் தோன்றி, தன் மனையாள் மகா லக்ஷ்மியை இடதுபுறம் அணைத்துத் தன் மடியில் இருத்தியவாறே பிரமனுக்கு மீண்டும் வேதங்களைத் தன் 'கற்பூரம் நாறுமோ, கமலப்பூ நாறுமோ' என

ஆண்டாள் நாச்சியார் வியந்த திருவாயால் உபதேசம் செய்விக்கிறார். அங்கே அறிவும், ஞானமும், லக்ஷ்மி கடாட்சமும் பெருக்கெடுத் தோட கேட்பானேன. அப்பேர்ப்பட்ட திவ்ய அவதாரமே ஹயக்ரீவ அவதாரம். ஹயக்ரீ வரைத் தியா னித்துச் செயல்படுபவர்களுக்கு அற்புதமான ஞானமும், செல்வமும் கிட்டும் என்பதில் ஐயமில்லை.

இப்பேர்ப்பட்ட திவ்யசொரூபமாக, இன் னும் பல மடங்கு பவித்ரங்களுடன் மைசூரில் காட்சியளிக்கிறார் 'பிரம்மதந்திர ஸ்வதந்திர பரகால மட'த்தில். ஸ்ரீ கிருஷ்ணவிலாஸ ரோடு, தேவராஜ் மொஹல்லா' மைசூரில் அமைந் துள்ளது இந்த மடம். அற்புதமான ஞானவான் கள் குடிகொண்டிருக்கும் இடமாக அமைந் திருக்கிறது பரகாலமடம். விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை உபதேசித்த ஸ்ரீ இராமானுஜர் பிரம்ம சூத்ர பாஷ்யம் எழுதினார். இதனை காஷ்மீர் சரஸ்வதி பீடத்திலுள்ள அறிஞர்கள் அங்கீகரித்தால் மட்டுமே அனைவரும் ஏற்றுக் கொள்வர் என்பதால் அங்கு சென்று பாஷ் யத்தைச் சமர்ப்பித்தார். இவருடைய விளக் கத்தைக் கேட்டு மகிழ்ச்சியடைந்த சரஸ்வதி தேவி தானே பிரதயட்சமாகி 'ஸ்ரீலட்சுமி சமேத ஹயக்ரீவ' மூர்த்தியை இவருக்கு அனுக்ரஹித்த தாகவும், இவரை 'பாஷ்யக் காரர்' என அது முதல் அழைக்கலாயினர் எனவும் கூறுகிறார்கள்.



• ஸ்ரீ அபிநவ வாகீச ஸ்வாமிகள்



• சீதாதேவி சமேத ஸ்ரீராமருக்கும், லக்ஷ்மணருக்கும் அபிஷேகம்

அப்பேர்ப்பட்ட சிறப்பு வாய்ந்த ஹயக்ரீவ மூர்த்தியை பெருமைவாய்ந்த வேதாந்த தேசி கருக்கு ஸ்ரீ ஆச்சார்யார் அளிக்க, அவர் பரகால மடத்தின் முதல் யதிவராய ஆசார்யாரிடம் ஒப் படைத்ததாகவும் வரலாறு கூறு கிறது. காஞ்சியில் துப்பல் என்ற இடத்தில் முதன் முதலில் இவர் களுடைய மடம் ஸ்தாபிக்கப்பட்டது. பின்னர் திருமலை திருப்பதியிலும் இவர்களுடைய மடம் ஸ்தாபிக்கப் பட்டது மட்டுமல்லாமல், திருமலை திருப்பதியில் பூஜா விதானங்கள் அனைத்தையும் கிரமப்படுத்தினர் என்றும் கூறுகிறார்கள். இன்றைக்கும் திருமலை திருப்பதி முதல் தீர்த்தம் இவர்களுக்கே உரியது. இன்றும் திருக்கோயிலருகே பரகால மடம் தன் னுடைய பழம் பெருமையுடன் காட்சியளிக் கிறது. அங்கே மடத்தைப் பெரிய அளவில் விரிவுபடுத்தும் பணியில் தற்போது ஈடுபட்டு வருகிறார்கள். பின்னர் மைசூரிலும், மைசூர் சுற்றுவட்டாரத்திலும் தங்கள் அருளாட்சியை நடத்தி வந்த யதிவராயர்களை மைசூர் மகா ராஜா வேண்டி அழைக்க கடைசியாக மைசூரி லேயே தங்கள் மடத்தை நிரந்தரமாக ஸ்தா பித்து அங்கேயே வீற்றிருந்தனர். இப்படி



## தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம்,

எண்.25, டாக்டர் இராதாகிருஷ்ணன் சாலை, மயிலை, சென்னை-4.

### விற்பனைப் பிரிவின்
### இட மாற்றம் பற்றிய அறிவிப்பு

1. தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தின் விற்பனை பிரிவு அண்ணாசாலையில் இருந்து எண்.4, ஈ.வே.ரா. நெடுஞ்சாலைக்கு மாற்றம் செய்யப்பட்டுள்ளது (சென்ட்ரல் ரெயில்வேயின் பதிவு அலுவலகத்திற்கு எதிரில்).

   தொலைபேசி எண் : 582916, 260294.
   தொலை நகல் எண் : 561385.

2. எங்களது சுற்றுலா பயணங்கட்கும் மற்றும் எங்களது அனைத்து ஓட்டல்களுக்கான ஒருங்கிணைந்த முன்பதிவும் செய்யப்படும்.

3. 10 பயணச்சீட்டு அல்லது 10 அறைகட்கு குறையாமல் பதிவு செய்பவர்கட்கு நாங்கள் கட்டணச் சலுகை வழங்குகின்றோம்.

4. விடுமுறை பயணச் சலுகை சான்றிதழ்களையும் வழங்குகின்றோம்.

5. சுற்றுலா மற்றும் தங்கும் விடுதிக்கான பதிவுகள் எல்லா நாட்களிலும் மற்றும் பிற விடுமுறை நாட்களிலும் சனி, ஞாயிறு உட்பட செய்து கொள்ளலாம்.

**இணை பொது மேலாளர்**

DIPR/724/DIS/96



மைசூரில் எழுநூறு ஆண்டுகளுக்கு முன் ஸ்தாபிக்கப் பட்டதே 'ஸ்ரீ ப்ரம்மதந்திர ஸ்வதந்திர பரகால மடம்'. அதற்குப்பின் முப்பத்தியைந்து ஆசார்யார்கள் இம் மடத்தின் தலைவர் பொறுப்பேற்று ஹயக் ரீவ ஸ்வாமியை ஆராதித்து வந்திருக்கிறார்கள். தற்போது முப்பத்தியாறாவது ஆச்சார்யா ராக குரு பீடத்தை அலங்கரித் துக் கொண் டிருப்பவர் ஸ்ரீ ஸ்ரீ அபிநவ வாகீச ப்ரம்மதந்திர ஸ்வதந்திர பரகால ஸ்வாமிகள்.

மைசூர் மகாராஜாக்கள் ஆட்சி செய்து வந்த காலத்தில்





• டாக்டர் தம்பதிகள்

எனவே வருமானம் என்பது பெரிதும் பாதிக்கப் பட்ட நிலை. இப்படிப் பட்ட சூழ்நிலையில் தான் இன்றைய பரகால மடம் அமைந்திருக்கிறது என்பதை நாங்கள் அந்த திவ்விய மங்கள ஜோதிஸ்வரூபமாக விளங்கும் ஹயக்ரீவரைத் தரிசிக்க மைசூருக்குச் சென்ற போது கண் டோம்.

ஆசார்யார் மகா பண்டிதர். தன் மெல்லிய குரலில் ஹயக்ரீவரின் மகத்துவத்தையே பேசிக் கொண்டிருந்தார். எப்பேர்ப் பட்ட மகான்கள் ஆராதித்த பகவான் என்று மெய்சிலிர்த்தார்.



• பரகால மடத்தின் வெளித்தோற்றம்

ஏராளமான நிலபுலன்களையும், சொத்துக்களையும் வாரி வழங்கியிருக்கிறார்கள். ஞானமும் செல்வமும் கொழித்த காலமது. எனவே ஆசார்யார்கள் முழுக்க ஞான விசாரத்திலேயே இருந்திருக்கிறார்கள. பெரும் வித்வத் கல்வி சபைகளை ஏற்படுத்துவது, நாடெங்குமுள்ள கல்வியாளர்களை அழைத்து அவர்களைக் கௌரவிப்பது, ஹோமங்கள் செய்வது, வருகிறவர்களுக்கெல்லாம் அன்னதானம் என பல நூற்றாண்டுகளாக வாழ்ந்து வந்திருக்கிறார்கள். ஆனால் பின்னர் மகா ராஜாக்கள் ஆட்சி போய், நில உச்சவரம்புச் சட்டம் அமலான வுடன் மடத்திற்கு வருமானம் தடை பட்டு விட்டது. ஞானம் தேடுவது ஒன்றையே கொண்டிருந்த மகான்கள் தங்களுக்கென்று சிஷ்யபரம்பரையை ஏற்படுத்திக் கொள்ளவில்லை.

அதன் பவித்ரத்தை உணர்ந்த மைசூர் மகாராஜா வைரத் தொட்டிலையே பகவானுக்குத் தந்திருக்கிறார். அதிலே ஹயக்ரீ வரை அமர்த்தி, 'தங்க விக்ரகங்'ளாக உள்ள சீதா லக்ஷ்மண ஹனுமான் சமேத ஸ்ரீராமரையும் வைத்து ஆசார்யார் பூஜிக்கின்ற அழகே அழகு. நாங்கள் சென்ற நாள் ஸ்ரீராமரின் நக்ஷத் திரமான புனர்வசு தினம். மலர்களாலும், வாசனைத் திரவியங்களாலும் அலங்கரித்து, அபிஷேகமும், ஆராதனையுமாக நடை பெற்றது.

ஸ்ரீ ஆசார்யாளிடம் பிறகு பேசிக் கொண்டிருந்தோம்.

"ஹயக்ரீவர் அவதாரம் மிகவும் விசேஷமான அவதாரம். சாதாரணமாக இங்கிலீஷ்காரர்கள் கூட சொல்வார்கள், "It is coming from the horses mouth" என்று. அது போல் நம்

முடைய சாஸ்திரங்களிலும் குதிரைக்கு ஒரு விசேஷம் உண்டு. ஹோமங்களுக்கு பாத்திரத்தைச் சுத்தி செய்ய வேண்டுமானால் குதிரையின் வாயருகே கொண்டு செல்வார்கள். அதன் நாக்கு படும்போது மிகவும் சுத்தமாகி விடுகிறது என்பது ஐதிகம்.

அப்படிப்பட்ட சிறப்பு வாய்ந்த குதிரை முகத்துடன் கூடிய உருவத்துடன் பிரம்மாவிற்கு வேதங்களை உபதேசித்ததே ஹயக்ரீவ மூர்த்தி நிறையபேர் ஹயக்ரீவ முனிவர், ஹயக்ரீவ அசுரன் இவற்றையெல்லாம் போட்டுக் குழப்பிக் கொள்வார்கள். அவையெல்லாம் வேறு வேறு. இது பகவானின் அவதாரம். வேதம் காத்து அதனை பிரம்மாவிற்கு உபதேசித்த அவதாரம் இப்பேர்ப்பட்ட மூர்த்தியை ஆராதிப்பவர்கள் மகா கல்விமானாக விளங்குவார்கள்."

"....ஆனால் பொதுவாக கல்வியும், செல்வமும் ஒன்றாகச் சேரவே சேராது என்கிறார்களே..."

"அது சரியல்லம்மா. எப்பேர்ப்பட்ட செல்வம் இருந்தாலும் அதனை எப்படிப் பாதுகாப்பது, எப்படிச் சரியாக நிர்வகிப்பது என்பதற்கு அறிவு அவசியம். கல்வி என்பது பட்டப் படிப்பைச் சொல்லவில்லை. அறிவு, ஞானம் அறிவோனாக ஞானவானாக இருப்பவனால் தான் செல்வத்தைச் சரியாக நிர்வகிக்க முடியும். அறிவு இல்லாதவனை அந்தச் செல்வமே அழித்துவிடும். எனவே அறிவு, ஞானம் உடையவனிடம் செல்வம் கண்டிப்பாகச் சேரும். இந்த இரண்டையும் பெற்றவன் மகாபாக்கியவானாக ஆகிறான். அந்த இரண்டையும் அளிக்கின்றவரே ஸ்ரீலக்ஷ்மி சமேத ஹயக்ரீவர்."



ஹயக்ரீவர்



• சீனிவாஸாச்சார்

"அதே போல செல்வம் என்பதை வெறும் பணம் எனப் பார்க்கக் கூடாது. 'சம்பத்து' அது. 'சம்பத்து' என்பதுதான் உண்மையான சௌபாக்கியம். சகல சம்பத்துக்களையும் பெற்று வாழ்வாங்கு வாழ முயற்சிப்பதுதான் உண்மை யான ஞானவானின் குறிக்கோளாக இருக்க வேண்டும். கல்வி, செல்வம் எனப் பார்க்காமல் ஞானம், சம்பத்து என இரண்டையும் இணைத் தோமானால் அது பிரியாது. ஒன்றுக்கொன்று சேர்ந்தே இருக்கும் என்பதைப் புரிந்து கொள்ளலாம்" என்றவர் நாம் முன்பு சொன்ன வரலாற்றையும், இந்த மடம் வந்த விதத்தையும் விளக்கிப் பேசினார். மீண்டும் நாம் முன்பு கேட்ட கேள்விக்கே வந்தார்.

"நம்முடைய மக்கள் அறிவு என்பது எது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். 'ஆத்மபுத்தி பிரகாசம்' என்று சொல்வார்கள். ஆத்மாவை உணரச் செய்கின்ற புத்தியே பிரகாசமானது. பிரம்ம வித்யை தான் உண்மையான வித்யை. அதனால்தான் 'ஞானானந்தம்' என்றார்கள். ஞானம் என்பதே ஆனந்தமானது. அதை அறிய வேண்டும். அதை அறிந்தவன், உணர்ந்தவன் பிரகாசமாகிறான். அப்படி உண்மையான வித்யை உணர்ந்து பயில வேண்டும். நம் நாட்டுக் குழந்தைகளுக்கு இதை உணர்த்த வேண்டும்" என்று சமூகக் கவலை யோடு பேசிக் கொண்டிருந்தார்.

பொதுவாகவே படிக்கும் குழந்தைகள் 'ஹயக்ரீவரை' உபாசனை செய் தால் மிகவும் விசேஷம் என்பார்கள். 'ஞானானந்தமயம் தேவம்...' எனும் இரண்டடி ஸ்லோகத்தினைச்

♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦

நாடா பக்கோடா செய்யும் பொழுது 4, 5 மோர் மிளகாய் (மாவில் உப்பை குறைத்துக் கொள்ளலாம்), 4, 5 சின்ன வெங்காயம் அரைத்து மாவில் கலந்து விடுங்கள். வாசனையாகவும், சிவக்காமலும் நாடா பக்கோடா இருக்கும்.

— மஹிமா



# ‘அம்மா...இன்னைக்கு கிளாஸ்ல டீச்சர், ஆரோக்கியத்துல மெருகிடும் அழகிய தலைமுடிக்கு உதாரணமா, என் தலைமுடியைக் காட்டினாங்க !’




என் செல்ல மகள் பிரீத்தி தான், இந்த சந்தோஷமான சமாச்சாரத்தை என்கிட்டே சொன்னா ! ரொம்ப பெருமையா இருந்துச்சு ! ஆமா... க்ளினிக் ப்ளஸ் புரோட்டீன் ஷாம்ப்பூ மேல, நான் வெச்ச நம்பிக்கை வீண் போகலே ! ஏன்னா, இதுலதானே லிக்விட் புரோட்டீன் இருக்கு !

இதைத் தொடர்ந்து பயன்படுத்தறதால, க்ளினிக் ப்ளஸ், தலைமுடியை உண்மையாவே சுத்தமாக்குது. லிக்விட் புரோட்டீனோ, ஒவ்வொரு தலைமுடியின் அடி வரையிலும் பரவி பலப்படுத்துது. இப்போ, பிரீத்திதான், அவ கிளாஸ்லேயே, ஆரோக்கியத்துல மெருகிடும் அழகிய தலைமுடிக்கு உதாரணமா இருக்கா ! ஒரு தாய்க்கு இதை விட வேறென்ன வேணும் ? !




ஆரோக்கியத்தில் மெருகிடும் சுத்தமான தலைமுடிக்கு.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

Lintas CI PI 41 2013 Tm

சொல்லச் சொல்வார்கள். ''இதனை ஒரு 'மெடிடேஷன்' போலச் செய்து கொண்டு வந்தால் மிகச் சிறந்த பலனை அடைய முடியும்'' என்கிறார் இம் மடத்தின் பக்தர்களில் ஒருவரான 'விப்கோ' வரதன். இம்மடத்தின் மீதும், ஆசார்யாரின் மீதும் கொண்ட ஈடுபாடு காரணமாகவே ஹயக்ரீவ மகிமையை விளக்கிப் பல புத்தகங்களைப் பதிப்பித்துள்ளார் இவர்.

''அதுவும் ஸ்ரீலக்ஷ்மி சமேத ஹயக்ரீவர் குடி கொண்டுள்ள இந்த மடம் மிகவும் விசேஷமானது. இதனை ஆராதிப்பவர்களுக்கு நிச்சயம் ஞானமும், செல்வமும் வந்தமையும் என்பதில் சந்தேகமேயில்லை. சர்வமங்களமும் அவர்களுக்குக் கிடைக்கும்.''

என்கிறார். அதனால்தான் ஹயக்ரீவ ஸஹஸ்ரநாமம், ஆராதனை பற்றியெல்லாம் ஆசார்யாரிடம் கேட்டுக் கொண்டு தன்னால் ஆன கைங்கர்யமாகப் புத்தகமாக வெளியிட்டுள்ளார்.

பரகால மடம் எவ்வளவோ செல்வமும், செழிப்பும், வித்வத் சபையோடும் விளங்கியிருந்தது என்பதற்கு இன்னும் அந்தச் சுவடுகள் மறையாமல் இருப்பதே சாட்சியாக உள்ளது. தாயினும் சாலப்பரிந்து, ''நீங்கள் அவசியம் சாப்பிட்டுத்தான் போகணும்'' என நெய் மணக்கச் சாப்பாடும், இனிப்புகளும், பசும் மோருமாக பரிமாறச் சொல்லி கருணையோடு அவர் பரிந்துரைத்தது நெஞ்சை நெகிழச் செய் வதாக இருந்தது.

''ஆனால் இன்றைய நிலையில் ஹயக்ரீவரின் மகத்துவத்தை அறிந்து ஆராதிக்கும் சமூகமே தேவை'' என்கிறார் இங்கு காரிய தரிசியாக இருக்கும் ஸ்ரீனிவாஸாச்சார். ''இங்கு இது வரை இருந்த ஆசார்யார்களும், இப்போது





இருக்கும் சுவாமிகளும் மகான்கள் என்றுதான் சொல்ல வேண்டும். அவர்கள் இந்து தர்மத்தைக் காப்பது, வேதாந்த வேதங்களை வித்வத் சபையில் விவாதிப்பது, வரும் பக்தர்களுக்கு அன்னமிடுவது என வாழ்ந்தார்கள், வாழ்கிறார்கள். ஆனால் மடத்தை சம்ரக்ஷித்த மகாராஜா இன்று இல்லை. எனவே இன்றைய மகாராஜாக்கள் எனப்படும் மக்கள்தான் இப்பேர்ப்பட்ட திவ்வியமான மடங்களை உணர்ந்து ஆதரிக்க வேண்டும்'' என்கிறார்.

''இவர்களின் சொத்துக்களுக்குக் குறைவில்லை. பெங்களூர் பஸ் ஸ்டாண்டிற்கு அருகிலுள்ள இடம் மடத்தைச் சேர்ந்தது. அதை இன்று ஆக்ரமித்துக் கொண்டிருப்பவர்கள் இரு பது ரூபாய், முப்பது ரூபாய் என வாடகை கொடுக்கிறார்கள். அதே போல ஒரு கல்யாண மண்டபம் கட்டித் தருகிறேன் என வந்தவர் பாதியில் விட்டுச் சென்றார். மடத்தின் நிலங்களையெல்லாம் யார் யாரோ அனுபவிக்கிறார்கள். மிகவும் மகத்துவம் வாய்ந்த இந்த மடம் இன்று சரியாக ஆராதிப்பவர்கள் இல்லாமல் இருப்பதைப் பார்க்கும் போது கஷ்டமாக இருக்கிறது. இப்பேர்ப்பட்ட சிறப்புக்களையும் மகான்களையும் போற்றிப் பாதுகாப்பது நம்மைப் போன்றவர்களின் கடமை...'' என்றார்கள் இங்கு வந்திருந்த டாக்டர் தம்பதிகள்.

இத்தனை காலத்தின் கோலத்தையும் பார்த்துக் கொண்டு தன்னை நாடி வருபவர்களுக்கு அருள்பாலிக்க வைர ஊஞ்சலில் ஆனந்தமாக அமர்ந்து கொண்டிருக்கிறார் ஸ்ரீலக்ஷ்மி சமேத ஸ்ரீ ஹயக்ரீவர்.

— மஞ்சுளா ரமேஷ்

படங்கள் : ஜி. சுரேஷ்



4-டோர் 350 லிட்டர்



3-டோர் 250 லிட்டர்



2-டோர் 250 லிட்டர்

இந்தியாவின் ஒவ்வொரு மூலையிலும் உள்ள சீதோஷ்ண நிலை. இந்தியாவின் ஒவ்வொரு பிரதேசத்திலும் உள்ள உணவுப் பழக்கங்கள். இந்தியாவின் ஒவ்வொரு குடும்பமும் உணவைப் பாதுகாக்கும் பழக்கங்கள். பிபிஎல் ஃப்ராஸ்ட் - ஃப்ரீ டிசைன் செய்யப்பட்டிருப்பது இவற்றுக்காக. எப்படி என்று பார்ப்போமா? மிக அதிக உஷ்ணமுள்ள நிலையில் தங்கு தடையின்றி துல்லியமாக இயங்கும்படி இதன் கம்ப்ரெஸ்ஸர் உருவாக்கப்பட்டுள்ளது. இதன் வெவ்வேறு டெம்பரேச்சர் பகுதிகள் ஒவ்வொரு விதமான உணவையும் (மிக அபூர்வ இந்தியப் பதார்த்தம் உள்பட) மிக மிக புத்தம் புதிதாகப் பாதுகாத்திடும். இதில் உள்ள இடமோ இந்தியாவில் உள்ள பாத்திரங்கள் உயர அடுக்கு, சின்ன பாத்திரம், வட்ட கிண்ணம் அல்லது பெரிய டப்பா - எதுவாயினும் வைக்கும்படி அருமையாக டிசைன்செய்யப்பட்டுள்ளது. அத்துடன் இந்தியாவின் இந்த மிகப்பெரிய ஃப்ராஸ்ட் - ஃப்ரீ அணிவரிசையில் ஒவ்வொரு இந்தியக் குடும்பத்தின் தேவைக்கேற்ற ஒரு மாடல் உள்ளது. பிபிஎல் ஃப்ராஸ்ட் - ஃப்ரீ இந்தியாவுக்காக தயாரிக்கப்படும் ரெஃப்ரிஜிரேட்டர்கள். உங்களுக்காகத் தயாரிக்கப்படுபவை.



2-டோர் 300 லிட்டர்



3-டோர் 350 லிட்டர்



2-டோர் 185 லிட்டர்

## BPL FROST-FREE

இந்தியாவின் மிகப்பெரிய, மிக அதிக விற்பனையாகும் ஃப்ராஸ்ட் - ஃப்ரீ அணி வரிசை

கூல் & ஈஸி ' எனும் உணவுக் குறிப்புப் புத்தகத்துக்கு ' BPL Refrigeration Limited ' க்கு ரூ 100/- க்கான டிமாண்ட் டிராப்ட்\ போஸ்டல் ஆர்டர் அனுப்பவும்.

**BPL** Believe in the Best.

COIMBATORE : No. 2, Vincent Road, Fort, Tel: 391398

## இதய போதனை

ஸ்ரீ சத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் கூறும் நல்லுரைகள். மன அமைதி அடைய அமுத மொழிகளைக் கூறுகிறார்கள்.

பக். 191. விலை ரூ. 30.00

## எல்லா காரியங்களும் நன்மையாக நடக்க வேண்டுமா?

ஆன்மீக நிலையில் குடும்ப வாழ்க்கை, மன அமைதி பற்றியெல்லாம் கட்டுரை வடிவில் தந்திருப்பவர், - வைரம் ராஜகோபால்.

பக். 94. விலை ரூ. 15.00

(இரண்டும் - கங்கா காவேரி, 17, காரியாங்குடி செட்டித் தெரு, வெளிப்பாளையம், நாகப்பட்டினம் - 611 001).

## கஷ்டங்கள் தீர்க்கும் காயத்ரி வழிபாடு

மகிமை வாய்ந்த காயத்ரியின் சிறப்பை விளக்குபவர் இரா. இளையபெருமாள்.

பக். 64. விலை ரூ. 10.00

## சர்வமங்களம் தரும் வைபவலக்ஷ்மி பூஜை

வெள்ளிக்கிழமை தோறும் இப்பூஜையைச் செய்யலாம் என விளக்கியிருப்பவர் கு. சண்முக சுந்தரம்.

பக் 32. விலை ரூ. 3.00

(இரண்டும் - சகுந்தலை நிலையம், 58, ஐயப்ப செட்டி தெரு, மண்ணடி, சென்னை - 600 001.

## இந்து சமய தத்துவங்கள் ஐநூறு

இன்றைய வாழ்க்கைக்குத் தேவையான செய்திகளை தொகுத்திருப்பவர் பி.எஸ். ஆச்சார்யா.

'அரக்கு உருகினால் தங்கம் உருகும். தங்கம் உருகினால் மணி அதில் பதிந்து விடும்'.

அது போலத்தான் வாழ்க்கையும் என்கிறார்.

பக். 128. விலை ரூ. 24.00

# புக் ஷெல்ஃப்



## பாலியல் மனோத்துவ கேள்விகள் - பதில்கள்

இது ஒரு திருமணப் பரிசு நூல் எனக் கூறி நிறைய ஐயங்களுக்கு விடையளிப்பவர் பி.சி. கணேசன்.

பக். 144. விலை ரூ. 27.00

(இரண்டும் நர்மதா பதிப்பகம், 16/7, ராஜாபாதர் தெரு, பாண்டிபஜார், தி.நகர், சென்னை - 17).

## உடல் நலம் காக்கும் யோகாசனம்

யோகாசனத்தின் பெருமையை விளக்கப் படங்களுடன் தந்திருப்பவர் ஸ்வாமி முருகானந்தா.

பக். 128. விலை ரூ. 22.00

## இனிப்பு காரம் பலகாரவகைகள்

86 வகை பலகாரங்களைக் கூறியிருப்பவர் வசந்தி அம்மாள்.

பக். 96. விலை ரூ. 18.00

(இரண்டும் மயிலவன் பதிப்பகம், 18, தெற்கு பெருமாள் கோவில் முதல் தெரு, வடபழனி, சென்னை - 26).

## மேலிடங்கள்

சுப்ரபாலனின் சிறுகதைத் தொகுப்பு. எளிய நடையில் அன்றாட வாழ்வின் சுவாரஸ்யங்களைத் தருகிறார்.

பக். 122. விலை ரூ. 24.00

## ஏவி.எம். என் கணவர்

ஏவி.எம்.மின் வாழ்க்கையாக மட்டுமல்லாமல், சாதனை படைத்த அவருடைய திரையுலக வாழ்வின் சரித்திர நிகழ்வுகள், மனித வாழ்வின் நேயம், கலை நயம் என மிக அழகாகப் பின்னி சுவாரஸ்யமான வாழ்வியல் நூலாகத் தந்திருக்கிறார் இராஜேஸ்வரி மெய்யப்பன்.

பக. 232. விலை ரூ. 50.00

(இரண்டும் கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17).

## பிஞ்சு உள்ளங்களுக்கான பாடல்கள்

குழந்தைகளுக்கான பாடல்களைத் தந்திருப்பவர் விட்டலாபுரம் ராஜன்.
பக். 64. விலை ரூ. 12.00

## தன்னம்பிக்கை தரும் பொன் மொழிகள்

தொகுப்பு - கே.எஸ். சுப்ரமணி (உ.ம்) துயரம் - தலையை நரைக்கச் செய்யும். ஆனால் இதயத்தை வலிமையாக்கும்.
பக். 244. விலை ரூ. 46.00
(இரண்டும் மணிமேகலைப் பிரசுரம், த.பெ. எண். 1447, 4, தணிகாசலம் சாலை, தி. நகர், சென்னை - 17).

## சின்ன சின்ன ஆசை

ஹைக்கூ கவிதைகள். ஆசிரியர் பொன் குமார்.
பக். 46. விலை ரூ. 10.00
(பொன் குமார், 19, புது திருச்சி கிளை வடக்குத் தெரு, லைன்மேடு, சேலம் - 6).

## கங்கையின் பிரவாகத்தில்

சாரதா விஸ்வநாதன் எழுதிய குறுநாவல்களின் தொகுப்பு. நியாயத்திற்காகப் போராடும் ஆவேசம் நூல் முழுக்க பரவியிருக்கிறது.
பக். 200. விலை ரூ. 40.00
(இந்திரா பதிப்பகம், சி-2/198, டவுன்ஷிப், திருச்சி - 620 014).

பட்சணங்கள் செய்வதில் எத்தனை கவனம் செலுத்துகிறோமோ அதில் பாதியாவது பாதுகாப்பில் செலுத்துவது அவசியம். பட்சணங்கள் வைத்துள்ள சம்புடத்தில் சிறிது கல் உப்பை முடிந்து போட்டு வைத்தால் கடைசி துண்டு வரை கரகரப்பாக இருக்கும். ஐப்பசி அடை மழையிலும் நமுத்துப் போகாது.
— ராகினி தியாகராஜன்



## ஜோதிட ரகசியம்

ஜோதிடம் கற்க ஆர்வமுள்ளவர்களுக்கு. ஆசிரியர் கௌரிசங்கர்.
பக். 96. விலை ரூ. 18.00

## நவக்கிரகம் தரும் ஜோதிட பலன்கள்

ஆசிரியர் மயிலை பூபதிராஜன்.
பக். 112. விலை ரூ. 20.00
(இரண்டும் யமுனா பிரசுரம். 18/1, ராஜாபாதர் தெரு, தி.நகர், சென்னை - 17).

## வாஸ்து சாஸ்திரம் என்கிற மனையடி நூல்

வீடு கட்டுபவர்களுக்கு வாஸ்து சாஸ்திர அடிப்படையில் விளக்கி இருப்பவர் கே.என். சரஸ்வதி.
பக். 176. விலை ரூ. 40.00

## ஸாராவளி

ஜோதிடர்களுக்கு மிகவும் பயன்படும் 'பாவ' நிலைகளைக் கூறும் நூல். ஆசிரியர் கே.என். சரஸ்வதி.
பக். 120. விலை ரூ. 20.00
(இரண்டும் கடலங்குடி பப்ளிகேஷன்ஸ், நடேசய்யர் தெரு, தி.நகர், சென்னை - 17).

## நல்வாழ்விற்கு நீதி மொழிகள்

நீதிமொழிகள் பற்றி மூன்று அரிய நூல்கள் கூறும் பொன் மொழிகளை விளக்கியிருப்பவர் பேராசிரியர் சு.ந. சொக்கலிங்கம்.
பக். 192. விலை ரூ. 40.00

## அம்மா சொன்ன கதைகள்

ஒரு தாய் தன் குழந்தைக்குச் சொல்லும் கதைகள், எழுத்தாளர் சிவசங்கரி அதைச் சொல்லும் போது சுவாரஸ்யம் மிகுகிறது.
பக். 72. விலை ரூ. 50.00

## வள்ளுவம் — மொழியும் மாண்பும்

திருக்குறளின் சிறப்பை வாழ்வியல் ரீதியாக விளக்கியிருக்கிறார் பேராசிரியர் சு.ந. சொக்கலிங்கம்.
பக். 134. விலை ரூ. 30.00
(மூன்றும் வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி.நகர். சென்னை - 17).

# சரவணா ஸ்டோர்ஸ்

ரெங்கநாதன் தெரு, தி.நகர், சென்னை 600 017.

## உயர்தரமான தங்க நகைகள்
## வெள்ளி பாத்திரங்களுக்கு

# செய்கூலி இல்லை

**22 CT. தங்கம்**

1 கிராம் விலை ரூ. **469-00**

(விலை மாற்றம் உண்டு)

**பட்டுப் புடவைகளுக்கு**
**10% தள்ளுபடி**

ஜவுளிகள், ரெடிமேட்
ஆடைகள், பாத்திரங்கள்,
டி.வி. டேப் ரிக்கார்டர்,
ஃபிரிட்ஜ், வாஷிங் மெஷின்,
ஃபேன், கிரைண்டர், மிக்ஸி,
சூட்கேஸ்

**FIXED DEPOSIT**
**24%**
**PER ANNUM**

ஞாயிறு விற்பனை உண்டு.

I.R.SWAMI / PP

## A BEAUTIFUL HOME IS NOT A FAR AWAY DREAM

**From Dream to Reality**

**It's only one step**

JOIN

# INTERIOR DECORATION

CORRESPONDENCE COURSES

AND

DECORATE YOUR HOME YOURSELF

- Study in your own free time.
- No minimum qualification needed.
- Course fee payable in easy instalments.
- No need to buy costly books.
- Study material prepared by experts.
- Choice of Hindi medium also.




Interior Decoration Course is quite interesting. In this course you come to know how to decorate your sweet home. – Preeti S., Erode, Tamilnadu

The course has enabled me to decorate my room and has given me many ideas regarding interior decoration – C.Smitha, Hyderabad, A.P.

You have indeed opened a whole new world to me and I look forward for an eventful life in Interiors. – P. Arjun Rao, N.Delhi

This course has enabled me to gain a new outlook, and to understand to a greater extent the meaning of Interior Decoration. Thereby helping me to create a world of elegance and comfort. – Sutapa Chakraborty, Midnapore, W.Bengal

With the help of this course I was able to give some tips to my uncle, who was building a new house. Everyone praised me for my ideas. – Thanga Usha Bhaskaran, Madurai, Tamilnadu

I am proud to have been a student of your academy. I had an exhilarating experience going through every lesson. – M.V. Padmaja, Berhampur, Orissa

This Interior Decoration course is useful for me, and I gained knowledge of different samples sent by you and different kinds of materials – Narbada T. Jaipur (Raj)

I suggested my Aunty some tips, and changes to be made. On doing so the room looked more spacious and airy. I was again and again praised for my work. Whatever credit I get, is due to 'AID' and its Course. – Beena Das, Bombay

I thank you very much for offering us such a wonderful course. The course was very interesting and useful to me. – V. Mala, Madurai, Tamilnadu






For details send a self addressed envelope to :

**ACADEMY OF INTERIOR DECORATION**

10A/14, SHAKTI NAGAR, DELHI-110007

---

கருமையான கூந்தல் வளர்ச்சிக்கு

"ஆனந்தாவின்"

# நீலி பிருங்காதி தைலம்

எல்லா கடைகளிலும் கிடைக்கும்.




ஆனந்தா வைத்திய சாலை,

புது தாராபுரம்ரோடு, பழனி, தமிழ்நாடு.

# வாஸ்து எனும் புதையல்

பி.ஜே. ரவிராஜ்

மனிதன் உலகிலுள்ள எல்லா ஜீவராசிகளைக் காட்டிலும் சிறந்தவன். ஆனால் ஒரு விதத்தில் பார்த்தால் அநேக விஷயங்களில் மிருகங்களே மனிதனை விட சிறப்புப் பெற்றவைகளாக இருக்கின்றன. கழுகுகளுக்கு இருக்கும் கூர்மையான பார்வை மனிதனுக்கு இல்லை. நாய்களுக்கு இருக்கும் மோப்ப சக்தி மனிதனுக்கு இல்லை. மான்களுக்கு இருக்கும் கேட்கும் சக்தி மனிதனுக்கு இல்லை. இன்று உலகில் பூகம்பம் ஏற்படுவதற்கு முன் மிருகங்களும், பறவைகளும் தெரிந்து கொண்டு தங்களை காத்துக் கொள்கின்றன. விஞ்ஞானம் அறிந்த மனிதனோ அழிவு வந்த பின்புதான் தெளிவு பெறுகின்றான். இப்படி இருந்தும் மனிதன் மிருகங்களை விட எப்படி சிறப்புப் பெற்றவன் என்று பார்க்கும் பொழுது பகுத்தறியும் அறிவிலே சிறந்து விளங்குகின்றான். ஒவ்வொரு விஷயத்திலும் ஏன் என்ற கேள்விகளைக் கேட்டு விஷயங்களை பகுத்து அறிகின்றான்.

பகுத்தறிவை பெற்ற மனிதன் எல்லா விஷயங்களையும் பகுத்து அறிகின்றானா என்று பார்த்தால் அதை இல்லை என்றே கூற வேண்டும். இன்று பெரிய தொழிற்சாலைகளை தொடங்கி அதற்காக நிதி நிறுவனங்களில் கடன் பெற்று, வல்லுனர்களை வேலைக்கு அமர்த்தி பல லட்சியக் கனவுகளோடு ஆரம்பித்து, தமக்குப் புலப்படாத ஏதோ விஷயத்தில் தோல்வி ஏற்பட்டு, பல நூறு அல்லது பல ஆயிரம் குடும்பங்களுக்கு வேலை இழக்கச் செய்கின்றனர். இது ஏன்? பல பெரிய நிதி நிறுவனங்களில் பணம் செலுத்திய நடுத்தர வர்க்கத்தினர் ஏமாற்றப்படுகின்றனரே இது ஏன்? வியாபார நிறுவனங்கள் இன்று திடீரென்று வியாபாரம் இழந்து மூடி விடுகின்றனரே இது ஏன்? புதியதாக தன் கனவு வீட்டை கட்டியபின், கடன்பட்டு, தன் மனைவியின் உடல் நிலை, தன் தொழிலில் பாதிப்பு, பிள்ளைகளின் வளர்ச்சியில், கல்வியில் தடை, பெண் பிள்ளைகளின் செயலால் பெற்றோருக்கு அவமானங்கள் ஏற்படுகின்றது இது ஏன்?

நம்முடைய முதாதையர்கள் கூட வெற்றி பெற்றவர்களாக வாழ்ந்தார்கள். நாம் மட்டும் தோல்வியையே சந்திக்கின்றோமே! இது ஏன்? இன்றைக்கும் பல பெரிய நிறுவனங்கள் தொழிற்சாலைகள் கூட வெற்றிகரமாக நடைபெறுகின்றன. ஆரம்பத்தில் சிறிது தொல்லைகள் பட்டு பின்பு சரியாக நடைபெறுகின்ற தொழிற்சாலைகளும் உண்டு. இவைகள் அனைத்திற்கும் நாம் ஏன்? என்று கேட்போமேயானால் நமக்கு வாஸ்து சரியான பதிலை கூறுகின்றது. இன்றைக்கும் கூட பல வீடுகளில் தன்னுடைய மகனுக்குத் திருமணம் செய்யும் பொழுது, வருகின்ற மருமகளுக்காக சிறிது சௌகரியங்கள் வேண்டி வீட்டில் மாறுதல்கள் செய்கின்றனர். இது வாஸ்துப்படி சரியாக அமைந்தால் நல்ல மாறுதல்களையும், சரியாக அமையாவிட்டால் மோசமான விளைவுகளையும் ஏற்படுத்தி விடுகின்றது. இது மருமகள் வந்த வேளை என்று மூடத்தனமாக போற்றவோ தூற்றவோ செய்கின்றோம். நாம் சற்று சிந்தித்துப் பார்த்து, சரியான இடத்தில் சாத்திரப்படி தொழிற்சாலையை அமைத்து இருக்கின்றோமா? சரியான இடத்தில் தொழில் நிறுவனங்களை ஆரம்பித்துள்ளோமா? வாஸ்து பலமுள்ள இடத்தில் சாத்திரப்படி வீடு அமைத்துள்ளோமா? என்று சிந்திக்க வேண்டும். நாம் வீடுபேற்றை பெற வேண்டுமானால், முதலில் சரியான வீட்டை பெற்றபின்தான் நாம் நல்ல பெயரை பெற முடியும்.

கடந்த இதழில் தெரு தாக்கம் எனும் தெருகுத்தைப் பற்றித் தெரிந்து கொண்டோம். இந்த இதழில், மூலைகளை மூடுதல் அல்லது திசைகளை மூடுதல் பற்றி என் சிற்றறிவிற்கு எட்டிய அனுபவ வாயிலாக உணர்ந்த விஷயங்களை நாம் தெரிந்து கொள்வோம். இன்னும் பலர் வேலைக்காரர்களுக்காக வீடு மற்றும் கழிவு அறை அல்லது வாகனங்களுக்கான ஷெட் அல்லது சிறிய வெளிப்புற வீடு போன்றவற்றை வீட்டின் ஏதாவது ஒரு மதிற் சுவர் மூலையில் கட்டுகின்றனர். அநேகமாக வீட்டின் பின்புறமாகக் கட்டுகின்றனர். பின் வரும் படத்தின் வாயிலாக நாம் இதை நன்கு அறிந்து செய்து கொள்வோம்.

படத்தில் காட்டியுள்ளபடி ஒவ்வொரு மூலைகளையும் அதாவது வடகிழக்கு ஈசான்ய மூலை, தென் கிழக்கு அக்னி மூலை, தென் மேற்கு நைருதி




எனும் இராட்சச மூலை, வடமேற்கு வாயு மூலை ஆகிய மூலைகளை மூடி விடும் பொழுது அதன் நன்மை தீமைகளை அதன் வீட்டில் வசிப்பவர்களும், முடக்கப்பட்ட மூலையில் வசிக்கின்றவர்களும் அனுபவிக்கின் றனர்.

வடகிழக்கு ஈசான்ய மூலையின் அதிபதி ஈசன் என்பதனை நாம் நன்கு அறிவோம். இவர் கடவுளர்களின் அதிபதியும், நம் சந்ததிகளாகிய குழந்தைகளை போற்றி காப்பாற்றுபவர் என்றும் நாம் நன்கு அறிவோம். இந்த ஈசான்ய இடத்தை மூடி வடக்கு மற்றும் கிழக்கு சுவரைத் தொட்டுக் கொண்டு கட்டிடங்கள் கட்டுவது என்பது சிவன் சொத்து குல நாசம் என்ற பழமொழி போல் எல்லாம் நடந்துவிடும். இது கோயில் நிலத்தை அபகரிப்பதற்குச் சமம். இந்தக் குற்றத்திற்கு நாம் பெரிய அழிவையே சந்திப்பதுடன், கடவுளின் தண்டனையை நம்மால் தாங்கிக் கொள்ளவே முடியாது. முன்பே கூறியது போல் இம் மூலையில் கழிவு அறை, வெளிப்புற வீடு, கார் ஷெட் போன்றவை இருந்தால், நம் சந்ததிகளாகிய குழந்தைகளின் வளர்ச்சி, உடல் நிலை, கல்வி மற்றும் பொதுவாக குடும்பத் தலைவரின் வளர்ச்சி முழுவதுமாக பாதித்து விடும். ஈசான்ய மூலையை பரிசுத்தமாகவும், பவித்ரமாகவும், கட்டிடங்கள் ஏதும் போடாமலும், கீழ் நிலை நீர்த் தொட்டி அல்லது கிணறு அல்லது ஆழ் துளை கிணறு மட்டுமே அமைக்க வேண்டும்.

தென் கிழக்கு மூலையின் அதிபதி அக்னி பகவான் என்பது நமக்குத் தெரியும். இந்த அக்னி மூலையாகிய தென் கிழக்கு மூலையில் கிழக்கு மற்றும், தெற்கு சுவரைத் தொட்டுக் கொண்டு கண்டிப்பாக கட்டுமானப் பணிகள் இருக்கக் கூடாது. இப்படி நாம் கட்டினால் நாம் அக்னியுடன் விளையாடுவதற்குச் சமம். பெரிய மகன், பெரிய மகள், மனைவியின் உடல் நலம் பாதிக்கப்பட்டு அதிக மருத்துவச் செலவுடன், குடும்பத்தலைவன் கோர்ட், கேஸ், போலீஸ் என்ற பல தொல்லைகளை சந்திக்க நேரிடும். இந்த இடத்தில் கீழ் நிலை நீர்த் தொட்டி அல்லது கழிவு நீர்த் தொட்டி போன்றவை இருக்கக் கூடாது. கழிவு அறையைக் கட்டலாம். ஆனால் இதன் சுவர் தெற்கு சுவரை மட்டும் தொட்டுக் கொண்டு கிழக்கு சுவரைத் தொடாமல் இருக்க வேண்டும்.

தென் மேற்கு மூலையின் அதிபதி நைருதி என்னும் இராட்சதன் என்பதனை நாம் நன்கு அறிவோம். இந்த மூலையில் அதிகமான எடைகளைப் போட்டு தெற்கு மற்றும் மேற்கு சுவர்களை தொட்டுக் கொண்டும் வீட்டைத் தொடாமலும் அறைகளை அமைத்துக் கொள்ளலாம். இதன் மேல் அலுவலக அறை, படுக்கை அறை அதற்கு மேல் உயர் நிலை நீர்த் தொட்டி போன்றவற்றை ஏற்படுத்திக் கொள்வதால், அதிக நன்மைகளே விளையும். இந்த இடத்தில் அதிக வெற்றிடங்களை விட்டும் வீட்டின் நுழைவு வாசல் அமைத்தும் கழிவு நீர்த் தொட்டி அல்லது தொட்டுக் கொண்டும் கட்டுகின்ற பொழுது மனிதனுக்கு சொல்ல முடியாத துன்பங்களும் வியாதிகளும், தோல்விகளும் ஏற்படுகின்றது பெரியவர்களுக்கு இதய தாக்கம், பெரிய மகனை செயல் இழக்கச் செய்தல், சிறிய மகனுக்கு அடிக்கடி விபத்துக்குள்ளாகுதலும் ஏற்படும்.

✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳✳

**எங்கள் வீட்டு கிரைண்டரின் சில பாகங்கள் துருப் பிடித்து அசிங்கமாய் காட்சி அளித்தது. வேறு ஒன்றும் கோளாறு இல்லாததால் மாற்றவும் என் கணவர் விரும்பவில்லை. பிறகு உப்புத் தாளைக் கொண்டு நன்றாகத் தேய்த்துவிட்டு அலுமினிய கலர் பெயிண்ட் வாங்கி அடித்தோம். பளபளவென புத்தம் புதிய கிரைண்டராக மாறிவிட்டது.**

**— திராவிடமணி மேகநாதன்**






# தீபாவளியை முன்னிட்டு எல்லா ரகங்களுக்கும்

# 10% தள்ளுபடி

விரைவீர்!
அரிய வாய்ப்பினை
தவற விடாதீர்.

**ஸ்ரீ முருகன் சில்க் சென்டர்**

"V.K.K. காம்ப்ளெக்ஸ்", 73, ரங்கநாதன் தெரு,
(முதல் மாடி), தி. நகர், சென்னை - 17.

பால், சர்க்கரை, தேங்காய்த் துருவல் மூன்றையும் 1:1:1 என்ற விகிதத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும். பாலில் ஊறவைத்த பாதாம், முந்திரி, தேங்காய்த் துருவலுடன் நைசாக அரைத்துக் கொள்ளுங்கள். பால் கொஞ்சம் சுண்டியவுடன், அரைத்த தேங்காய் விழுதைப் போடவும். சிறிது நேரம் பொறுத்து சர்க்கரையும் போட்டு பாத்திரத்தில் ஒட்டாமல் வரும் வரையில் கிளறி, நெய் தடவிய தட்டில் கொட்டி, ஆறிய பின் வில்லை போடவும்.

— மஹிமா



வட மேற்கு மூலையாகிய வாய்வம் எனும் வாயு மூலையின் அதிபதி வாயு பகவான் என்பதனை நாம் முன்பே தெரிந்திருக்கின்றோம். காற்று இருந்தால் மட்டுமே நாம் உயிர் வாழ முடியும். மேற்கையும், வடக்கையும் தொட்டுக் கொண்டு இந்த மூலையில் கட்டிடம் அமைப்பது நம் மூச்சை நாமே அடைத்துக் கொள்வதற்குச் சமமாகும். மேலும் நம்முடைய குடும்பத்தின் வளர்ச்சி குன்றி நம் வாழ்வு தவிடுபொடியாகி விடும். பணம் இல்லாமல் திவாலாகும் நிலை ஏற்பட்டுவிடும். பலரை ஏமாற்றும் சூழ்நிலையும் ஏற்பட்டு விடும்.

இன்று தொழிற்சாலைகளையோ, தொழிற்கூடங்களையோ, வியாபார நிறுவனங்களையோ அல்லது புதிய வீடோ அல்லது வேறு ஏதாவது கட்டுமான பணிகளை செய்யும் பொழுதோ, நன்கு ஆலோசித்துச் செயல்பட வேண்டும். எல்லாம் செய்து முடித்து, நாலும் நடந்து முடிந்த பின்னால் நல்லது கெட்டது தெரிந்து கொள்வது மிகுந்த பொருள் நஷ்டம், மன உளைச்சலை ஏற்படுத்தும்.

சில கோடிகளையோ, பல லட்சங்களையோ செலவு செய்து கட்டுமான பணிகளைச் செய்வதற்கு முன், சில ஆயிரங்களைச் செலவு செய்து தேர்ச்சி பெற்ற வான சாஸ்திரம், மற்றும் ஜோதிட சாஸ்திரம் அறிந்த வாஸ்து வல்லுநர்களின் துணைக் கொண்டு கட்டுமானப் பணிகளைச் செய்தால், பின்னால் ஏற்படும் நஷ்டங்களையும், கஷ்டங்களையும் தவிர்க்கலாம். கட்டி முடித்த தொழிற்சாலை, வீடுகள் போன்றவற்றையும் வாஸ்து வல்லுனர்களை அழைத்து இதில் வாஸ்து தோஷங்கள், தெருதாக்கம், குத்து முதலியனவை அறிந்து அவர்களின் ஆலோசனையின் படி சரிசெய்து வரப்போகும் தொல்லைகளிலிருந்து தற்காத்துக் கொள்ளலாம். இன்று தற்காலத்திற்கேற்ப, கிரஹங்களை ஆராய்ந்து அறிந்த, வாஸ்து வல்லுனர்கள், அநேகர் இருக்கின்றனர். கட்டிடங்களைச் சரி செய்வது என்பது நம் கிரஹங்களில் கைவைப்பதற்குச் சமம். இதில் அதிக கவனம் செலுத்தப்பட வேண்டும்.

## பெண்களுக்கான வாஸ்து குறிப்புகள் :

1. ஈசான்யம் எனும் வடகிழக்கு மூலை மிகவும் பவித்ரமானதும், மென்மையானதும், பரிசுத்தமாகவும் வைக்க வேண்டிய இடமாகும். இது வீட்டின் சுற்றுச் சுவருக்கும், ஒவ்வொரு அறையின் வடகிழக்கு மூலைக்கும் பொருந்தும். இந்த இடத்தில் சீமாறு அல்லது துடைப்பான், குப்பைகள், காலணிகளை வைக்கக் கூடாது.

2. வீட்டில் துளசிச் செடியை வளர்க்க வேண்டும். இதை கிழக்கிலோ வடக்கிலோ அல்லது வடகிழக்கிலோ வைக்கலாம். இது மிகுந்த பலனைக் கொடுக்கும்.

3. பால் வடிகின்ற மரங்களையோ, செடிகளையோ, வீட்டில் வளர்க்கக் கூடாது. முக்கியமாக முட்செடிகளை வளர்ப்பது வீட்டில் வேதனைகளை வளர்ப்பதற்குச் சமம்.

4. வடக்கு, வடகிழக்கு, மற்றும் கிழக்கு திசை அறிவின் திசைகளாகும். படிக்கும் குழந்தைகளை இந்தத் திசைகளை நோக்கி அமர்ந்து படிக்கச் செய்தால், புத்திசாலித்தனத்துடன் கல்வியிலும் வாழ்விலும் முன்னேற்றம் அடைவார்கள்.

மேலும் விவரங்கள் அறிந்து கொள்ள, கோவை 0422-577907 லும், சென்னை 044-840084 லும் தொடர்பு கொள்ளலாம். என்னைச் சந்திக்க விரும்பினால் தொலை பேசியில் தொடர்பு கொண்டு நேரம் குறித்துக் கொண்டு வரும்படி வேண்டுகிறேன்.

(தொடரும்)

புதுக் குக்கர் காஸ்கெட் வாங்கியதும், பழைய காஸ்கெட்டைத் தூக்கி எறியாமல் ஃப்ரிட்ஜ்ஜில் ஃப்ரீசர் அடியில் உள்ள ட்ரேயில் போட்டு வைத்தேன். என்ன ஒரு ஆச்சரியம், ஆறு மாதம் கழித்து, மீண்டும் உபயோகித்ததில், மேலும் சில மாதங்கள் ஓடியது!

— ஜெயா



**தீபாவளியை நாம் குடும்பத்தோடு கொண்டாடுகிறோம். ஆனால் 'இவர்கள்? நல்ல நேரங்களில் குடும்பம் இல்லாத இவர்களையும் நினைத்து, நம்மால் இயன்றதைச் செய்யலாமே!**

"நல்லா படிச்சுட்டு டாக்டராகனும்னு ஆசை. அது முடியல்லேன்னாலும் நர்ஸாகவாவது ஆகனும்" என்றார் ஒன்பதாம் வகுப்பு படிக்கும் அமலோற்பவம்.

"வக்கீலா வரணும்னு ஆசை" - இது எட்டாம் வகுப்பு படிக்கும் சத்யா. ப்ளஸ் டூ படிக்கும் காமாட்சிக்கு 'சி.ஏ.'வாக விருப்பம்.

# இவர்களையும்

## நினைப்போம்!

இசைக் கல்லூரியில் பயிற்சி எடுத்துக் கொள்ளும் தனலட்சுமிக்கு சங்கீத வித்வானாக வேண்டுமாம் - எம்.எஸ். சுப்புலட்சுமி போல!

ஸ்டெனோவாக வேண்டுமென்பது லீலாவின் லட்சியம். இதற்காக செகரடேரியல் கோர்ஸ் படிக்கிறார். ராணிமேரிக் கல்லூரியில் ஹோம் சைன்ஸ் படிக்கும் கௌரிக்கு அதில் பட்டமேற்படிப்பு படிக்க ஆர்வம்.

மேலே குறிப்பிட்டவர்களின் லட்சியங்கள் வேறுபட்டவைதான். ஆனால் இவர்களை இணைக்கும் சோக இழை ஒன்று உண்டு. இவர்களெல்லாம் தங்கிப் படிப்பது அனாதை இல்லங்களில் என்பதுதான் அது.

சில தனிப்பட்டவர்கள் கருணை உள்ளத்தோடு அனாதைக் குழந்தைகளுக்குப் புகலிடம் கொடுப்பதை நாம் அறிவோம். மாநில அரசே அனாதை இல்லங்களை அங்கங்கே நடத்தி வருவது தெரியுமா?

சென்னையைப் பொறுத்தவரை வால்டாக்ஸ் சாலைக்கு அருகிலுள்ள ஒரு இடத்திலும், கொசப் பேட்டையிலும் இதுபோன்ற இல்லங்கள் இயங்கி வருகின்றன. அங்கு வசிக்கும் இளம் உள்ளங்களின் எண்ணங்களும், ஏக்கங்களும் எப்படி இருக்கும்? அவர்களது வாழ்க்கை முறை எப்படியிருக்கிறது? என்பதை அறிந்து கொள்ள அந்த இல்லங்களுக்குச் சென்றோம். அங்கேதான் கட்டுரைத் தொடக்கத்தில் குறிப்பிட்டிருக்கும் சிறுமிகளையும், மற்றும் இதுபோன்ற பலரையும் சந்தித்தோம்.

பெற்றோரில் ஒருவர் இறந்துவிட, மற்றவர் தங்கள் இயலாமை காரணமாக தங்கள் குழந்தையை இங்கே சேர்ப்பது உண்டு. அப்பா, அம்மா இருவரையுமே இழந்தவர்களும் இங்கு உண்டு.

தங்களின் வருங்காலக் கனவுகளைப் பற்றிக் கூறும்போது இவர்கள் கண்களில் ஒளி மின்னுவது உண்மைதான். அதே சமயம் தங்களது சூழல் புரிந்திருப்பதால் பொறுப்பாகவும், தங்கள் வயதை மீறிய பக்குவத்தோடும் இருக்க



வேண்டிய கட்டாயத்தையும் உணர்ந்திருக்கிறார்கள். "நான் பொறக்கறதுக்கு ரெண்டு மாசம் முன்னே அப்பா செத்துட்டாங்க. நான் பொறந்தவுடனேயே எங்கம்மாவும் செத்துட்டாங்க" என்று புன்னகையுடன் ஒரு மாணவி கூறினார்!

ஆனால் பாவம் அவர்களின் பலவீனமான





கணங்களையும் சந்திக்க நேர்ந்தது.

''எனக்குக் கலகலன்னு பேசத் தெரியாது. அதனாலே தோழிகள் யாருமே கிடையாது. இல்லத்திலே இருக்கிற வேறு சிலரைப் பார்க்க விசிட்டர்கள் வரும்போது "நமக்கு மட்டும் யாரும் இல்லையே''ன்னு...'' மேலே பேச முடியாமல் வார்த்



தைகள் தடைபட, வழியும் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள் ஒரு சிறுமி.

''என்னோட ஸ்கூல் சிநேகிதி ஒருத்தி தன்னுடைய அம்மா திட்டினாங்கன்னு மண்ணெண்ணெய் ஊத்திக்கிட்டு தற்கொலை செய்துக்கிட்டா. அதிலேயிருந்து மனசு ரொம்பக் கலக்கமா இருக்குது" என்றாள் இன்னொரு சிறுமி. கூடவே, "திட்டறதுக்காவது ஒரு அம்மா இருக்காங்களே தனக்குன்னு அவ ஏன் யோசிக்கல்லே?" என்று வருத்தத்தோடு முணுமுணுப்பு.

பொதுவாக இளம்வயதில் பள்ளி வாழ்க்கை பிடிக்காமல் இருப்பதும், பள்ளித் தோழர்களுடன் சிறு சிறு சண்டை வருவதும் சகஜம் தான். ஆனால் மற்ற குழந்தைகள் "எப்போடா பள்ளி முடியும்?" என்று காத்திருந்து வீட்டிற்கு ஓடி வந்து மாறுபட்ட சூழலில் ஆறுதலடைவது முடியும். ஆனால் இவர்களுக்கு அந்த சௌகரியம் கிடையாதே.

பாதுகாப்புக் கோணத்தில் இந்தச் சிறுமிகள் பள்ளிக்கூடத்தைத் தவிர வேறெங்கும் அனுப்பப்படுவதில்லை. பள்ளியின் கோடை விடுமுறை நாட்களில் கூட இரு பெற்றோரையும் இழந்தவர்கள் இங்கேயே தங்கவேண்டிய கட்டாயம்.

தங்கள் வாழ்க்கை முறையை ஏற்கப் பழகிவிட்டது போல்தான் தோற்றமளிக்கிறார்கள். தங்கள் தினசரி ரொட்டீனில் ஏதாவது பிரச்னை என்றால் மேற்பார்வையாளரைக் கேட்டு முடிந்த நிவாரணத்தைத் தேடிக் கொள்கிறார்கள்.

காலையில் எளிமையான சிற்றுண்டி, மதிய உணவு, இரவில் ரசமும், சாதமும். மாதத்தில் சில நாட்களில் நன்கொடையாளர்கள் தயவு வைக்கும்போது மட்டும் இரவில் சாம்பார் உண்டு. அப்போது இவர்களின் முகப் பிரகாசத்தைப் பார்த்தால்தான் இந்த 'இரவு நேர சாம்பார், காய்கறி' என்பது இவர்களுக்கு எப்படிப்பட்ட அதிர்ஷ்டப் புதையல் என்பது புரியும்.

நம் வீட்டுக் குழந்தைகள் செய்யும், விவாதங்கள், முரண்டு பிடித்தல்கள், இவற்றை நினைத்துப் பார்க்கும்போது, இதுபோன்ற அனாதைக் குழந்தைகளின் கட்டுப்படுத்தப்பட்ட மன நிலையை மேலும் உணர முடியும்.

பவுடர், ரிப்பன், வளையல் இவையெல்லாம் இவர்களில் பலருக்கு 'வண்ணக் கனவுகள்'. அவ்வளவே. "அப்பா உயிரோட இல்லே. ஊரிலே வீட்டு வேலை செய்யும் அம்மா எப்பயாச்சும் நாலு மாசத்துக்கொரு தடவை எட்டிப் பார்ப்பாங்க. அப்போ கொஞ்சம் காசு கொடுப்பாங்க. அதிலேதான் இந்த ஸ்டிக்கர் பொட்டு வாங்கினேன்" என்று தனது சொத்துக் கணக்கை விவரித்தது ஓர் இளம் பிஞ்சு.

கொசப்பேட்டை இல்லத்தில் தங்கிப் படிக்கும் கல்லூரி மாணவி ஒருத்தி தொடர்ந்து வாட்டத்துடன் இருக்க, துருவிக் கேட்டபிறகு, "காலேஜிலே எல்லாரும் சுரிதார் போட்டுக்கிட்டு வராங்க. என்கிட்டே அப்படி ஒண்ணு கூட இல்லே'' என, அப்படியொரு புது உடையை வாங்கிக் கொடுக்க அரசு சட்டத்தில்

வழியில்லாததால் அந்த இல்லத்தின் மேலதிகாரி தன் மகளின் உடையிலொன்றை கொடுத்திருக்கிறார்.

இந்த இல்லங்களில் ஐந்தாம் வகுப்பு வரை சிறுவர், சிறுமியர் இருவரும் அனுமதிக்கப் பட்டாலும், அதற்குப் பிறகு சிறுமியருக்கு மட்டுமே அனுமதி. முன்பெல்லாம் பள்ளிப் படிப்பு வரைதான் என்ற நிலை சமீபத்தில் மாறியிருக்கிறது. கல்லூரிப் படிப்பு வரை இங்கேயே தங்கித் தொடரலாம் என்ற நிலை ஏற்பட்டிருக்கிறது.

சென்னை மாவட்ட சமூகநல அதிகாரியான ரோகிணி தேவி மற்றும் கொசப்பேட்டை இல்லத்தில் மேற்பார்வையாளரான மாலதி ஆகியோரை சந்தித்துப் பேசிய போது பல சோகக் கதைகளை அறிய முடிந்தது. அதே சமயம் இந்த இல்லங் களில் ஊழி யத்துக்கு அமர்த்தப் பட்டவர்களில் பெரும்பாலானவர்கள் 'புரிந்து கொள்ளும்' உணர்வோடு செயல்படுவதையும் அறிந்தோம்.

பெற்றோரை இழந்தாலும் வேறு உறவினர்களுக்குக் குறைவில்லை ஒரு



• ரோகிணி தேவி



• மாலதி

பெண்ணுக்கு. ஆனால் அவர்கள் எல்லாம் ஒரே ஒரு நிபந்தனையை விதித்தனர். ''வீட்டு வேலையைச் செய்துட்டு, போடறதை சாப்பிட்டு விட்டு சும்மா கிட. பள்ளிக்கூடம்னு எல்லாம் மூச்சு விடக் கூடாது" என்பதுதான் அது. படிப்பில் நாட்டம் உள்ள அந்தப் பெண்ணுக்கு இதை ஏற்க மனமில்லை. விஷத்தைக் குடித்து விட்டாள். பிறகு கருணை உள்ளம் கொண்ட சிலரால் காப்பாற்றப்பட்டு இந்த இல்லத்தில் சேர்க்கப்பட்டாள். இங்கே அவளைச் சேர்க்கும் போது கூட இந்த 'விஷ'யத்தைப் பற்றிச் சொல்லவில்லை. சேர்த்த சில நாட்களிலேயே அந்தப் பெண்ணின் குடல் பாதிக்கப்பட்டிருப்பது தெரியவர, டாக்டர் விசாரணையில் உண்மை வெளிப்பட்டிருக்கிறது.

வெளியுலக டீனேஜர்களிடம் அங்கொன்றும் இங்கொன்றுமாக காதல், ஒழுக்கமீறல் என்பது தலைகாட்டிக் கொண்டிருக்கும்போது, இந்த இல்லங்களில் வளரும் இளம்பெண்கள் வழிமாறாமல் இருக்கிறார்களா?

இருக்கிறார்களாம். ஐந்தாம் வகுப்பு வரை இல்லத்திலேயே வகுப்புகள். அதற்கு மேல் மாநகராட்சிப் பள்ளியில் கல்வி. இல்லத்தைச் சேர்ந்த பெண் உதவியாளர் ஒருவர் இந்தச் சிறுமிகளைப் பள்ளிக்கு அழைத்துச் செல்கிறார். பள்ளி விட்டதும் அவர்களை இல்லத்துக்கு அழைத்து வருவதும் இவரது வேலைதான்.

இத்தனை பின்னணிகளையும், ஏக்கங்களையும் அறிந்தபிறகு, "தீபாவளி போன்ற விசேஷ நாட்களில் இவர்களது ஏக்கங்கள் மேலும் அதிகரித்து விடுமோ?" என்ற சந்தேகம் தோன்றியது. எண்ணெய்க்குளியல், வடை, பாயசத்துடன் சாப்பாடு ஆகியவற்றை அரசு கவனித்துக் கொள்கிறது. புத்தாடை, பட்டாசுகள் – மூச்!

ஆனால் நல்ல வேளையாக சில நல்ல உள்ளங்கள் இந்தக் குறையையும் போக்க முன் வந்திருக்கின்றனவாம்.

"ஆர்.எஸ்.எஸ். அமைப்பைச் சேர்ந்த 'நல்



லோர் வட்டம்'கிற குழுவைச் சேர்ந்தவங்க நிறைய பேர் தீபாவளி அன்னைக்குக் காலையிலே எங்க இல்லத்துக்கு வந்துடுவாங்க. பஸ்ஸிலே ஏத்திக்கிட்டு ஒரு ஸ்கூலுக்குப் போவாங்க. பட்டாசு வெடிக்கச் சொல்லுவாங்க. மத்த நாட்களிலே கூட எங்களுக்குப் பாடங்களிலே ட்யூஷன் எடுக்கிறாங்க" என்றாள் ஒரு மாணவி நன்றிபொங்க.

உதவ வேண்டும் என்ற மனம் கொண்டவர்களுக்கு மார்க்கம்தானா இல்லை? வெளியிடங்கள் தயாரிக்கப்பட்ட உணவுப் பொருள்களை இவர்கள் அனுமதிப்பதில்லை. மற்றபடி உங்கள் விருப்பம்.

**— ஜி.எஸ்.எஸ்.**

*மாவட்ட சமூகநல அதிகாரி, 421, பாந்தியன் தெரு, எழும்பூர், சென்னை - 8. தொ. பே. 8253201; அரசு அனாதை இல்லம், 1, பொன்னப்பா சந்து, வால்டாக்ஸ் சாலை, சென்னை; அரசு அனாதை இல்லம், 35, சச்சிதானந்தம் தெரு, கொசப் பேட்டை, சென்னை - 12.*

சுவையுடனே ஆரோக்யம் !



சுவையான சமையல் எண்ணெய் ஆரோக்யமான
சமையல் எண்ணெய் இரண்டுக்கும் இடையில் இருந்த
இடைவெளி இனிமேல் இல்லை.
இனியா நல்லெண்ணெய் !
சுவையானது. ஆரோக்யமானது...
சமையலுக்கு மிகவும் உகந்தது !!



தயாரிப்பாளர்கள் :

**எவர்கிரீன்**
**எண்டர்பிரைசஸ்**
தபால் பெட்டி நெ. 504
ஈரோடு – 638 003

# இனியா
நல்லெண்ணெய்

ஸ்டாக்கிஸ்ட் விசாரணைகள் வரவேற்கப்படுகின்றன.



# வேண்டாமே இந்த அவசரம்!

சென்ற வாரம் பஸ்ஸிற்காக காத்திருந்த நான் சுற்றுமுற்றும் பார்வையை ஓட விட என் பார்வையில் பட்டாள் என் பள்ளித் தோழி ஜெயா. எதிரே வந்து நின்ற பஸ்ஸிலிருந்து இறங்கிய அவளைப் பார்த்து நான் கையசைக்கவும் அவள், என்னை நோக்கி விரைந்து வரவும் சரியாக இருந்தது. விரைந்து வந்த அவசரத்தில் கால் தடுக்கியதைக்கூட பொருட்படுத்தவில்லை அவள். ஆறு மாதங்கள் கழித்து அவளை இன்றுதான் சந்திக்கிறேன்.

"என்ன ஜெயா... இப்படி இளைச்சு, கறுத்து..."

"அதையேன் கேட்கறே. பி.பியாம். டாக்டர் டயட் அது இதுன்னு சொல்லி இப்போ இந்த உருவத்தில் வந்து நிற்கிறேன். நீ எப்படி இருக்கே? சரி, வரேன். வீட்டுக்கு ஓடணும். இட்லிக்கு ஊறவைச்சது காத்துக்கிட்டு இருக்கு. கண்டக் வேறே போகணும்."

என் பதிலுக்குக் கூட காத்திராதவளாய் கால் தரையில் பாவாமல் அப்படி ஒரு மின்னல் வேக நடை. அருகில் நின்று பேசிக் கொண்டிருந்தவள் தூரத்தில் ஒரு புள்ளியாய் மாறி மறையும் வரை, அவளைப் பற்றிய சிந்தனைகள் நெஞ்சில் நிழலாடியது. கொஞ்சம் கூட ஜெயா மாறவே இல்லை. எதிலும் எப்போதும் ஒரு அவசரம். தோளில் இறக்கை கட்டிக் கொண்டு பறக்காத குறைதான்.

பள்ளி நாட்களிலும் இப்படித்தான்.

அவசர அவசரமாய் எழுதுகிறேன் என்று ரெகார்டு நோட்டில் இங்க் கொட்டி, "என்னடி செய்யறது?" என்று என்னைப் பார்த்து விழித்த ஜெயா...

"பரீட்சைக்குக் கிளம்புகிற அவசரத்தில் ஹால் டிக்கெட்டை மறந்துட்டேன். வீடு பக்கத்திலேதானே இருக்கு. இதோ ஓடிப் போய் எடுத்துட்டு வந்துடறேன்" என்று பரீட்சைக்கு பத்து நிமிடங்களே இருக்கும் போது பஞ்சாகப் பறந்த ஜெயா...

கெமிஸ்ட்ரி பிராக்டிகலின் போது அவசரத்தில் ப்யூரெட்டைத் தட்டி உடைத்து விட்டு, அம்மாவிடம் திட்டு வாங்கிக் கட்டிக் கொண்டு களையாகப் பணத்தை ஃபைன் கட்டிய ஜெயா...

இப்படி அவள் எண்ணத்திலும், செயலிலும் எப்போதும் ஒரு அவசரம்... அவசரம்... அவசரம்...

"ஏய்... ஜெயா... பார்த்துமா. அவசரத்திலே மாப்பிள்ளை கழுத்திலே மாலையைப் போடறதுக்கு பதிலா புரோகிதர் கழுத்திலே போட்



டுடப் போறே..." எனக் கேலி செய்வோம்.

திருமணம் முடிந்து ஒரு குழந்தைக்குத் தாயான பிறகும் கூட, அவள் சுபாவம் மாறாமல் இருந்து கொண்டிருக்கிறது. விளைவு... இந்த முப்பது வயதிலேயே பிளட்பிரஷர், டயட் மற்றும் மருந்து மாத்திரைகள் புண்ணியத்தால் இளைத்து, கறுத்து ஆளே உருவம் தெரியாமல் இருக்கிறாள்.

ஜெயாவிற்கு மட்டுமல்ல, உங்களில் பலருக்கும் இந்த அவசரத்தன்மை சிறு வயதிலிருந்தே பழக்கமாகி , இரத்தத்தில் ஊறி, உங்கள் சுபாவமாகவே மாறி இருப்பதை உணர்ந்திருப்பீர்கள்.

167 வயது வரை வாழ்ந்து தற்போது சில மாதங்களுக்கு முன் மறைந்த ரஷ்யாகாரர் ஒருவரிடம் அவரது நீண்ட ஆயுளின் ரகசியத்தைப் பற்றி விசாரித்த போது அவர் சொன்னாராம் -

"நான் எதிலும் அவசரப்படுவதில்லை. எதற்கும் அவசரப்படுவதில்லை. இதனால்தான் மரணம் அடைவதற்கும் அவசரப்படாமல் இருக்கிறேன்."

எவ்வளவு யதார்த்தமான, சத்தியபூர்வமான வார்த்தைகள் இவை. அவசரப்படாமல் பொறுமையைக் கடைப்பிடித்து மன அமைதியுடன் வாழ்ந்தால் நீண்ட காலம் மனநிறைவுடன் வாழலாம் என்பதற்கு இந்தப் பெரியவர் ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

"பதறாத காரியம் சிதறாது."

"வேகம் விவேகமல்ல."

"அவசரப்பட்டால் அண்டாவிற்குள் கூட கை நுழையாது."

இந்தப் பழமொழிகள் எல்லாம் நீங்கள் அறிந்தவைதான் என்றாலும் நடைமுறையில் கடைப்பிடிக்க எண்ணுவதில்லை.

முதலில் அவசரபுத்தி என்றால் என்ன? என்று பார்ப்போம்.

'அவசரம்' என்றால் 'விரைவு' என்று பலர் எண்ணுகின்றனர். இது தவறு.

விரைவு உங்கள் வாழ்க்கைக்கு மிகவும் தேவையான ஒன்று. விரைந்து சுழலும் கால ஓட்டத்திற்குத் தகுந்தவாறு உங்கள் எண்ணங்களும், செயல்களும் விரைந்து செயல்பட வேண்டியது அவசியமே. நிதானத்துடன் கூடிய விரைவு உங்கள் வாழ்க்கைக்கு மிகவும் தேவை. ஆனால் பதற்றத்துடன் கூடிய அவசரம் உங்கள் வெற்றிகரமான வாழ்க்கைப் பயணத்திற்கு பெரும் முட்டுக்கட்டையாக விளங்கி, உங்கள் வெற்றியைத் தடைப்படுத்தும். அவசரப்படுவதால், பதற்றப்படுவதால் நீங்கள் வாழ்க்கையில் என்னென்ன இழக்கிறீர்கள் தெரியுமா?

அவசரப்படும்போது நீங்கள் முதலில் இழப்பது பொறுமையை. இதை உங்களில் பலர் அனுபவப்பூர்வமாக உணர்ந்திருக்கலாம்.

பஸ் ஸ்டாப்பில் பஸ்ஸிற்காக காத்திருக்கப் பொறுமை இருப்பதில்லை. பஸ் கிடைத்த பின்னும், பஸ் மெதுவாக ஓட, நீங்கள் இறங்கும் இடம் வர சிறிது நேரமானால் கூட, பொறுமை இருப்பதில்லை. மன சந்தோஷத்திற்காக சினிமா தியேட்டருக்குப் போனாலும், டிக்கெட் கிடைக்கும் வரை பொறுமை இருப்பதில்லை. டிக்கெட் கிடைத்து படம் பார்த்தாலும், படம் முடியும் வரையிலும் பார்க்கப் பொறுமை இருப்பதில்லை.

இப்படி எதிலும் பொறுமையற்ற, பதற்றத் தன்மை முதலில் பழக்கமாக ஆரம்பித்து, பிறகு நாளடைவில் உங்கள் சுபாவமாக மாறி, உங்கள் வாழ்க்கையுடன் பின்னிப் பிணைந்து விடுகிறது.



அடுத்து அவசரப்படும் போது நீங்கள் இழப்பது விலைமதிக்க முடியாத நேரத்தை. அவசரப்படும் போது ஒரு காரியத்தை நம்மால் சிறப்பாகச் செய்ய முடிவதில்லை. பதறி, சிதறி, அந்தக் காரியத்தை அவசரப்பட்டுச் செய்யும் போது, திருப்தி ஏற்படாமல் திரும்ப இரண்டாம் முறையாகச் செய்கிறோம். சமயங்களில்

# குழந்தை இல்லையா?

## கருப்பை கட்டிகள்-மாதவிடாய் கோளாறா?



### எமது சிகிச்சையால் பலன் பெற்றவர்கள்

Mrs. A சத்ய பாமா (24), 26-பி, கோவில் தெரு, காந்தி நகர், ஓரகடம், சென்னை-53. இவருக்கு நான்கு தடவை 3, 5, 7, மாதங்களில் தொடர்ந்து கரு சிதைவு ஆனது. ஒவ்வொரு முறையும் பல தீவிர சிகிச்சையால் தடுக்க முடியவில்லை. எமது சிகிச்சைக்குப்பின் கருவுற்று எந்த கஷ்டமும் இன்றி அழகிய ஆண் குழந்தையை பெற்றுள்ளார். இது போன்று பல கோளாறுகள் நீங்கி பலனடைந்தோர் எண்ணற்றோர்.

✱ **கருப்பை கட்டி- குழந்தை பெற்றவர்:** Mr.N.R. பார்த்தசாரதி (36) இவர் மனைவி பத்மஜா (31), 17, லட்சுமி நாராயணன் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை - 33 கருக்கோளம் மற்றும் இணைப்பு குழாயில் பெரிய கட்டி இருந்து 8 Gynaecologistகள் முயன்றும் குழந்தை பேறு கிட்டவில்லை. எமது சிகிச்சையில் கட்டி கரைந்தது. இப்போது ஒரு ஆண் குழந்தைக்கு தாயாகி உள்ளார். இதுபோல **Dr. RATHNA, M.B.B.S.,** சென்னையில் ஒரு பிரபல மருத்துவமனையைச் சேர்ந்த டாக்டரான இவரும் எமது குருமருந்து சிகிச்சைக்குப்பின் கருவுற்றிருக்கிறார். ✱ **கருப்பைக் கட்டி கரைந்தது:** (Fibroid) Miss. திலகம் (39) கிழக்கு தாம்பரம், சென்னை-59. இவருக்கு கருப்பையினுள் 5.1cm. கட்டி (Fibroid) இருந்தது. எமது சிகிச்சைக்குப் பின் கட்டி முழுதும் கரைந்துவிட்டது U.S. Scan மூலம் உறுதியாகி உள்ளது.

### திருமணமாகி 5-6 ஆண்டு ஆகியும் குழந்தை இல்லையா?

### அப்படியானால் உங்கள் பிரச்சினை இவைகளாகத்தான் இருக்க வேண்டும்!

1) ஆர்மோன் ஒழுங்கீனம் காரணமாக தாறுமாறான ரத்தப்போக்கு. 2) கருப்பான கட்டிகளாக அதிகமான ரத்தப்போக்கு. 3) கருக்கோளங்களில் கட்டிகள் - PCOD (Poly Cystic Ovarian Diseases) குழந்தை இல்லாத பெண்களில் 70% பேரின் பிரச்சனை இதுதான்! இதனால் மாதவிடாய் நாட்கணக்கின்படி வருவதில்லை. முட்டை (Follicle) உற்பத்தி தடைபட்டு மாத்திரை சாப்பிட்டால் மட்டுமே மாதவிலக்கு ஏற்படுவது இல்லாவிட்டால் 2 - 3 மாதம் ஆனாலும் வருவதில்லை. சிலருக்கு 13 - 14 வயதிலேயே இந்தப் பிரச்சினை ஆரம்பித்து விடுகிறது 4) கருப்பையினுள் கட்டிகள் புண்கள் (Fibroid Polyp, Cyst, Endometriosis, Cervicitis) குழந்தை பெறுமுன்பேகூட பல பெண்களுக்கு கட்டிக்காக கருப்பையை எடுத்துவிட வேண்டிய நிர்ப்பந்தம். 5) கருக்குழலில் அடைப்புகள்-(Fallopian Tube Block) இதற்கு ஆபரேஷன் செய்வதால் கருக்குழலே சேதமடையும் வாய்ப்பு அதிகம். 6) 3-வது, 4-வது மாதத்தில் தொடர்ந்து கருச்சிதைவு (Missed Abortion) முழு ஓய்வில் இருந்தாலும் கூட இதை தவிர்க்க முடிவதில்லை. நவீன மருத்துவத்தில் இது புரியாத புதிர்! கருப்பை கோளாறுகளுக்கும், குழந்தை இல்லாத குறைபாடுகளுக்கும் பொதுவாக ஒருசில ஆர்மோன் மாத்திரைகளே பல பெயரில் தயாராகி வேறு வேறு மருந்துகள் போல தரப்படுகின்றன. ஓரிருமுறை சாப்பிட்டு பலனின்றியும் அதையே பல ஆண்டுகள் சாப்பிடுவதால் எளிதில் கருத்தரிக்கும் இளம் வயதுதான் வீணாகிறது என்பதை பலர் உணரவில்லை.

**உயிரணு இல்லாத ஆண்கள்:** (Azoospermia) ஆண்களின் குறைபாடுகளில் மிகவும் சிக்கலானதும் பிறரிடம் உயிரணு பெறுதல் அல்லது தத்து எடுத்தல் இரண்டு மட்டுமே தீர்வு என்று கருதப்படும் இந்த கோளாறுக்கு வெற்றிகரமான சிகிச்சை எம்மிடம் உண்டு. இதற்கு வெறும் விந்து பெருக்கும் மருந்துகள் எத்தனை ஆண்டு சாப்பிட்டாலும் பலன் இல்லை. மிக சமீபத்தில் பலன் அடைந்தவர் Mr. சத்யநாராயணா, அயனாவரம், சென்னை-23. Apollo Hospital சோதனை மூலம் இது உறுதியானது.

இந்த குறைபாடுகள் நீங்கி குழந்தை பேறு பெற வேண்டுமா? உங்களுக்கு உதவ 180 ஆண்டு பாரம்பரிய அனுபவம் பெற்ற சித்தர் மருத்துவ சிகிச்சை அளிக்கிறோம். ஒவ்வொரு கோளாறுக்கும் தனித்தனி சிறப்பு மருத்துவம் உண்டு!

சோதனைக்கு பெண் மருத்துவர் உண்டு. வெளியூர் நோயாளிகள் மருந்து பெற்றுக்கொண்டு உடன் திரும்பிவிடலாம்.



**Dr. S. JEYARAM,**

M.A., M.A., PRAVEEN, HIMP, RMP

**நவோதயா சித்தர் மருத்துவமனை**

[illegible] ஆற்காடு ரோடு (மாடியில்)

கோடம்பாக்கம், சென்னை - 600 024.

(லிபர்டி பஸ் ஸ்டாப் / சேகர் எம்போரியம் அருகில்)

போன் : 044-4810752 / 044-8551258 (வீடு)

தபால் / போன் / நேரில். தேதி-நேரம் குறித்துக் கொண்டுதான் வர வேண்டும்.

### இளம்பெண் மார்பக கட்டி கரைந்தது!

Miss. சசிகலா (20) பண்ருட்டி, செங்கை MGR மாவட்டம் இவருக்கு இடப்புற மார்பினுள் 1.5 செ.மீ. அளவு இருந்த கட்டி (Fibro Adenoma) எமது சிகிச்சையில் முழுவதும் கரைந்து விட்டது. இதுபோல் இம்மாதம் இன்னும் 2 பேர் நலம் பெற்று உள்ளனர். (திருமணம் ஆகாத பெண் ஆகையால் முழு முகவரி வெளியிட முடியவில்லை).

பெண்கள் மார்பகத்தில் குத்தல், வலியுடனோ வலி இல்லாமலோ ஒருவித கட்டி (Fibro Adenoma) வருவதுண்டு. இது ஆபரேஷன் செய்தாலும் மீண்டும் மீண்டும் வரும். இதை கரைத்துவிட சரியான மருத்துவம் இல்லாமல், மாதாமாதம் Check-up செய்து கொண்டு வருபவர் பலர். எமது சிகிச்சையில் எளிதாக குணம் பெறலாம். பயத்துடன் நாட்களை கடத்த வேண்டாம்.

ஆலோசனை நேரம் : காலை 10 முதல் 2 மணி வரை, மாலை 4 முதல் 8.30 மணி வரை, ஞாயிறு காலை மட்டும்

நவம்பர் 16-ல் கோவையில் டாக்டரை சந்திக்க, 15-ந்தேதிக்குள் முன் பதிவுக்கு கடிதம் எழுதுக / போன்: 440235 (P.P.) (11 a.m. to 5 p.m.)

நவம்பர் 17-ந்தேதி, டாக்டரை திருச்சி-1, ஜங்ஷன் ரோடு, திருவள்ளுவர் பஸ் நிலையம் அருகில், ஹோட்டல் அருந்ததியில் சந்திக்கலாம்.

**எலக்ட்ரானிக் சுவர்க் கடிகாரங்களின் உள்பகுதியை பாதுகாக்க....**



**எலக்ட்ரானிக் சுவர்க் கடிகாரங்களின் பேட்டரியை மாற்றும் பொழுது, உள்பக்கம் அந்துப் பூச்சிகளின் அட்டகாசம் தாங்க முடியாததாக இருந்தது. இரண்டு, மூன்று அந்துருண்டைகளை உள்பக்கம் வைத்து விட்டேன். இந்தத் தடவை பேட்டரி மாற்றும் பொழுது அந்துப் பூச்சிகளின் தொல்லையிலிருந்து விடுதலை.**

**- ஏ. உமா சந்தரி அரசு**

மூன்றாம் முறை, நான்காம் முறையாகக் கூடச் செய்து, கடைசியில் அந்தக் காரியம் தோல்வியில் முடிந்ததைக் கூட, உங்களில் பலர் அனுபவத்தில் உணர்ந்திருப்பீர்கள். இங்கு காலம் மட்டும் வீணாவதில்லை. உங்கள் சக்தியும் விரயமாகிறது. மனஅமைதியுடன் பொறுமையாகச் செய்யும் போது முதல் தடவையிலேயே அந்த வேலை எளிதாக, அழகாக, மனநிறைவுடன் முடிந்து விடுகிறது. நாம் எவ்வளவுக் கெவ்வளவு ஒரு காரியத்தில் அவசரப்படுகிறோமோ, அந்த வேலை அவ்வளவுக்கவ்வளவு தாமதப்படும் அல்லது தாமதப்படுவது போலத் தோன்றும்.

அடுத்து அவசரப்படுவதால் நீங்கள் இழப்பது ஆரோக்கியத்தை. சிலருக்குக் காலையில் எழுந்து பல் துலக்குவதிலிருந்து குளிப்பதில், உண்பதில், உறங்குவதில் என்று எல்லாவற்றிலுமே ஒரே அவசரம்தான். அவசரமாகப் பல் துலக்கி பல் வியாதிகளை வரவழைத்துக் கொண்டவர்கள் உங்களில் பலர் உண்டு. அவசரமாகக் குளித்தேன் என்று சுத்தமாகக் குளிக்காததால் தோல் வியாதிகளை வரவேற்றவர்கள் எத்தனை பேர்? அனுபவித்து உண்ணாமல், அவசர அவசரமாக அள்ளி விழுங்கி, வயிற்று உபாதைகளுடன் தினமும் போராடிக் கொண்டிருப்பவர்கள் உங்களில் எத்தனை பேர்? ஒவ்வொரு செயலையும் பதறிப் பதறி பதற்றத்துடன் செய்து, இரத்தக் கொதிப்பு மற்றும் இருதய நோயுடன் கைகுலுக்குபவர்கள் உங்களில் எத்தனை பேர்?

ஆக மொத்தத்தில் உங்கள் அவசரத்தால் உங்கள் ஆரோக்கியம் உங்களை விட்டுச் சொல்லாமல் கொள்ளாமல் வெகுதூரம் விலகிப் போய் விடுகிறது.

அடுத்து உங்கள் அவசரத்தால் உங்களுக்குத் திறமை இருந்தும், வாய்ப்புகளை இழக்கிறீர்கள். அவசரத்தில் தப்பும் தவறுமாக டைப் செய்து வேலையை இழந்தவர்கள் பலர். நுழைவுத் தேர்வின் போது திறமையும், தகுதியும் இருந்தும் அவசரத்தால் உளறிக் கொட்டி, வேலை வாய்ப்பை இழந்தவர்கள் உங்களில் பலர் உண்டு. நன்றாகப் படித்திருந்தும் அவசரத்தில் கேள்வியைச் சரியாகப் படிக்காமல், பதில் மாற்றி எழுதி மதிப்பெண்களை இழந்த மாணவர்கள் பலர் உண்டு.

இவையெல்லாம் கூட சரிப்படுத்தி விடக் கூடிய மாற்றி அமைத்து விடக்கூடிய இழப்புகள்தான். சிலர் தங்கள் அவசரத்தால் வாழ்க்கையையே தொலைத்து விட்டு துன்பத்திற்குள்ளாகின்றனர்.

"அவசரப்பட்டு கல்யாணம் பண்ணி, சாவகாசமாய் சங்கடப்படுகிறான்" என்று அக்கால பெரியவர்கள் ஒருசிலரைப் பார்த்துக் குறிப்பிடுவதுண்டு. அவசரக் காதல், அவசரக் கல்யாணம் என்று எதிலும் இன்றைய தலைமுறையினர் காட்டும் அவசரம், பிற்காலத்தில் அவர்களை மட்டுமல்ல அவர்களைச் சார்ந்தவர்களையும் சங்கடத்திற்குள்ளாக்கும் என்பதை ஏனோ சிந்தித்துப் பார்ப்பதில்லை.

சாலையில் நீங்கள் காட்டும் அவசரம் சாலை விபத்துக்களில் முடிவதைப் போல, வாழ்க்கையில் நீங்கள் காட்டும் அவசரம், உங்கள் வாழ்க்கையில் உங்களைப் பல்வேறு விபத்துக்களில் சிக்க வைக்கலாம்!

"என்ன? அதற்குள்ளாகவா கட்டுரையைப் படித்து விட்டீர்கள்!"

"அவரமாய்ப் படித்தேன்" என்கிறீர்களா?

இன்றிலிருந்தாவது உங்கள் சுபாவத்தை மாற்றிக் கொள்ளுங்கள். எதிலும் எப்போதும் அவசரப்படாதீர்கள்! அவசரப்படாமல், நிதானமாக உங்கள் வாழ்க்கைப் பாதையில் நீங்கள் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும், நிச்சயமாக உங்களை முன்னேற்ற திசைநோக்கி வழி நடத்தும்!

**- கீதா தெய்வசிகாமணி**

# உங்கள் கனவின் நிறைவு இக் கண்களில், சிறப்பான எதிர்காலம் உங்கள் கைகளில்.



## சில்ட்ரன்ஸ் கிஃப்ட் க்ரோத் ஃபண்ட்.

உங்கள் இன்றைய சிறிய ஆலோசனை, உங்கள் வாரிசின் நாளைய பிரகாசமான எதிர்காலம்.

யூடிஐயின் சில்ட்ரன்ஸ் கிஃப்ட் க்ரோத் ஃபண்ட்.

- 15 வயதிற்குள் உள்ள எந்த குழந்தைக்கும் நீங்கள் பரிசளிக்கலாம். குறைந்த பட்ச யூனிட்டுகள் 200 (ரூ. 2000/-) இதற்குப் பிறகு 100 யூனிட்டுகளின் மடங்கில் (ரூ. 1000/-).
- வருடத்திற்கு 14% டிவிடெண்டின் உத்தரவாதம்
- 3 வருடங்களுக்கொருமுறை போனஸ் டிவிடெண்ட்.
- அறிவிக்கப்பட்ட டிவிடெண்ட் திரும்ப முதலீடு செய்யப்பட்டு உங்கள் பரிசு கூட்டு வட்டியுடன் வளர்கிறது.
- 18 வயதிற்குப் பிறகு பரிசு பெற்ற குழந்தை வருடத்திற்கு இருமுறை பணத்தை எடுக்கலாம். மீதமுள்ள தொகை பரிசு பெற்றவர் 21 வயதாகும் வரை வளர்ந்து கொண்டே போகும்.

சில்ட்ரன்ஸ் கிஃப்ட் க்ரோத் ஃபண்ட். உங்கள் கண்மணி என்றும் உங்களை நினைவில் வைத்திருக்க உதவும்.



**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**

உங்கள் மேலான எதிர்காலத்திற்கு

மியூச்சுவல் ஃபண்ட் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யப்படும் எல்லா முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்க்கிற்கு உட்படுபவையாகும். NAV-ன் ஏற்ற தாழ்வுகள் ஷேர் மார்க்கெட்டில் நிலவும் காரணங்களுக்கேற்ப மேலேயோ கீழேயோ போகலாம். கடந்த கால சாதனை வருங்கால நிலவுகளை அறிகுறி அல்ல. சில்ட்ரன்ஸ் கிஃப்ட் க்ரோத் ஃபண்ட் என்பது திட்டத்தின் பெயர் மட்டுமே தவிர திட்டத்தின் தரத்தையோ, வருங்கால வளர்ச்சி அல்லது லாபத்தையோ குறிப்பிடவில்லை. திட்டத்தின் குறிக்கோள்களை அடையும் உத்தரவாதத்தையும் அளிக்கவில்லை. முதலீடு செய்வதற்கு முன் ஆஃபர் டாகுமெண்ட்டை கவனமாக படிக்கவும்.

SISTA SAATCHI & SAATCHI-147/96 B TAM A2

• ஜெயஸ்ரீ பாலகிருஷ்ணன்

# அன்றாடம் நாம் பயன்படுத்தும் பைகள்தான் எத்தனை?





**ந**ம் அன்றாட வாழ்க்கையில் (எந்தக் காலத்திலுமே) இன்றியமையாத ஒன்று பைகள். சாதாரண துணி பைகளில் நம் உடமைகளை, நாம் வாங்கியவைகளை வைத்துக் கொண்டு சென்ற நாட்கள் மாறி இன்று டிராவல் பேக், ஷாப்பிங் பேக், டாய்லட் பேக், லஞ்ச் பேக், ஹேண்ட் பேக் என பல பெயர்கள் பெற்று நம் வாழ்க்கையுடன் ஒன்றிப் போய்விட்டன இவைகள். அதிலும் பெண்களின் 'ஹேண்ட் பேக்' அவசியத்துக்கு மட்டுமின்றி அவர்களின் வசதியையும் காட்டும் வகையில் பயன்படுத்தும் நிலை. புடைவைகளின் நிறம், உடுத்தும் நேரம், கலந்து கொள்ளப் போகும் பார்ட்டி/பங்ஷன்களுக்கு ஏற்ப இவைகள் அமைகின்றன.

"வாங்கி 3 மாதம்தான் ஆகுது. ஆனா அதுக்குள்ளே ஜிப் போச்சு இத்தனைக்கும் நான் இதுலே ஒரு சின்ன லஞ்ச் டப்பியும் ஒரு குட்டி வாட்டர் பாட்டிலும்தான் வைக்கிறேன்". இப்படி அங்கலாய்ப்பவர்கள் நம்மில் எத்தனை பேர்? 'ஆபீஸ் செல்லும் போது எங்களுடைய தேவைகளை வைத்துக் கொள்ள ஒரு நல்ல பை வேண்டாமா? ஹேண்ட் பேக் என்பது பெண்களுக்கு மட்டும்தானா?' - என ஆண்கள் மட்டும் கேட்க மாட்டார்களா? - இப்படி பலதரப்பட்டவர்களின் தேவைகளையும் பூர்த்தி செய்யும் வகையில் பல வகைப்பட்ட பைகளைத் தயாரிக்கும் திருமதி. ஜெயஸ்ரீ பாலகிருஷ்ணன் அவர்களைச் சந்தித்தோம்.

"நான் பிறந்து வளர்ந்தது படித்தது எல்லாமே பம்பாயில்தான். எனக்குப் படிக்கும் காலத்திலேயே கைவேலைகள் மற்றும் தையல் வேலைகளில் ஆர்வம் அதிகம். இதில் அப்போதே பயிற்சிகள் எடுத்துக் கொண்டேன். திருமணமான பின்புதான் சென்னை வந்தேன். என் பிள்ளைகள் ஓரளவு வளர்ந்து பள்ளி செல்ல ஆரம்பித்த பின்பு பகல் வேளைகளை வீணாகக் கழிப்பதற்கு பதில் பயன் தரும் வகையில் ஏதாவது செய்யலாமே என்ற எண்ணத்துடன் இப்படி பைகள் தயாரிக்க ஆரம்பித்தேன். முதலில் நான் தயாரித்ததே 'சாரி பேக்'. பட்டு மற்றும் காட்டன் வகைப் புடைவைகளை நாம் நன்கு 'அயர்ன்' செய்து பீரோவில் வைக்கிறோம். ஆனாலும் அவை கசங்கித்தானே போகிறது? மிகவும் அவசரமாக வெளியே செல்ல எண்ணி அவைகளை எடுத்துப் பார்த்தால்.... எத்தனை கசங்கல்?



இப்படி இஸ்திரி செய்து புடைவைகளை அவை கசங்காதபடி அடுக்கி வைத்து ஜிப் போட்டு மூடி வைக்கும் பைதான் 'சாரி பேக்' (Saree Bag). புடைவைகளின் நிறத்தை வெளியிலிருந்தபடியே (See through - வில்) பார்த்து விரும்பும் புடைவைகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள முடியும் வசதியும் இதில் உண்டு. 7 பட்டுப் புடைவை அல்லது அதற்கு ஈடான காட்டன் புடைவைகள் இதில் வைக்கலாம். இந்த சாரி பைகளில் அடுக்கிய புடைவைகளை அப்படியே பெட்டியில் வைத்தெடுத்துக் கொண்டு பிரயாணமும் செல்லலாம். அல்லது ஹாங்கரில் மாட்டி தொங்கவிடவும் செய்யலாம்.

அதற்குக் கிடைத்த வரவேற்பைப் பார்த்து அடுத்து டிராவல் பேக்குகளிலும் பல விதங்கள் தயாரிக்க ஆரம்பித்தேன். அழுக்கு மற்றும் ஈரமான உடைகளைத் தனியே வைத்துக் கொள்ளும் வசதிகள் கொண்ட டிராவல் பேக்குகளும் செய்ய ஆரம்பித்தேன். பிறகு ஒவ்வொன்றாக வரும் கஸ்டமர்கள் 'இந்த மாதிரி இருக்கா, அந்த மாதிரி இருக்கா' எனக் கேட்க கேட்க என் பையின் வகைகளும் விரிந்தன....

டாய்லெட் பைகள் - இதில்



டபுள் டெக்கர் பைகள் உண்டு. கணவன் மனைவி இருவருமே ஆளுக்கு ஒரு பக்கம் தங்களின் டாய்லெட் சாமான்களை [illegible]களில் வைக்க முடியும்.

திருமணம், பெரிய விழாக்களில், பிரயாணங்களில் தவிர்க்க முடியாத ஒன்று செருப்புத் திருட்டு. டோக்கன் சிஸ்டம் இல்லாத இடங்களில் இந்தப் பிரச்னையை தீர்க்கும் வகையில் அமைக்கப்பட்டதுதான் செருப்பு மற்றும் ஷூக்களை வைப்பதற்காகத் தயார் செய்யப்படும் பைகள். இவைகளை தனியாகவோ அல்லது ஷூ ஒருபுறம், செருப்பு ஒரு புறம் என வைத்துக் கொள்ளும் வகையில் வடிவமைக்கப்பட்ட பைகளையும் உருவாக்குகிறேன்.

கைகுழந்தைகள் உள்ள பெண்களுக்கென குழந்தைகளின் துணிகள், பால் பாட்டில், மருந்துகள், விளையாட்டு சாமான்கள், பிஸ்கெட் போன்ற உணவுப் பொருட்கள், அவர்களுக்குப் போடும் பவுடர் இவைகளை வைப்பதற்கான தனித் தனி அறைகள் கொண்ட பை உண்டு எங்களிடம் - இதில் குழந்தைகள் ஈரமாக்கும் துணிகளை அதன் ஈரம் வேறு எதிலும் படாதவகையில் வைக்க தனியான அறை உண்டு என்பது இதன் சிறப்பு அம்சம்.

பிரயாணத்தின் போது நகைகளை அணிந்து செல்வது பத்திரமில்லாமல் போய்விட்ட காலம் இது. அதே சமயம் வெளியூர்களில் நடக்கும் கல்யாணம் போன்ற பெரிய விசேஷங்களுக்கு நகை நட்டுக்கள் இல்லாமலும் செல்ல முடியாது. அணிய வேண்டிய நகைகள் அனைத்தையும் அழகாக, பத்திரமாக எடுத்துச் செல்லும் வகையில் வடிவமைக்கப்பட்டதுதான் 'ஜுவல் பவுச்' பல சைஸ்களில் ஜுவல் பாக்ஸ்களும் உண்டு.

சாப்பாடு எடுத்துச் செல்ல உதவும் 'லஞ்ச் பேக்'களை அடியில் கேன்வாஸ் போட்டு உட்புறம் லேமினேட் செய்து தயாரிப்பதால் பையினுள் கொட்டி விடும் எந்தவிதமான உணவுப் பொருட்களையும் நன்கு சுத்தமாகக் கழுவி விடமுடியும். சூடாக எடுத்துச் செல்லும் வசதி கொண்ட லஞ்ச் பைகளும் உண்டு.

ஆண்களுக்கான ஆபீஸ் பைகளுடன், பர்ஸ், வாலெட்டுகள், குழந்தைகளுக்கான பள்ளிப் பைகளும் பல நிறங்கள் அளவுகளில் உண்டு. பள்ளி குழந்தைகளுக்காக 'டபுள் டெக்கர்' பைகள் தயாரிக்கிறோம். இவைகளில் சிற்றுண்டி, சிறு பென்சில் பாக்ஸ் இவைகளும் மறுபுறம் ஆண்கள் அணியும் ஆடை ஒரு செட்டும் வைக்க முடியும்.

பெண்களுக்கான கைப்பைகள் (அலுவலகம் முதல் பார்ட்டிகள் வரை பயன்படுபவை) பல விதம் ரூ. 100 முதல் ரூ. 400 வரை விலையில் தயாரிக்கிறோம்.

சாதாரணமாக பொழுதை நல்ல வழியில் செலவழிக்கத் துவங்கிய இந்தத் தொழிலுக்கு (எங்களின் பைகளுக்கு) கிடைத்த வரவேற்பைப் பார்த்து இதையே தொடர்ந்து பெரிய அளவில் செய்யத் துவங்கியதுடன் இதற்கு 'ஜேபி கிரியேஷன்ஸ்' எனப் பெயரிட்டு இதன் ஆபீஸ் ஏ-4, ஜவஹர் ஃப்ளாட், காரணீஸ்வரன் கோவில் தெரு, சாந்தோமிலும், ஷோரூமை: 120, ராயப்பேட்டை ஹைரோட் (லஸ்), மயிலாப்பூரிலும் அமைத்தோம்.

சாதாரணமாக நல்ல ஒரு ஜாக்கெட் துணியை எவர்சில்வர் பாத்திரங்களை வெற்றிலை பாக்குடன் தருவது போல - இங்குள்ள விதவிதமான பர்சுகளையும், பைகளையும் அவரவர்களின் வசதிக்கு ஏற்ப நவராத்திரி போன்ற நேரங்களில், திருமண விசேஷங்களிலும் பரிசுப் பொருளாகவும், நிறுவனங்கள் நடத்தும் மீட்டிங்களில் நினைவும் பொருளாகவும் கூட தர தகுதியானவை இவைகள் என்பதுடன் பெறுபவர்களுக்கு மிகுந்த பயனுள்ளவையாகவும் இருக்கக் கூடியவைதான் இந்தப் பைகள்.

மிக்ஸி, ஃப்ரிட்ஜ், கிரைண்டர், டீவி, கம்ப்யூட்டர் போன்ற வைகளுக்கான உறைகளை - ஆர்டரின் பேரில் நாங்களே வந்து அளவுகள் எடுத்து வீட்டின் நிறத்திற்கும் அவர்கள் விருப்பத்திற்கும் ஏற்ற வகையில் தைத்துத் தருகிறோம்" என்கிறார் ஜெயஸ்ரீபாலகிருஷ்ணன்.

**— வைதேகி தேசிகன்**



# வீட்டிலேயே கைவைத்தியம் செய்யலாம்!

"கைவைத்தியம்" என்பது பாரம்பரியம் மிக்க அற்புதமான நமது மருத்துவக் கலையாகும். இதுவே வீட்டு வைத்தியம் என்றும், பாட்டி வைத்தியம் என்றும் தமிழ் மருத்துவம் என்றும், சித்த வைத்தியம் என்றும் அழைக்கப்பட்டு நமக்கு மிகவும் பயன்பட்டு வந்த மருத்துவமாகும். இம் மருத்துவத்தில் பின் விளைவுகளோ, பக்க விளைவுகளோ இல்லாததோடு குறைந்த செலவில் நிறைந்த பலனையும் தரக் கூடியது. இதன் பயன் வாசகிகளுக்கும் கிட்டட்டும் என்ற விருப்பத்தில் திருச்சி தென்னூரில் பிரியா நர்ஸிங் ஹோம் நடத்தி வரும் பிரபல சித்த மருத்துவ நிபுணரும், ஜனாதிபதியின் கௌரவ சித்த மருத்துவ ஆலோசகருமான டாக்டர் இரா. கண்ணன் (போன் : 468567) அவர்களைக் கேட்டோம். இங்கு அவர் நம் வாசகிகளின் கேள்விகளுக்குப் பதில் அளிக்கிறார்.

## 1. பரிசு பெறும் கேள்வி

**கேள்வி :** என் தங்கை மாநிறம். அவளது முகம் பளிச்சென்று இருக்கும். இரண்டு மாதங்களாக அவளது முகம் மட்டும் கருத்து விட்டது. காரணம் என்னவென்று தெரியவில்லை. வெயிலில் அலைந்த காரணத்தினால் நிறம் மாறிவிட்டதா? இதற்கு வீட்டிலேயே என்ன கை வைத்தியம் செய்யலாம் டாக்டர்?

கே. சுபத்ரா தேவி, சென்னை - 81.

பதில் : பல காரணங்களால் முகம் கருமை நிறம் அடையலாம். ஏதாவது நோய் இருந்தாலும் கருமை நிறம் ஆகலாம். சிலருக்கு மருந்துகள் ஒவ்வாமையினாலும் அவ்வாறு ஏற்படலாம். சிலருக்கு வெயிலில் அடிக்கடி அலைவதால் வெயிலின் ஒவ்வாமையிலும் இவ்வாறு ஏற்படுவது உண்டு. இன்று பலர் கண்ட கண்ட செயற்கை அழகு சாதனப் பொருட்களை பயன்படுத்துகிறார்கள். இதனாலும் இவ்வாறு ஏற்படலாம்.

ஆகவே என்ன காரணத்தினால் முகத்தில் கருமை ஏற்பட்டுள்ளது என்று கண்டறிந்து சிகிச்சை செய்வதுதான் முறையானது. அதற்கு முன்பாக நீங்கள் வீட்டிலேயே பயன்பெற சில எளிய சிகிச்சை முறைகளை செய்து பார்க்கலாமே!

1. தினமும் காலையில் முகத்தை நன்கு கழுவி ஈரமில்லாமல் துடைத்து விட்டு பாலேட்டினை தடவி ஊற வைத்து பயற்றம் மாவு கொண்டு முகம் கழுவி வரலாம்.

* அம்சவல்லி டாக்டர் கண்ணனுடன்



2. வெள்ளரிச்சாறு, எலுமிச்சை சாறு சம அளவு கலந்து பூசி வரலாம்.

3. இந்திய மருத்துவ முறையிலுள்ள தயாரிப்பு மருந்தான குங்குமாதி லேபத்தைத் தடவி வந்தாலும் நல்ல பலன் தரும்.

## 2. பரிசு பெறும் கேள்வி

**கேள்வி :** எனக்கு வயது இருபத்தி மூன்று. நான் நன்றாக சாப்பிடுகிறேன். ஆனால் எனக்கு ஏப்பம் வருவதே இல்லை. படுக்கப் போகும் போது உணவு வாய்க்கு வருகிறது. இதற்கு என்ன காரணம்? அதற்கான எளிய சிகிச்சை முறைகளைக் கூறுங்கள் டாக்டர்?

பி. கமலா கண்ணன், சென்னை - 39.

**டாக்டர் இரா. கண்ணன்**






பதில் : நாம் உணவு உண்கின்ற போது அதுவும் குறிப்பாக அவசரமாக சாப்பிடுகின்ற போது காற்றையும் சேர்த்து விழுங்கி விடுகிறோம். உணவோடு காற்றும் இரைப்பையில் சேர்ந்து கொள்ளும். இவை தவிர இரைப்பையிலும், சிறு குடலிலும் அமில நீர்கள் சுரந்து உணவை சீரணிக்கும் போது வேதியியல் மாற்றங்களால் சில வாயுக்கள் உண்டாவதுண்டு. சில சமயங்களில் இரைப்பை நோய்களிலும், இரைப்பைகளில் உண்டாகும் அடைப்பின் காரணமாகவும் வாயு சேர்ந்து கொள்ளும். இவ்வாறு இரைப்பையில் சேரும் வாயுவானது ஏப்பமாக வெளி வருகிறது. இவ்வாறு ஏப்பம் வருவதால் வயிற்றுப்புசம், வயிற்று வலி, மூச்சுத் திணறல், நெஞ்சுக்குள் அடைப்பது போன்ற உணர்வு, வாந்தி ஆகிய தொல்லைகளிலிருந்து விடுபட்டு நன்மையை உண்டாக்குகிறது. ஆகவேதான் குழந்தைகளுக்குப் பாலூட்டிய பிறகு முதுகிலே போட்டுத் தட்டிக் கொடுத்து ஏப்பம் வந்த பிறகு படுக்க வைப்பது வழக்கம். ஆகவே உங்களுக்கு ஏப்பம் வரவில்லை என்றால் வாய்வுத் தொல்லை இல்லை என்று அர்த்தம்.

ஆனால் உங்களுக்குப் படுக்கப் போகும் போது உணவு வாயில் வந்து விடுகிறது என்றால் நீங்கள் சாப்பிட்ட உடன் படுக்கப் போகிறீர்கள் என்று அர்த்தம். ஆகவே நீங்கள் சாப்பிட்ட பின்னர் அதிக நீரையும் குடித்து உணவு செரிமானம் ஆன பின்னர் இரண்டு மணி நேரம் கழித்து தூங்கச் சென்றால் எந்தப் பிரச்னையும் வராது.

**கேள்வி : என்னுடைய நகங்கள் பொலிவிழந்து, நிறமிழந்து காணப்படுகின்றன. நகம் ஓர் அளவிற்கு மேல் வளராமல் வெடிந்து நிறைய சிராய்ப்புகள் உள்ளன. பெண்களின் நகங்கள் பராமரிக்கும் முறை ஏதேனும் உண்டா? நகப் பாலிஷ்கள் பயன்படுத்துவதால் பாதிப்பு ஏற்படுமா?**

**லஷ்மி ஸ்ரீநிவாசன், சென்னை - 24.**

பதில் : விரல் நகங்களில் வெள்ளைக் கோடுகள் மற்றும் புள்ளிகள் விழுவதற்கும், நகங்கள் பொலிவிழந்து காணப்படுவதற்கும் பல காரணங்கள் உண்டு. பொதுவாக சத்துக் குறைவினாலேயே இவ்வாறு ஏற்படலாம். அதுவும் குறிப்பாக சுண்ணாம்புச் சத்து, புரதச் சத்து, உயிர்ச் சத்துக்கள் குறைந்தால் இவ்வாறு தோன்றலாம். இக் குறைபாடு உள்ளவர்கள் அந்தச் சத்துக்கள் நிறைந்த உணவுகளை அடிக்கடி உணவில் சேர்த்துக் கொள்ள வேண்டும். குறிப்பாக பால், முட்டை, பட்டாணி, பருப்பு வகைகள், வெங்காயம், எல்லா வகையான கீரைகள், முள்ளங்கி போன்றவைகள் மிகவும் நன்மை பயக்கும். இந்தச் சத்துக்கள் அடங்கிய மருந்து, மாத்திரைகளையும் சாப்பிடலாம். ஆனால் அவைகளை விட உணவு மூலம் பெறும் சத்துக்கள்தான் சிறந்தது. மேலும் இவர்கள் ரசாயனக் கலவைகள் உள்ள டிட்டர்ஜென்ட் தூள்கள், மற்றும் ரசாயனப் பொருட்கள், அதிகமான ஈரத்தில் புழங்குவதைத் தவிர்க்க வேண்டும். மருதாணி போன்ற இயற்கை மூலிகைகளைப் பயன்படுத்துவது எப்போதும் நல்லது.

## 3. பரிசு பெறும் கேள்வி

**கேள்வி : எனது நெருங்கிய தோழி ஒருத்திக்குச் சில மாதங்களுக்கு முன் திடீரென்று முகத்திலுள்ள கன்னப்பகுதி, கண் இவைகள் ஒரு பக்கமாக இழுத்துக் கொண்டு விட்டது. சரியாகப் பேசவும் முடியவில்லை. சாப்பிடவும் முடியவில்லை. இது என்ன நோய் டாக்டர்? இதை, சித்த மருத்துவத்தால் குணப்படுத்த முடியுமா?**

**லலிதா பத்மநாபன், தஞ்சாவூர்.**

பதில் : இந்த முக வாதமானது ஆண், பெண் இரு பாலாரையும், எல்லா வயதினரையும் பாதிக்கும். இந்த முக வாத நோய் ஏற்படுவதற்கான காரணங்கள்.

1. வைரஸ் முதலிய தொற்றுக்களாலும்,
2. முகத்திலுள்ள ரத்தக் குழாய்கள்

பாதிக்கப்பட்டாலும்,

3. பலத்த அடிபடுதல், சில வகை விபத்துக்கள் முதலியவைகளாலும்,

4. அதிகமான குளிர்காற்று, பனிக் காற்று இவைகளால் முக நரம்புகள் தாக்கப்படும் போதும் இந்த முகவாத நோய் ஏற்படலாம்.

முக வாத நோயில் ஏற்படும் குறிகுணங்கள்:

இந்த முக வாத நோய் சில மணி நேரங்களிலேயோ, அல்லது ஓரிரவிலேயோ ஏற்படும். முகத்தில் வலியோ அல்லது காதைச் சுற்றிலும் வலியோ உண்டாகும். முகத்தில் பாதிக்கப்பட்ட பகுதிகளில் எந்த வித அசைவும் இருக்காது. நோயாளி தன் முகம் ஒரு பக்கம் கோணி இருப்பதை தானாகவோ, அல்லது தன் உறவினர்கள் மூலமோ கண்டு பிடிக்கலாம். முக வாதம் ஏற்படும் போது நோயாளி முகம் மரத்தது போல் இருப்பதாக அதாவது உணர்ச்சிக் குறைவு இருப்பதாகக் கூறுவார்.

சில சமயங்களில் பாதிக்கப்பட்ட நரம்புகள் வீங்கியும் முகத்தில் உணர்ச்சிக் குறைவு ஏற்படும். நுனி நாக்கும் பாதிக்கப்படுவதால் சுவை தெரியாது. சிலருக்கு நாக்கில் கூச்சம் இருக்கும். உமிழ் நீர் சுரத்தலும், கண்ணீர் சுரத்தலும் மிகவும் குறையும். வாய் ஒரு பக்கமாகக் கோணி வாயிலிருந்து உமிழ்நீர் கசியும். இது மாதிரி சூழ்நிலையில் சரியாகப் பேச முடியாது.

இம்மாதிரியான முக வாத நோய் ஏற்பட்டால் உடனடியாக சிகிச்சைக்கு வந்தால் நிச்சயமாக சித்த மருத்துவத்தால் குணப்படுத்த இயலும். அதற்காக நாள்பட்ட நிலையில் நோயாளி வந்தால் குணப்படுத்த முடியாதா? என நீங்கள் கேட்கலாம். அதற்கு முடியாது என்பதல்ல பொருள். சற்று கால தாமதமாகலாம். அவ்வளவுதான்.

முக வாதத்தினால் பாதிக்கப்பட்டு என்னிடம் சிகிச்சை பெற்று குணமான ஒரு பெண்மணி உங்களோடு தன் அனுபவத்தைப் பகிர்ந்து கொள்கிறார்.

"என் பெயர் அம்சவல்லி. எனக்கு இரண்டு மாதங்களுக்கு முன்பு திடீரென்று பகல் வேளையில் என் முகம், கன்னம், வாய் ஒரு பக்கமாக கோணி இழுத்துக் கொண்டு விட்டது. என் ஒரு பக்க கண்ணும் சரியாக மூட முடியவில்லை. பேச்சும் சரியாக இல்லை. திக்கித் திக்கிப் பேசும் நிலை உருவானது. நாக்கும் பாதிக்கப்பட்ட நிலையில் என்னால் சோறு சாப்பிடவோ, காப்பி, தண்ணீர் கூட குடிக்க முடியாமல் போனது. அப்படியே சாப்பிட்டாலும் பாதி வெளியே வந்து விடும். என்னமோ, ஏதோவென்று எனக்கு மிகவும் பயமாகி விட்டது. உடனே திருச்சியில் இருக்கின்ற எனது அம்மாவிற்குப் போன் செய்து விஷயத்தைக் கூறினேன். உடனே என் அம்மா ராணிப்பேட்டை வந்து என்னை திருச்சிக்கு அழைத்து வந்தார்கள். அம்மா என்னை டாக்டர். கண்ணனிடம் அழைத்துச் சென்றார்கள். அவர் என்னை பரிசோதித்துப் பார்த்து உங்களுக்கு வந்திருப்பது 'முகவாதம்'. நீங்கள் எந்தக் கவலையும் பட வேண்டாம் என்று கூறி எனக்கு சிகிச்சை அளித்தார். ஒரு மாதத்திலேயே எனக்கு நல்ல பலன் கிடைத்தது. மேலும் சில மாதங்கள் மருந்து சாப்பிட்டு இன்று முற்றிலும் குணமடைந்து என் முகம் கோணல் எல்லாம் மாறி மகிழ்ச்சியோடு இருக்கிறேன்."

இதிலே என்ன சிறப்பு என்றால் இவர் என்னிடம் நோய் தொடங்கிய உடன் வந்த காரணத்தினால் சிகிச்சை செய்வது எளிதாக இருந்தது. ஒரே மாதத்தில் எனது சித்த மருத்துவ சிகிச்சை மூலம் முற்றிலும் குணமாக்கினேன். மேலும் தற்போது அவருக்கு முகத்தில் எந்த பாகத்தில் பாதிப்பு ஏற்பட்டது என்று கூட சொல்ல இயலவில்லை. அந்த அளவிற்கு நம்முடைய சித்த மருத்துவம் சிறந்தது என்று சொல்ல வருகிறேன்.

---

**சித்ராவுக்குத் தீபாவளிக்கு 2 நாட்கள் முன்பு தபாலில் 100 ஸ்வீட்கள் கொண்ட பார்சல் வந்தது. அனுப்பியவர் பெயர் இல்லை. இரண்டு நாட்களாக மண்டையைக் குடைந்தும் யாரென்று புரியவில்லை. தீபாவளியன்று காலையில் வந்த பழைய கல்லூரி தோழி ப்ரீதிதான் தான் அதை முன்னதாக அனுப்பியதாகக் கூறினாள். "ஏன் இப்படிச் செய்தாய்?" என்று கேட்டபோது, "நான் இன்று நேரில் எடுத்து வந்திருந்தால் நீ நம் பழைய நட்பை மட்டும்தான் நினைத்துப் பார்த்திருப்பாய். இப்பொழுது இரண்டு நாட்களாக ஆராய்ச்சியில் உன் பழைய, புதிய சிநேகிதிகள் எல்லோரையுமே ஒருமுறை நினைவுபடுத்திப் பார்த்தாய் அல்லவா? அதற்காகத்தான் இந்த ஏற்பாடு" என்றாள் அந்தக் குறும்புக்காரி!**

**ஒரு கல்லூரி பழைய மாணவிகள் விழாவில் கேட்டது.**

**— எஸ். சரோஜினி**



# பொறுமையல்லவோ பெருமை தந்தது


• காந்தா தேவி


• மகேஷ் குமார்

குழந்தைகள் கல்வியிலோ, விளையாட்டிலோ, கலைகளிலோ சிறந்து விளங்கினால், 'ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும்' தாய்மார்களை நாம் பார்த்திருக்கிறோம். அதிலும் ஏதேனும் குறையுள்ள குழந்தையாக இருந்து அந்தக் குழந்தை ஏதேனும் சாதனை செய்யுமானால் அந்தப் பெருமைக்கு ஈடு இணையேது? என்று தன் அனுபவத்தை விவரிக்கிறார் ஓவிய, சிற்பக்கலைஞர் மகேஷ் குமாரின் தாய் திருமதி காந்தா தேவி சந்திரசேகர்.

"எனக்கு நான்கு மகன்கள். இரண்டாவது மகன்தான் மகேஷ் குமார். அவனுக்குக் காது கேட்காது. என்னுடைய முதல், மூன்றாவது மகன்கள் நன்கு படித்துச் சிறப்பாக இருக்கிறார்கள். நான்காவது மகனுக்கும் காது கேட்காத குறை. அடுத்தடுத்து பிள்ளைகள் பிறந்ததால் மூத்த மகனுக்கும் மகேஷ் குமாருக்கும் பதினான்கு மாதம்தான் வித்தியாசம் இருந்ததால் இருவரையும் சமாளிக்கக் கஷ்டமாக இருந்தது. காது கேட்காத காரணத்தால்தான் மகேஷ் முரண்டு பிடித்து, கோபமாக, பிடிவாதக்காரனாக இருக்கிறான் என்பதை மிகவும் தாமதமாகத்தான் கண்டுபிடிக்க முடிந்தது. அந்த சமயம் ஒரு பத்திரிகையில் குறையுள்ள குழந்தைகளுக்கான பேச்சுப் பயிற்சி பற்றிய கட்டுரை வந்ததைப் படித்துத் தெரிந்து கொண்டேன். சென்னை லிட்டில் ஃப்ளவர் கான்வென்ட்டிற்கு தினமும் அழைத்துப் போக ஆரம்பித்தேன். இதற்குள் அவனுக்கு ஆறு வயதாகிவிட்டது. நான்காவது மகன் ஸ்ரீதர் அப்போது இரண்டு மாதக் குழந்தை. இங்கிலீஷ் மீடியத்தில் மகேஷை சேர்த்துக் கொண்டனர். வளர்ந்து வரும் ஸ்ரீதருக்கும் காது கேட்காத குறை இருந்ததை ஏற்கெனவே இருந்த அனுபவம் காரணமாக விரைவில் புரிந்து கொண்டு இரண்டரை வயதிலேயே லிட்டில் ஃப்ளவர் பள்ளியில் சேர்த்தோம்."

இரண்டு குழந்தைகளையே இன்றைய பெண்களால் சமாளிக்க முடியாது என்ற நிலையில், இரண்டு நார்மல் குழந்தைகளுடன், இரண்டு குறையுள்ள குழந்தைகளையும் வைத்துக் கொண்டு சமாளித்ததுடன் மகேஷ் குமாரை சிறந்த கலைஞனாக்கியதற்கு அவர் எடுத்துக் கொண்ட முயற்சிகளும் கஷ்டங்களும் எத்தனை! எத்தனை என்று ஆச்சரியப்படுகிறோம்.

"நார்மல் குழந்தைகளுக்கும், இவர்களுக்கும் காது கேட்கவில்லை, கூப்பிட்டவுடன் திரும்பாததால் அவர்கள்





[illegible] வந்து [illegible]
என்பதால் உடல் சிரமம் என்பதுதான் வித்தியாசம். தனக்குத் தானே கழிவிரக்கம் கொண்டு அழுது புலம்புவதால் யாருக்கு என்ன லாபம்? நடந்து முடிந்ததை மாற்ற முடியாதல்லவா? மேற்கொண்டு நடப்பதைத்தான் யோசிக்க ஆரம்பித்தேன்.

வீட்டுக்கு வீடு வித்தியாசமான பிரச்னைகள் உள்ளது. எனக்கு இது போன்ற குறை என்று மனக்கவலையை மாற்றிக் கொண்டு செயல்பட ஆரம்பித்தேன். மற்ற இரு குழந்தைகளும் மிகவும் தொந்தரவு தராமல் நன்றாகப் படிக்க ஆரம்பித்தனர். வேளாங்கண்ணி பள்ளியில் படிப்பில் சிறந்த மாணவர்களாக இருந்தனர். இரண்டு குழந்தைகளை ஒரு பள்ளியிலிருந்தும், மற்ற இரண்டு குழந்தைகளை ஒரு பள்ளியிலிருந்துமாக அழைத்து வந்து ஒரே அலைச்சல்தான். என் முழு கவனத்தையும் குறையுள்ள குழந்தைகள் மீதே செலுத்த குடும்பத்தினர் பெரும் உதவியாக இருந்தனர்.

எனக்குக் கொஞ்சம் வரையத் தெரியும். வேலையாக இருக்கும் போது தொந்தரவு தராமல் இருக்க சாக்பீஸால் பிள்ளையார் படம் ஒன்றைப் போட்டுக் காண்பித்து மகேஷிடம் வரையச் சொல்வேன். வீடு முழுவதும் தரை, பேப்பர், சுவர் அனைத்திலும் வரைந்து தள்ளுவான். நிறைய படங்களைப் பார்த்து வரைவதில் அவன் ஆர்வமும், திறமையும் புலப்பட்டது. அவனுடனேயே பேசிக் கொண்டிருக்கச் சொல்வான். இராமாயணம், மகாபாரதம், தொலைக்காட்சியில் வரும் சினிமா, நாடகம் அனைத்தையும் விளக்கிச் சொல்வேன். மிகவும் ஆர்வத்துடன் கேட்பான். ஆறாம் வகுப்பு முதல் பத்தாம் வகுப்பு வரை அடையாறு செயிண்ட் லூயிஸ் பள்ளியில் படித்தான். புத்திசாலியாகவும் படிப்பிலும் வரைவதிலும் மிகவும் சிறந்து விளங்கியதால், ஓவியக் கல்லூரியில் ஓவியமும் சிற்பக் கலைக்கான சிறப்பு கோர்ஸ், ஐந்து வருடம் (BFA) 92 ஆம் வருடம் முதல் வகுப்பிலும் [illegible]



மகேஷ் குமாரும் சரி, ஸ்ரீதரும் சரி, தாழ்வு மனப்பான்மையுடன் கூனிக்குறுகாமல் அனைவரிடமும், உறவினர்களிடமும், வீட்டுக்கு வருபவர்களிடமும் சைகை மூலம் பேசி மகிழ்வார்கள். ஸ்ரீதருக்கு பிஸினஸில் ஆர்வம் உள்ளதென்பதாலும், உடல் நிலை காரணமாகவும் பத்தாம் வகுப்புடன் நிறுத்தி விட்டோம். மகேஷ் குமாருடன் சேர்ந்து பிஸினஸ் செய்ய ஏற்பாடு செய்யலாமென்று திட்டமிட்டுள்ளோம். இவர்கள் இருவரின் முன்னேற்றத்துக்கும், நல்வாழ்வுக்கும் இரண்டு அண்ணன்களும் தயாராக இருப்பது நாங்கள் செய்த பாக்கியம்'' என்கிறார் உணர்ச்சி பூர்வமாக!

"தாழ்வு மனப்பான்மையின்றி குழந்தைகள் வளர வேண்டுமானால் அதற்கான முதல் பயிற்சியாகப் பெற்றோர் தங்கள் மனதை மேம்படுத்திக் கொள்ள வேண்டும் இல்லையா? எல்லோருக்கும் நல்ல

திடமான, ஆரோக்கியமான குழந்தைகள்தான் பிறக்க வேண்டும் என்று நம் மனம் பிரார்த்தனை செய்தாலும், ஒருவேளை குறையுள்ள குழந்தைகள் பிறந்தால் அவர்களை பண்புள்ள, சிறந்த, பெருமைமிக்க எடுத்துக்காட்டான பிள்ளையாக வளர்க்க முயன்று வெற்றி பெற்ற நீங்கள் மற்றவர்களுக்குக் கூறும் அறிவுரை என்ன" என்று கேட்டோம்.

"முதலில் தாய்க்குப் பொறுமை என்பது மிகமிக வேண்டும். இது போன்ற குழந்தைகளின் பிடிவாதமும், முரட்டுத்தனமும் மெதுவாகத்தான் குறையும். இவர்களை வெளியில் அழைத்துப் போவதை அவமானமாக நினைக்காமல் நாள், விழாக்கள் நெருங்கிய உறவினர் வீட்டுத் திருமணங்கள், கண்காட்சி என அழைத்துப் போவேன். கௌரவக் குறைச்சல் என்ற எண்ணத்துடன் குழந்தைகளை வீட்டில் விட்டுவிட்டு செல்லும் பெற்றோருக்கும் இந்தக் குழந்தைகளுக்கும் பெரிய இடைவெளியே ஏற்பட்டுவிடும்.

பாசமும் நேசமும் குறைந்து, அன்பு கிடைக்காது ஏங்கும் அம்மலர்கள் மனநோயாளியாகிவிடும் அபாயமும் உள்ளது. நிறைய கண்காட்சிகளுக்கு அழைத்துச் சென்று இருவரும் அதுபற்றி கலந்து பேசுவோம். அதனால் மிகச் சிறந்த விமர்சிகனாகவும் இருக்கிறான். 'வெளிப் பார்வைக்குப் பளபளவென இருப்பதை நன்றாக இருப்பதாக ஒத்துக் கொள்ள முடியாது. கலைக் கண்ணோட்டத்துடன் பார்த்தால் தவறு உள்ளது' என்று சுட்டிக் காட்டுவான். நார்மல் குழந்தைகளைப் போல் நடத்துவதாலும், நண்பர்களுடன் பேச, விளையாட அனுமதிப்பதாலும் தாழ்வு மனப்பான்மை முளையிலேயே கிள்ளியெறியப்படுகிறது.

பள்ளிக்கு வரும் மற்ற தாய்மார்களும் மனம்விட்டு ஒருவருக்கொருவர் யோசனைகளை, குறைகளைப் பேசி நிவர்த்தி செய்து கொள்ளலாம். குழந்தைகளின் ஆர்வத்தைக் கவனித்து, அவனை அந்தத் துறையில் மனதை செலுத்தச் செய்ய நாம் உதவியாக இருக்கும் போது நிச்சயம் அவர்களை சாதனையாளர்களாக்க முடியும். பத்திரிகைகள் படிக்கும் வழக்கம் இருப்பதால் எனக்கே பலவிஷயங்கள் இவர்கள் மூலம்தான் தெரியும். கம்ப்யூட்டர் காலம் இது. குறையுள்ள குழந்தையென்றால் மிக விரைவாகக் கண்டறிந்து நடவடிக்கை எடுக்க முடியும். பத்திரிகைகள் மூலமும், விஷுவலாகவும் நிறைய தெரிந்து கொண்டு அவர்களை வளர்க்க முடியும். தொலைக்காட்சியில் காது கேட்காதவர்களுக்கென்றே சைகை மூலம் செய்திகள் கூட இப்போது உள்ளதே! தாய் தன்னம்பிக்கையுடன் வளர்த்தால் நம்பிக்கை நலம் தரும். 'நான் செவிடு என்று கவலைப்படாதே, ஒரு நாள் பிரபலமாகி உன்னைப் பெருமைப்படுத்துவேன்' என்பான். எனக்கு இதைவிட வேறென்ன வேண்டும்" என்கிறார் கண்ணில் நீர் ததும்ப.

"வீட்டில் ஃபிளவர் கான்வென்ட்டுக்கு வரும் 50% முதல் 60% குறையுள்ள குழந்தைகள் நெருங்கிய சொந்தத்தில் திருமணம் செய்து கொண்டவர்களுக்குப் பிறந்ததாக இருப்பதை நம் மனத்தில் கொண்டு, வருங்காலத்தில் இந்தத் தவறு நேராமல் நிச்சயம் தவிர்க்க வேண்டும். ஏனென்றால் என் கணவரும் எனக்கு மாமா பிள்ளை. தாயும், தந்தையும் இது போன்ற குழந்தைகள் பிறந்தால், அடுத்தவர் மீது பழி போட்டுக் குறை சொல்லிக் காலம் கழிப்பதில் எந்தப் பயனும் இல்லை. நானும், என் கணவரும் மனம் ஒருமித்துச் செயல்படுவதால் நிம்மதியாக, அவர்கள் எதிர்காலத்துக்காக சிந்தித்துச் செயல்பட முடிகிறது. குழந்தைகளை கவனித்துக் கொண்டதில் சமையல் சரியாக இல்லாவிட்டாலும் அட்ஜஸ்ட் செய்து

## டிலைட் சாலட்!

ஃப்ரூட் சாலட்டை ஐஸ்கிரீம் இல்லாமல் கொடுத்தால் சாப்பிட ஆளில்லை.... ஆனால் குளிர் காலம் ஐஸ்கிரீமைக் கண்ணால் பார்த்தாலே தொண்டையில் 'கிச்கிச்' வந்துவிடுமே...

ஒரு கப்பில் பழத்துண்டங்களைப் போட்டேன். அதன் தலையில் கொஞ்சம் கண்டென்ஸ்டு மில்க்கை கொட்டினேன். டிலைட் ஃப்ரூட் சாலட் என்று நாமகரணம் பண்ணிக் கொடுத்தேன். பறந்து விட்டதே....!

— உஷா





ஜாங்கில் என்றால் (அட, ஜாங்கிரியை நாங்க செல்லமா சொல்றது) குங்குமப்பூ கலரில்தான் செய்வோம். ஏன் பச்சைக் கலரிலோ நீலக்கலரிலோ செய்தால் என்ன? ஜாங்கிரியும் வேண்டாம்னு சொல்லாது, குழந்தைகளும் சொல்ல மாட்டார்கள். குறிப்பாக இனம் பச்சைக் கலரில் அழகாக இருக்கும்!

— மஞ்சுளா கிருஷ்ணன்

கொள்வார். வரைவதற்கு வேண்டிய பொருட்களை வாங்கித் தருவார். ஒரே ஊரில் இருக்க வேண்டுமென்று குழந்தைகளுக்காக வங்கியில் பிரமோஷன்களை ஏற்றுக் கொள்ளாமலேயே ரிடையர் ஆகிவிட்டார்.

என் மகன் ஸ்ரீதர் மோட்டார் பைக் நன்றாக ஓட்டுவான். இருந்தும் காலனியில் உள்ளவர்கள் "காது கேட்காத உங்கள் மகன் பைக் ஓட்டினால் இங்கு விளையாடும் குழந்தைகளுக்கு ஆபத்தல்லவா?" என்று கேட்டதும் மனதுக்குள் வேதனையாக இருந்தாலும் அந்த பைக்கை விற்றுவிட்டோம். அக்கம் பக்கத்தினரின் கேலியை, முறையீடுகளை மிக சீரியஸாக எடுத்துக் கொள்ளாமல் இருந்தாலே நமக்கு நல்லது. ஒரு அமைப்பினர் நார்மல் குழந்தைகளுக்கும் காது கேளாத குழந்தைகளுக்கும் ஓவியப் போட்டி தனித்தனியே வைத்தனர். காதுக்கும் வரைவதற்கும் என்ன சம்பந்தம்? கண், உடல் ஊனமுற்ற பலர் வயலின், மிருதங்கம், சங்கீத வித்வான்களாக இல்லையா? ஆக்கபூர்வமான சிந்தனையும், கற்பனைத் திறனும் இருந்தால் போதுமே என்றே எனக்குத் தோன்றியது. என் மகன்தான் அதில் பரிசும் பெற்றான்."

ஓவியக் கலைஞனாக, சிற்பக் கலைஞனாகப் பரிமளிக்கும் மகேஷ் குமாரின் எதிர்கால திட்டம் பிரம்மாண்டமான, புதுமை படைக்கும் எண்ணங்கள் மிக்கதாக இருப்பது நமக்கு அவர் தாய் மூலம் புரிந்தது. அவரது சான்றிதழ்களும், பரிசுகளும், அவர் நமக்குக் காட்டிய ஓவியங்களிலும் அவரது அயராத உழைப்பு மட்டுமின்றி எதிர்காலத்திற்கு ஏற்ற புதுமையான, மாறுபட்ட கருத்துக்களைப் பிரதிபலித்தது என்பதே உண்மை.

உத்ஸவ், கலாக்ருதி, தமிழ்நாடு நுண்கலைகுரு, லலித் கலா அகாடமி, ஏர்போர்ட்டின் ஆர்ட் கார்னர், Very Special Arts India எனும் புது டில்லி லலித்கலா காலரியில் கிடைத்த பரிசு என்று அடுக்கிக் கொண்டே போகலாம். விஸ்டம் பத்திரிகையின் அவார்டு, மிகப் பிரபலமான ஆர்ட்டிஸ்ட் பி.சி. செரியன் பாண்டிச்சேரி முன்னாள் துணை வேந்தர் டாக்டர் கே. வேங்கடசுப்பிரமணியம், ஓவியரும், நடிகருமான திரு. சிவகுமார் இவர்களது பாராட்டுக்களை மறக்கவே முடியாது என்கிறார். "எங்கள் வீட்டினருகே வண்டியில் இஸ்திரி போடும் ஒரு ஏழை சிறுவனை வரைந்து டில்லி கண்காட்சிக்கு அனுப்பியிருந்தோம். 200 ரூபாய் விலை போட்டிருந்த அந்தப் படத்தை அதன் தத்ரூபமான வெளிப்பாட்டிற்கு 500 ரூபாய் கொடுத்து வாங்கிச் சென்றதை எங்களால் மறக்கவே முடியாது."

"ஊமையின் கனவை யார் அறிவார்?" என்ற கூற்றைக் கூட நான் மறுக்கிறேன். ஆம்! நார்மலான குழந்தைகளை போல் இவர்களும் தங்கள் கனவுகளை மிகத் துல்லியமாக வெளிப்படுத்த முடியும். அதற்குத் தேவை பயிற்சிதான். பல நாட்கள் தொடர்ந்து அவர்களுடன் பேசி வருபவர்களுக்கு நன்றாகப் புரியும் என்பதையும் புரிந்ததால்தான் நான் அவர்களது கனவை நனவாக்க முடிந்தது என்பதையும் இங்கு நான் குறிப்பிட்டே ஆக வேண்டும். மற்ற இருவரும் இயற்கை யிலேயே புத்திசாலிகளாக இருந்து, ஸ்காலர் ஷிப் பெற்று, வெளிநாடு சென்றிருந்தாலும், அவர்களுக்குச் சமமான பெருமை கொள்ளு மாறு இவர்களை வளர்க்க முடிந்ததில் ஆண்டவனுக்குத்தான் நன்றி சொல்கிறேன்."

"என் மூத்த மகனுக்கு திருமணம் முடித்த கையோடு, மகேஷ் குமாருக்கும் அவரது குறையைப் புரிந்து கொண்டு, அவனது கலைகளுக்குத் தன்னைப் போல் பக்கபலமாக இருந்து (தாய்க்குப் பின் தாரமென!) உதவக் கூடிய ஒரு பெண்ணை மிக விரைவில் மண முடித்து வைப்பேன். அதுவே என் எதிர்கால இன்பக் கனவுகளில் ஒன்று" என்கிறார் அந்தத் தாய்.

பேட்டி : **பானுமதி இராமசந்திரன்**

இதோ,

# உயர்தர வாழ்வு

அமைய ஓர் அரிய வாய்ப்பு.



24 ஏக்கர் பரப்பளவிலே!

ஸ்ரீவத்ஸா கார்டன்ஸ். தனித்தனி வில்லாக்கள் (Villas), டூப்ளக்ஸ் வீடுகள் மற்றும் ஃப்ளாட்டுகளை தன்னகத்தே பெறவிருக்கும் ஒரு எழில்மிகு குடியிருப்பு பகுதி. மேட்டுப்பாளையம் சாலையில், வடகோவை ரயில் நிலையத்திலிருந்து ஐந்து நிமிட பயண தூரத்தில்!

கோவையில் முதலிடம் வகிக்கும் கட்டட நிபுணர்களான சங்கர் அஸோஸியேட்ஸ் வடிவமைத்துள்ள ஸ்ரீவத்ஸா கார்டன்ஸில் 2.4 ஏக்கர் வாழ்க்கையின் இன்றியமையாத பொழுதுபோக்குகளுக்காகவே ஒதுக்கப்பட்டுள்ளது.

# Sreevatsa Gardens

## COIMBATORE

ஸ்ரீவத்ஸா கார்டன்ஸை உங்களுக்கு வழங்குவது ஸ்ரீவத்ஸா க்ரூப் நிறுவனத்தினர். வியாபாரத் துறையில் 50 வருடங்களுக்கு மேலாக இவர்கள் பெற்றுள்ள அனுபவம், உங்கள் கனவுலக இல்லத்தை நனவாக்க ஒரு மகத்தான பின்னணியாய் அமையும். வாருங்கள்! ஸ்ரீவத்ஸா கார்டன்ஸுக்கு.

அபார்ட்மென்ட்ஸ்

ஸ்ரீவத்ஸா கார்டன்ஸ், கோயம்புத்தூர்.
**உயர்தர வாழ்க்கைக்கு தேவையான அனைத்து வசதிகளும் கொண்டது**

'B' டைப் வில்லா

**தனிப்பட்ட சிறப்பு அம்சங்கள்:** •பொழுது போக்கு வசதிகளுக்காக 2.4 ஏக்கர்கள் •டென்னிஸ் கோர்ட், கூடைப்பந்து மற்றும் ஜாகிங் செய்வதற்கான பகுதி •குழந்தைகள் விளையாடும் பகுதி •சமூகக் கூடம் •அழகிய பூங்கா •கிளப் ஹவுஸ் •நீச்சல் குளம் •கேபிள் இணைப்பு •தெரு விளக்குகள் •வெள்ள நீர் வடிகால், கழிவுநீர் அகற்றல், தடையற்ற மற்றும் தாராளமான தண்ணீர் சப்ளை •நல்ல முறையில் அமைக்கப்பட்ட சாலைகள் •நிலத்தில் 27% மட்டுமே கட்டடப் பரப்பளவு •இரவும் பகலும் பாதுகாப்புப் பணி •5 அடி உயர சுற்றுப் புறச் சுவர்.

**தனிப்பட்ட சேவைகள்:** •தனி நபர்கள் அல்லது நிறுவன அமைப்புகளுக்குக் குறுகிய காலநீண்ட கால ஒப்பந்தத்தில் உங்கள் இல்லங்களை வாடகைக்கு விட ஏற்பாடு செய்தல், வாடகையை வசூலித்து உள்ளூரில் உங்கள் பாங்க் கணக்கில் வரவு வைத்தல் •காலியாக உள்ள இல்லங்களை மாதம் இரு முறையாவது சுத்தம் செய்ய ஏற்பாடு செய்தல் •ஆட்சி அமைப்புகளுக்கான வரி, மின்சாரக் கட்டணம், தொலைபேசிக் கட்டணம், தண்ணீர்க் கட்டணம் மற்றும் குடியிருப்பு சங்கக் கட்டணம் போன்ற, சட்ட பூர்வமாகச் செலுத்த வேண்டிய கட்டணங்களை உங்கள் சார்பில் செலுத்த ஏற்பாடு செய்தல் •மின்சாரம் பழுது பார்க்கும் பணிகள், புல்வெட்டுதல் முதலிய பணிகளைக் கவனித்துக் கொள்ளுதல் •உங்கள் உடைமைக்குப் பொருத்தமான பாதுகாப்பை ஏற்பாடு செய்தல் •இந்தியாவில் உங்கள் பயணங்களுக்கு உள்ளூர் டிராவல் ஏஜெண்டுகள் மூலம் பயணத் திட்டங்களை ஏற்பாடு செய்தல். •உங்களுக்குத் தேவைப்படக் கூடிய இதர தனிப்பட்ட சேவைகள்.

# ஸ்ரீவத்ஸா ரியல் எஸ்டேட்ஸ் லிட்.

**கோயம்புத்தூர்:** 8/2, மேட்டுப் பாளையம் ரோடு, கோயம்புத்தூர், 641 043.
தொலைபேசி: 91-0422-448942, 432184, 432574, 430899, 441481. ஃபேக்ஸ்: 91-0422 430899.
தந்தி: SRIVATSACO Email : <Sreevatsa.cbe@smy.sprintrpg.ems.vsnl.net.in>

**சென்னை:** 7, காமராஜ் பார்க் தெரு, சென்னை 600 010. தொலைபேசி: 91-44-5953143, 5960270, 5957953. ஃபேக்ஸ்: 91-44-5950055, 5220192.

**மும்பாய்:** திரு. நீதி பரஜ் (சோனா) எக்ஸிம் (இந்தியா) பிரைவேட் லிட்., பணி நெ. 37, 1, நிர்மல் கமெர்ஷியல் காம்ப்ளெக்ஸ், மிரொண்ட் அப்னோர், மேகு சாலை, செம்பூர், மும்பாய் - 400 071. தொலைபேசி 5575776 (அலுவலகம்) ஃபேக்ஸ்: 022-5425356.

முதலில் செய்யப்படும் புக்கிங்களுக்கு சிறப்பு விலைச்சலுகை காத்திருக்கின்றன! வாருங்கள், வாய்ப்பை நழுவ விடாதீர்கள்.

**கடன் வசதிகளுக்காக HDFC மற்றும் CANFIN ஹோம்ஸ் இந்தத் திட்டத்தை அங்கீகரித்துள்ளன.**

Anugrah 2275/96 R



மூலக்கதை : சுசிஸ்மிதா பந்தயோபாத்தியாய்

வங்காளியிலிருந்து தமிழாக்கம்

சு. கிருஷ்ணமூர்த்தி

கேதகி சித்தியின் மூக்கு பறவையின் அலகு போல் நீளமாயிருக்கும். வெற்றிலைக் கறை படிந்த அவளுடைய காய்ந்த மெல்லிய உதடுகள் பித்தத்தால், வெடித்த உள்ளங்காலில் மருதாணி தடவினாற் போலிருக்கும். மொட்டைக்

**நா**ங்கள் அவளைக் கேதகி சித்தி என்று அழைப்போம். உறவினர் வட்டாரத்தில் அவளுக்குப் பெயர் 'குடி கேடி'. தொலைவில் அவள் வருவதைப் பார்த்து நாங்கள் உற்சாகமாக அம்மாவிடம் போய் அவள் வரவை அறிவித்தால் அம்மாவின் முகம் என்னவோ மாதிரி ஆகிவிடும். அம்மா மெல்லிய குரலில் "இவ எதுக்கு இப்போ இங்கே வரா?" என்று சொல்லிவிட்டு எங்களை அதட்டுவாள், "குதிக்கறதைக் கொஞ்சம் குறைச்சுக்கங்க!... அவளை இங்கே இருக்கச் சொல்லிடாதீங்க, ஆமா!"

கேதகி சித்தி வாசலிலிருந்தே கத்துவாள், "எங்கே, என்னோட லட்சுமியும் சரஸ்வதியும் எங்கே?"

அக்கா தங்கையான நாங்களிருவரும் அந்த லட்சுமி, சரஸ்வதி என்ற பெயர்களின் கவர்ச்சியாலோ என்னவோ - அம்மாவின் தடையையும் மீறிக் கேதகி சித்தியிடம் ஓடுவோம். அமைதியே உருவான தேவதைகளான லட்சுமியிடமும் சரஸ்வதியிடமும் வங்காளிப் பெண்களுக்கு தீராத மோகம். கைகளில் அஸ்திரங்களை வைத்துக் கொண்டு கொல்ல முற்படும் துர்க்காவும் காளியும் யாருக்கு வேண்டும்!



காதுகளில் துணைகள் பெரிதாகத் தொங்கும். கேதகி சித்தியை வெகு நேரம் பார்த்துக் கொண்டிருந்தால் சற்று அருவருப்பு கூடத் தோன்றும். ஆனால் அவள் பேச்சில் கவர்ச்சி இருந்தது. வாய் ஓயாமல் பேசுவாள். வேடிக்கைப் பாட்டுப் பாடுவாள். கதாகாலட்சேபம் செய்பவர்கள் மாதிரி கவர்ச்சியாகப் பேசியும் பாடியும் எங்களை மயக்கி விடுவாள்.

வீட்டுக்குள் நுழைந்ததும் கேதகி சித்தி அக்கா தங்கைகளாகிய எங்களிருவரின் அழகையும் குணத்தையும் புகழ்வாள். பிறகுதான் "நீரு எங்கே?" என்று எங்கள் அம்மாவைப் பற்றி விசாரித்துக் கொண்டே சமையலறைப் பக்கம் போவாள். எப்போதாவது அப்பாவைப் பார்த்து விட்டால் சற்றுத் தலை குனிந்து கொண்டு முறுவலிப்பாள்.



கம்பி மத்தாப்பு கம்பிகளை பத்திரப்படுத்தி வைத்துக் கொண்டால் கலர் பேப்பர்களை இலைகள், பூக்களாகச் செய்து அதில் சுற்றியபடி ஒட்டிவிடுங்கள். இதை சிறிய மண் தொட்டி வாங்கி சுற்றிலும் நட்டபடி வைத்து பால்கனியில் தொங்க விடுங்கள். பார்வைக்கு விருந்தாக இருக்கும்.

— கி. மஞ்சுளா



அப்பா அவளை சீரியஸாகக் கேட்பார், "என்ன, சௌக்கியமா?"

கேதகி சித்த சங்கடத்தோடு தலையை யாட்டி விட்டு அங்கிருந்து நகர்ந்து விடுவாள். பிறகு அம்மாவிடம் போய் "பார்த்தியா நீரு, என் நெஞ்சு இன்னும் படபடக்குது. ஒன் ஆம் படையானைப் பார்த்தா எவ்வளவு பயமா யிருக்கு தெரியுமா? எவ்வளவு சீரியஸா இருக் கார்!... ஒனக்குப் பயமாயில்லே?"

இதைக் கேட்டு அம்மாவுக்கு ரொம்பப் பெருமை. அவள் கண்களை அகல விரித்துக் கொண்டு சொல்லுவாள், "ஆமா ஆமா, என்ன கோபம் வரும் தெரியுமா அவருக்கு!"

அம்மா அப்பாவைப் பற்றி சித்தியிடம் மிகையாகப் பேசி அவளைப் பயமுறுத்தி வீட்டைவிட்டு விரட்டப் பார்க்கிறாள் என்று எனக்குத் தோன்றும்.

கேதகி சித்திக்கு நிலையான இருப்பிடம் எதுவுமில்லை. ஒருநாள் தங்கை வீடு, இன் னொரு நாள் அண்ணன் வீடு, மற்றொரு நாள் அத்தை வீடு, வேறொரு நாள் யாராவது தூரத்து உறவினர் வீடு என்று மாறி மாறிப் போய்க் கொண்டிருப்பாள். ஆனால் யாருடனும் ஒட்டிக் கொள்வதில்லை. அவளுக்கு பட்டுப் பட்டென்று பேசுவது, பிறருடைய குற்றங் குளைகளைச் சுட்டிக் காட்டுவது இவை போன்ற கெட்ட குணங்கள் நிறையவே இருந் தன.

அம்மா கேட்பாள், "டீ குடிக்கறியா?"

"குடிக்கறேன்..."

இனி விஷயத்தில் வேண்டாம் என்று சொல் லவே மாட்டாள் கேதகி சித்தி. அப்பா வீட்டி லில்லாவிட்டால் அவள் டீக்கோப்பையைக் கையில் எடுத்துக் கொண்டு கால்களைத் தூக்கி வைத்துக் கொண்டு கட்டிலில் உட்கார்ந்து விடு வாள். பிறகு கதை சொல்லத் தொடங்கி விடு வாள். கதை வெள்ளத்தில் நாங்கள் - அக்காவும் தங்கையும் ஆனந்தமாக மிதப்போம். பள்ளி நினைவே வராது எங்களுக்கு.

அம்மா திடீரென்று எங்களைக் கேட்பாள், "என்ன, ஸ்கூல் இடையாதா ஒங்களுக்கு?"

நாங்கள் கெஞ்சுவோம், "அம்மா, இன்னிக்கு ஸ்கூல் வேண்டாம்மா."

கேதகி சித்தியும் ஒத்துப் பாடுவாள், "ஆமா, நீரு. இன்னிக்கு ஒரு நா இதுகள் ஸ்கூலுக்குப் போக வேண்டாம். ஒரு நா ஸ்கூலுக்குப் போகாட்டி ஒண்ணும் மோசமாயிடாது."

அம்மாவின் நெற்றி எரிச்சலில் சுருங்கும். "நீ ஒண்ணும் அதுகளுக்குச் செல்லங் கொடுத் துக் கெடுக்காதே! நீதான் படிக்கல்லே. படிச் சிருந்தேன்னா ஒனக்கு இந்த நிலைமை வந் திருக்குமா?" என்று அதட்டுவாள்.

கேதகி சித்தியின் கண்களில் கோபம் ஜொலிக்கும். "ஆமா, நீங்களெல்லாம் பி.ஏ., எம்.ஏ., படிச்சீங்களாக்கும்! அதிருஷ்டம்னு ஒண்ணு இருக்கு, நினைவு வச்சுக்கோ!"

குடித்தனம் நடத்தும் மற்ற பெண்மணி களைப் போல் அம்மாவுக்கும் அதிருஷ்டம், விதி இவற்றில் நம்பிக்கை உண்டு. இந்த அதிருஷ்டங்கெட்டவளின் பெருமூச்சுப் பட்டுத் தன் குடும்பத்துக்கு ஏதாவது ஆபத்து வந்து விடுமோ என்று பயந்து விடுவாள். ஆகவே உடனே சித்திக்கு ஒத்துப்பாடுவாள்.

"நீ சொல்றது சரிதான். ஒன் அதிருஷ்டந் தான் இது! எவ்வளவு நகை நட்டு செஞ்சு, நிறையப் பணம் செலவு பண்ணி ஒனக்குக் கலி யாணம் பண்ணி வச்சார் பெரியப்பா. மாப் பிள்ளை இப்படிப்பட்ட போக்கிரின்னு தெரி யல்லியே!"

கேதகி சித்தியின் மூக்கு விடைத்துக் கொள்ளும், கண்களில் நீர் ததும்பும்.

"போக்கிரின்னா சாதாரணப் போக்கிரியா? கஜப் போக்கிரி! என்னைக் கலியாணம் பண்ணிக்கிட்டு வீட்டிலே வேலைக்காரியா வச்சுக்கலாம், அவளைக் கூட்டிக் கிட்டு வந்து வீட்டு ராணியாக்கலாம்னு பார்த்தான்....!"

ஒரு நீண்ட பெருமூச்சு விடுவாள் அம்மா. "இருந்தாலும் நீ ஒன் புருஷன் வீட்டை விட்டு வந்திருக்கக் கூடாது. நீ கொஞ்சநாள் பொறுத் துக்கிட்டு இருந்திருந்தா ஒன் புருஷன் திருந்தி னாலும் திருந்தியிருப்பான்..."

"என்ன சொல்றே நீரு? அவன் பண்ணின அநியாயத்தையெல்லாம் பொறுத்துக்கணுமா நான்?"

நிலைமையைச் சமாளிப்பதற்காக உடனே பேச்சை மாற்றுவாள் அம்மா. அது போகட்டும்... இப்போ எங்கே போகப் போறே? சாப்பிட்டுட்டு சாயங்காலமாப் போயேன்!"

உடனே கேதகி சித்தியின் முகத்தில், கண்களில் மகிழ்ச்சி பளபளக்கும். அடுத்த வேளைச் சாப்பாட்டுக்கு ஏற்பாடாகி விட்டதே என்ற மகிழ்ச்சி. அவள் எங்களைப் பார்த்து வெற்றிலைக் கறை படிந்த பற்களைக் காட்டிக் கொண்டு சிரிப்பாள். என் தங்கையின் மோவாயைத் தடவியவாறு அம்மாவிடம் சொல்லுவாள், 'நீரு, ஒன் சின்னப் பொண்ணோட மூஞ்சி யார் மாதிரி இருக்கு தெரியுமா? பெல்காமிலே இருந்தாளே, நம்ம கமலா மாமி அவ மாதிரியேதான்! கமலா மாமி எவ்வளவு அழகா யிருப்பா, ஞாபகமிருக்கா நீரு?"

இந்தப் புகழ்ச்சி கேட்டு என் தங்கை முகம் வெட்கத்தால் சிவக்கும். அதே சமயத்தில் என் முகம் மங்கி விடும். இதைக் கவனித்ததும் கேதகி சித்தி என்னை சமாதானம் செய்வதற்காக அம்மாவிடம், "ஒன் பெரிய பொண்ணுக்கு மூஞ்சி கொஞ்ச நீளம். சரஸ்வதி தேவதை மாதிரி... இவ யாரு மாதிரி இருக்கா, நீரு?" என்று கேட்பாள்.

பிறகு அம்மாவும் கேதகி சித்தியும் தங்கள் வாழ்வில் பார்த்த அழகிகளைப் பற்றிப் பேசத் தொடங்கி விடுவார்கள். முதலில் அழகிகள். பிறகு அவர்களுடைய வாழ்க்கை, வாழ்க்கையின் துன்பங்கள்... அவற்றைப் பற்றிக் கேட்கும் போது எங்களுக்குக் கேதகி சித்தி படும் துன்பங்கள் நினைவுக்கு வரும். எங்கள் கண்களில் நீர் ததும்பும். நாங்கள் தீர்மானிப்போம், நாங்கள் பெரியவர்களான பின் கேதகி சித்தியை எங்களுடனேயே வைத்துக் கொள்வதென்று. அவள் எங்களுடனேயே இருப்பாள், நாங்கள் அவளுக்குத் துணிமணிகள் வாங்கிக் கொடுப்போம்... அவளுடைய புருஷனை நன்றாகத் தண்டிக்க வேண்டும் ஒருநாள்! "

நாங்கள் எப்போதாவது அம்மாவிடம், "கேதகி சித்தி நம்மோடேயே இருக்கட்டுமே!" என்று சொல்லுவோம்.

அம்மா எங்களை அதட்டுவாள், "சீ, சும்மா இருங்க! புருஷன் வீட்டை விட்டு ஓடி வந்துட்டா, சொந்தத் தம்பி வீட்டிலே இருப்புக் கொள்ளல்லே இவளுக்கு! இப்படிப்பட்டவளை நம்ம வீட்டிலே கொண்டு வந்து வச்சுக்க முடியுமா? நீங்க ஒண்ணும் அவளுக்காகக் கவலைப் பட வேண்டாம். சும்மா இருங்க!"

கேதகி சித்தியைப் பற்றி நாங்கள் கவலைப் படத் தேவை ஏற்படவில்லை. எப்படியோ அவள் எங்கள் வாழ்க்கையிலிருந்து மறைந்து போய்விட்டாள். எங்களுக்கு எங்கள் வாழ்க்கைக் கவலையே பெரிதாயிருக்கும் போது மற்றவர்களைப் பற்றிக் கவலைப்பட ஏது நேரம்!

இருபது இருபத்தைந்து ஆண்டுகள் கழிந்து விட்டன. இப்போது நான் கேதகி சித்தியால் 'லட்சுமி' என்று புகழப்பட்ட என் தங்கை இராவின் வீட்டில் இருக்கிறேன். இராவின் சிறிய பெண் கைகால்களை உதைத்துக் கொண்டு அழுது ஆர்ப்பாட்டம் செய்கிறாள். அவள் இன்றைக்கு என்னை விட்டு விட்டுப் பள்ளிக்குப் போக மாட்டாளாம்!

"இன்னிக்கு ஒரு நா கொழந்தை ஸ்கூலுக்குப் போக வேண்டாமே" என்று நான் சிபாரிசு செய்தேன்.

இரா திடுக்கிட்டு என் பக்கம் திரும்பிப் பார்த்தாள், பிறகு சொன்னாள், "என்ன இப்படிச் சொல்றே அக்கா! இது நம்ம காலம் இல்லே. ஒரு நா ஸ்கூலுக்குப் போகாட்டியும் ரொம்பக் கஷ்டமாக்கும். தவிர நீ என்ன அபூர்வமா வர்றவளா, அடிக்கடிதான் வந்துகிட்டிருக்கியே!"

ஒரு நாள் பள்ளிக்குப் போகாவிட்டால் எவ்வளவு நஷ்டம் என்று எனக்குத் தெரிய வாய்ப்பில்லை. எனக்குத்தான் குழந்தை குட்டி இல்லையே! இந்தக் காலத்துப் பள்ளிகளைப் பற்றி எனக்கு என்ன தெரியும்!

இராவின் ஐந்து வயதுப் பெண்ணுக்குத் தான் ஒரு நாள் பள்ளிக்குப் போகாவிட்டால் எவ்வளவு நஷ்டமாகிவிடும் என்பது புரியவில்லை. இரா குழந்தையை இழுத்துக் கொண்டு போன பின்னும் அதன் சோக முகத்தை மறக்க முடியவில்லை என்னால். இரா பெண்ணைக் கீழே இழுத்துக் கொண்டு போனாள். ஸ்கூல் பஸ் கதவு பட்டென்று

---

ஒரு டம்ளர் அரிசியுடன், ஒரு டம்ளர் பொட்டுக்கடலை, ¼ டம்ளர் பாசிப் பருப்புப் போட்டு மிஷினில் நைஸாக அரைக்கவும். ஓமம் அல்லது சீரகம் நுசுக்கித் தகுந்தவாறு போட்டு அரைக்கலாம். மாவில் உப்பு, பெருங்காய ஜலம் ஊற்றி, காயும் எண்ணெய் அல்லது டால்டா போட்டுப் பிசைந்து நாடா அச்சில் பிழிந்தால், பல் இல்லாதவர்கள் கூடச் சாப்பிடலாம்.

— பார்வதி







**மங்கையர் மலர், செண்பகம் சில்க்ஸ்**
வழங்கிய 'வாழ்வின் வண்ணங்கள்' போட்டியில் '*மகிழ்ச்சி*' என்ற தலைப்பில் எழுதிப் பரிசு பெற்றவர் திருப்பத்தூரைச் சேர்ந்த ஏ. உமா சுந்தரி அரசு. '*இவருக்குப் பரிசு வாங்குவதே வேலை*' என்பது போல நிறைய போட்டிகளில் பரிசு வாங்கியிருக்கிறாராம். கல்லூரி ஆசிரியரான கணவர், ஒரே மகன், மாமியார் என அளவான குடும்பம். திருமதி. ஜம்பகம் ராமசாமியுடன் புதுக்கோட்டை '*சுபம்*' ஜவுளிக்கடையின் உரிமையாளர் மன்சூரும், சிவகங்கை அரிமா சங்க உறுப்பினர் குணசேகரனும் சென்று பரிசினை அளித்தார்கள்.

---

மூடிக் கொள்ளும் சத்தம் கேட்டு என் நெஞ்சு வலித்தது.

இந்த சமயத்தில் இதூவின் கணவன் ராகுல் கதவுத் திரையை விலக்கிக் கொண்டு அறைக்குள் நுழைந்தான். அவனைப் பார்த்ததும் காரணமின்றியே எனக்குப் படபடத்தது. இப்போதெல்லாம் ஆண்களுக்கு முன்னால் இயற்கையாக இருக்க முடியவில்லை என்னால்.

ராகுல் பார்க்கக் கம்பீரமாக இருப்பான். பெரிய வேலை பார்க்கிறான். என்னைப் பார்த்ததும் அவன் முகம் சற்று மலர்ந்தது.

"ரிது அக்கா, எப்போ வந்தீங்க?"

"கொஞ்ச நேரம் முன்னாலேதான் வந்தேன்..."

"டீ குடிச்சீங்களா?" மரியாதைக்காகக் கேட்டான்.

"குடிக்கிறேன். இப்போ என்ன அவசரம்?"

எனக்கு சங்கடமாயிருந்தது. என்னாலே இவர்களுக்கு ஏதாவது அசௌகரியம் ஏற்படுமா?

இப்படித்தான் எனக்கு எங்கே போனாலும் இருப்பே கொள்வதில்லை. ஏதோ குற்றம் செய்த மாதிரி உறுத்தல்.

இது இப்போது அறைக்குள் நுழைந்தாள். என்னையும் ராகுலையும் ஒரக்கண்ணால் பார்த்தாள். அவள் மூக்கு சற்று விடைத்தது ஏதோ ரகசியம் இருக்கிறதென்று மோப்பம் பிடிக்கிறாளோ?

இதூவின் முகத்தில் சந்தேகத்தின் நிழல். நான் சிறு வயதிலிருந்தே பார்த்து வருகிறேனே, இவளைத் தெரியாதா எனக்கு!

அவள் எதிர்பாராத விதமாக ராகுலுக்கு மிகவும் அருகில் போய் நின்று கொண்டு அவன் தலையிலிருந்து ஒரு நரைத்த முடியைப் பிய்த்து விட்டு, "பாருங்க, நீங்க கிழவராயிட்டீங்க" என்று கொஞ்சலாகச் சொன்னாள்.

ராகுல் சிரித்தான்.

தானும் ராகுலும் எவ்வளவு அன்னியோன்னியம் என்று எனக்குக் காட்ட விரும்புகிறாள்.

என் மூக்கு நுனியில் எரிச்சல். கண்களில் நீர் வந்து விடும் போலிருக்கிறது. நான் என்னை சமாளித்துக் கொள்ளப் புத்தக ஷெல்பை நோக்கிப் போய்ப் புத்தகங்களைப் பார்க்கத் தொடங்குகிறேன்.

ஆனால் இதூவுக்கு மட்டும் என்னைத் தெரியாதா? நான் அண்ணனோடு கோவித்துக் கொண்டு இதூவின் வீட்டுக்கு வந்திருக்கிறேன். இதூ என்னை அவள் வீட்டில் தங்கச் சொல்லுவாளோ இல்லையோ தெரியவில்லை. எனக்கு இப்போதெல்லாம் எந்த இடத்திலும் பொருந்துவதில்லை.

அபிஜித்திடமிருந்து விவாகரத்து செய்து கொண்ட பிறகு நான் ஒரு காலிப் பை என்ற உணர்வு ஏற்பட்டிருக்கிறது எனக்கு. நான்



தேங்காய் பர்பி செய்து வில்லை போட தட்டில் கொட்டிய பின் அதன்மீது சிறிதளவு பால் பவுடர் தூவி துண்டு போட்டுப் பாருங்கள். சுவை கூடும்.

— எஸ். விஜயா சீனிவாசன்

இந்தப் பைக்குள் எதை வேண்டுமானாலும் போடலாம், பையை எங்கே வேண்டுமானாலும் வைக்கலாம்.

"வா, உள்ளே போகலாம்" இதூ சொன்னாள்.

நாங்கள் இதூவின் படுக்கையறைக்குப் போனோம். படுக்கையின் மேல் சிதறிக் கிடந்த விளையாட்டுப் பொம்மைகளை எடுத்து வைத்தவாறே இதூ சொன்னாள், "நேத்திக்கு அண்ணா வந்திருந்தான்."

சுவாரசியமில்லாமல் கேட்டேன், "என்ன சொன்னான்?"

"ஒன்னைப் பத்தித்தான் பேசிக்கிட்டிருந்தான். பாவம், அவனுக்கு ஒன்னைப் பத்தி ரொம்பக் கவலை...."

நான் கேலியாகச் சிரித்தேன். "கவலை என்னைப் பத்தியா, நம்ம வீட்டைப் பத்தியா? நான் வீட்டிலே பங்கு கேப்பேனோன்னு பயம் அவனுக்கு! அவனைப் பத்திப் பேசாதே என்கிட்டே! எப்பவும் தன் காரியந்தான் அவனுக்கு!" படபடப்பில் எனக்கு மூச்சு இறைத்தது.

இதூ சற்று நேரம் பேசாமலிருந்தாள். பிறகு அவளிடமிருந்து நறுக்குத் தெறித்தாற் போல் வார்த்தைகள் வெளிப்பட்டன. "பொம்மனாட்டிகளுக்குப் போக்கிடம் புருஷன் வீடு தானே! கிழ வயசில புருஷனைத் தவிர வேறு யாரு பார்த்துப்பாங்க?"

எனக்குக் கோபத்தில் இரத்தம் தலைக்கேறியது. என்ன சொல்ல விரும்புகிறாள் இவள்? ஆபத்துக்காலத்தில் நான் அவர்களை நம்பியிருக்கக் கூடாது என்று எச்சரிக்கிறாளா?

என் தங்கை லட்சுமி மாதிரி அழகாகக் குடித்தனம் செய்து கொண்டிருக்கிறாள். காளி மாதிரி தாண்டவமாடி அவளுடைய குடித்தனத்தை நாசம் செய்துவிடலாமா என்று ஆத்திரம் ஏற்படுகிறது எனக்கு. எப்படியோ என்னை சமாளித்துக் கொண்டு பேசாமலிருக்கிறேன்.

இதூ டிரெஸ்ஸிங் டேபிளில் இருந்த டப்பாக்களைச் சரி செய்தவாறே சொன்னாள். "அபிஜித்தை மட்டும் குத்தஞ் சொல்லக் கூடாது. ஒன் மேலேயும் குத்தம் இருக்கு. ஆம்பிளைங்களுக்குக் கொஞ்சம் விட்டுக்கொடுக்கணும். நீ ஒன் புருஷனை கொஞ்சம் அனுசரிச்சுப் போயிருக்கணும்!"

இதூ என்ன சொல்கிறாள்? ஆண்களை அனுசரித்துப் போகணுமா? எப்போதும் பெண்கள் புருஷனின் இஷ்டத்துக்கு வளைந்துதான் கொடுக்க வேண்டுமா? பெண்ணுக்குத் தனிப்பட்ட விருப்பு வெறுப்பு எதுவும் இருக்கக் கூடாதா?

பல்ட்ருவின் பெண்டாட்டி ஜயந்தியும் நேற்றைக்கு இதே மாதிரிதான் பேசினாள்...

அபிஜித்தின் குணம் இவர்களுக்குத் தெரியுமா. என் முகத்தில் அடித்தாற் போல், "இப்போ எல்லாம் ஒன்னை எனக்குப் பிடிக்கல்லே" என்று பட்டென்று அவன் சொன்னது இவர்களுக்குத் தெரியுமா? நான் இந்த விஷயத்தைச் சொன்னாலும் இவர்கள் புரிந்து கொள்வார்களா?

மேலும் அங்கேயிருக்கப் பிடிக்கவில்லை எனக்கு. இதூ ஏதோ ஒரு அன்னிய மனுஷியாகத் தோன்றியது. எனக்கு ஒரே படபடப்பாயிருந்தது. கட்டிலிலிருந்து இறங்கியவாறே "போய்ட்டு வரேன்" என்றேன்.

காலையில் ஒரு கோப்பை டீ தான் குடித்திருந்தேன். காலி வயிறு பசியில் வலித்தது.

இதூ திகைத்துப் போய் என்னைப் பார்த்தாள். "கிளம்பிட்டியா? டீ குடிக்கல்லியா?" என்று கேட்டாள். ஆனால் உள்ளூற நிம்மதியடைந்து விட்டதை அவளால் மறைக்க முடியவில்லை.

நான் வேறெதுவும் பேசாமல் நடக்கத் தொடங்கினேன். நடக்கும் போது இதூவின் ஆளுயரக் கண்ணாடிக்கு முன்னால் வந்தேன்....

கண்ணாடியில் அந்த பிம்பம் யாருடையது?

பறவையின் அலகு போன்ற மூக்கு, எண்ணெய்ப் பசையில்லாத தலைமுடி, பொருக்குத் தட்டிய உதடுகள், சொறி பிடித்தாற் போன்ற கைகால்கள்...

இருபது இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பின் இப்போது திடீரென்று கேதகி சித்தியின் உருவம் எப்படி வந்தது இங்கே?

திடுக்கிட்டுப் போய்க் கண்களை மூடிக் கொண்டேன்.

# யார் உசத்தி?

“உங்களுக்கு சின்னப் பொண்ணுதான் செல்லம். அவளுக்கே எல்லாம் வாங்கிக் கொடுங்க.”

“நான் மட்டும்தான் விட்டுக் கொடுக்கணுமா? அவ விட்டுக் கொடுக்க மாட்டாளா? என்னை மட்டும் அட்ஜஸ்ட் பண்ணிக்கச் சொல்லுவீங்க. சின்னவளைத்தான் எப்பவும் சப்போர்ட் பண்ணுவீங்க.”

“அவன் என்ன ஒண்ணும் தெரியாதவனா? நீங்கதான் அவனைக் குழந்தை, குழந்தை என்று சொல்லுவீங்க. ஸ்கூல்ல வந்து பாருங்க, என்ன அடாவடி பண்றான். சின்னப் பையனாம், சின்னப் பையன். அவனையே வெச்சுக் கொஞ்சுங்க.”




என்ன, ஏதோ நம் வீட்டில் அவ்வப்போது கேட்கும் டயலாக் போல் தெரிகிறதே என்கிறீர்களா? ஒன்றிற்கு மேற்பட்ட குழந்தைகள் இருக்கும் எல்லார் வீட்டிலும் சர்வ சாதாரணமாகக் கேட்கப்படும் வார்த்தைகள்தான் மேலே சொன்னவை. பெண்ணோ, பையனோ, பெரிய வயது, சின்ன வயது குழந்தைகள் இருக்கும் வீடுகளில் [illegible] நடக்கும் [illegible] தான் இந்த Sibling rivalry எனப்படும் சகோதர, சகோதரிகளுக்கிடையே நடக்கும் போட்டி. இதற்கு வயது வரம்பு கிடையாது. கல்யாணமாகி பல வருடங்கள் [illegible] செய்த பிறகும் மூத்த பெண் அல்லது இளைய பெண் தன் பிறந்தகத்துக்கு வரும் போது அம்மாவிடம். “நீ வித்யாவுக்குக் [illegible] பாத்திரம் வாங்கிக் கொடுத்தாயாம்மா. நாமெல்லாம் உன்னுடைய பெண் போலத் தெரியவில்லையா? ஒவ்வொரு முறை அவள் வரும் போதும் அவளுக்கு ஏதேனும் வாங்கித் தருகிறீர்கள். நான் மட்டும் என்ன குறைந்து போய் விட்டேன்” என்று கண் கசக்கும் படலங்களை நாம் ஆங்காங்கே பார்க்கிறோம்.

எனக்குத் தெரிந்த ஒரு பெண் அவள் பள்ளித் தோழி ஒருத்தி வீட்டிற்கு அடிக்கடி செல்வாள். இவர்கள் இருவரும் ஒரே வயதுடையவர்கள். ஆனால் இந்தப் பெண் அந்தப் பள்ளித் தோழியின் அக்காவுக்குத்தான் -- ஏறத்தாழ எட்டு வயது மூத்தவள் -- ரொம்பவும் ஃப்ரெண்ட். ஒருமுறை நான் அவளைக் கேட்டேன்; “எப்படி உன் தோழியை விட அவள் அக்காவிடம் இவ்வளவு நெருக்கம் ஏற்பட்டது.” அதற்கு அவள் சொன்னாள் : “அக்கா ரொம்பவும் பாவம் ஆன்ட்டி. அவள் தங்கைதான் அவள் அம்மாவுக்கு ரொம்பவும் செல்லம். தங்கைக்காரி அவள் அம்மாவிடம் அக்காவைப் பற்றி வேண்டுமென்றே ஏதாவது கோள் சொல்லி, திட்டு வாங்க வைப்பாள். நானும் எங்கள் வீட்டில் மூத்தவள்தானே. என்னால் அக்காவைப் புரிந்து கொள்ள முடிகிறது. நீங்கள் வேண்டுமானால் பாருங்களேன். கூடிய சீக்கிரம் நாங்கள் மூத்த குழந்தைகளுக்கென்றே ஒரு க்ளப் ஆரம்பிக்கப் போகி



றோம்."

அந்தச் சிறு பெண்ணின் பேச்சு என்னை மிகவும் சிந்திக்க வைத்தது. பிஞ்சு வயதிலேயே குழந்தைகளுக்கு இந்த மாதிரி எண்ணங்க ளெல்லாம் வரலாமா. இந்த "ஸிபிலிங் ரைவல்ரி" நம் நாட்டில் மட்டும்தான் என் றில்லை. உலகெங்கும் பெரும்பான்மையான குடும்பங்களில் காணப்படும் ஒன்றுதான். தற்போது விற்பனையில் முதலிடத்தைப் பெற்றுள்ள புத்தகத்தை (புத்தகத்தின் பெயர் : The 7 habits of highly effective people) எழுதியுள்ள அமெரிக்கர், ஸ்டீபன் கோவே.

"ஆயிரக்கணக்கானவர்களுக்கு தங்கள் குழந்தைகளை எப்படி வளர்ப்பது என்று லெக்சர் செய்கிறேன். ஆனால் என் குடும்பத்திலேயே நான் எவ்வளவு ஜாக்கிரதையாக இருந்தாலும், இந்த ஸிப்லிங் ரைவல்ரி எப்படியாவது எட்டிப் பார்த்து விடுகிறது" என்று சொல்லும் அவர் தன் அனுபவத்தைச் சொல்கிறார் --

இரண்டு வயதே வித்தியாசமுள்ள அவரது இரு மகன்களை ஒருமுறை அவர் தியேட்டருக்குப் படம் பார்க்க அழைத்துச் செல்கிறார். பாதி படத்தின் போது சின்னப் பையன் சீட்டிலேயே தூங்கி விட்டான். வீட்டுக்குத் திரும்பும் போது, தூங்கும் சின்னப் பையனை அலுங்காமல் கை களில் தூக்கிக் கொண்டு காரின் பின் ஸீட்டில் கிடத்தினார். குளிர் அதிகமாகத் தெரியவே, தன் கோட்டைக் கழற்றி தூங்கும் பையன் மீது போர்த்தினார். முன் ஸீட்டில் அவரும், பெரிய பையனும்.

விடு திரும்பும் வரை அவர்தான் ஏதேதோ பேசிக் கொண்டு வந்தார். பையனிடமிருந்து வெறும் "ம்", "ஆ", "ஓ" போன்ற முனகல்கள் தான். கோவேக்கு சந்தேகம் வந்து விட்டது. என்னவோ கோபம், பையன் மூட் அவுட்டாகி விட்டான். ஆனால் என்னவென்று சமாதானம் எப்படிச் செய்வது? என்னென்னவோ பேசிப் பார்த்தார். கடைசியாக, ஒற்றை வரியில் பைய னிடமிருந்து பதில் கிடைத்தது. "தம்பிக்குச் செய்ததைப் போல, எனக்கும் குளிரும் என்று உங்கள் கோட்டை எடுத்துப் போர்த்துவீர் களா?" என்று கேட்டான். இருந்தது என்னவோ ஒரு கோட். அதைத் தூங்கும் சின்னப் பைய







னுக்குப் போர்த்தி விட்டோம். அவனை விட இரண்டே வயது பெரியவனான மூத்த பிள்ளைக்கும் குளிராக இருந் திருக்கும் என்று தனக்குத் தோன்றவில் லையே என்கிறார் கோவே.

சமீபத்தில் ஒரு அம்மையாரைச் சந்தித்தேன். அகில உலக அளவில் புகழ் பெற்ற ஒரு குழந்தைகள் நல அமைப்பில் மனோதத்துவ ஆலோசகராகப் பணி யாற்றி வந்தவர். மனநல அடிப்படையில் பல விஷயங்களையும் பேசிய அவர் கடைசியாக இப்படிச் சொன்னார். இந்த ஸிப்லிங் ரைவல்ரி விஷயத்தில் மட்டும் என்னால் சமாளிக்க முடியவில்லை. அந்தக் காலத்தில் என் மகனுக்கும், மகளுக்கும் போட்டி. இப்பொழுது என் பேரனுக்கும், பேத்திக்கும் - என்று ஒப்புதல் வாக்கு மூலம் அளித்தார்.

ஆனால் இந்த விஷயம், அப்படியே சரி யாகி விடும் என்று ஆறப் போடக் கூடிய ஒன் றல்ல. நம் அணுகு முறையையும் பொறுத்து இது மாறுபடும். நம் குழந்தைகள் எட்டிக்குப் போட்டியாக பேசும் போதும் நடந்து கொள் ளும் போதும் நாம் கொஞ்சம் ஆழமாகக் கவனித்தால், முக்கியமாகத் தெரிவது ஒன்று. அவர்கள் நம் மீது அதிகம் நம்பிக்கை வைத் திருக்கிறார்கள். அதிலும் முதல் குழந்தை, தன்

பெற்றோரைப் பெரிதும் சார்ந்தே வளர்கிறது. ஆனால் மூத்ததோ, இளையதோ, எந்தக் குழந்தையும் பெற்றோர் மீது அதிகம் நம்பிக்கை வைக்கிறது. 'அம்மா, அப்பா நமக்காகத்தான் எதையும் செய்வார்கள்; நம்முடைய நலனில்தான் அதிக அக்கறை கொண்டுள்ளார்கள்' என்று நம்புகிறார்கள். அந்த நம்பிக்கை தளரும் போது, தன்னைவிட, தன் கூடப் பிறந்த குழந்தை மீது அதிக அக்கறை காட்டுகிறார்கள் என்று நம்ப ஆரம்பிக்கும் போது பிரச்னை ஏற்படுகிறது. தான் உசத்தியா அல்லது தம்பி/ தங்கை உசத்தியா, யார் உசத்தி என்ற போராட்டம் வந்து விடுகிறது. அந்த நம்பிக்கையை உடைக்கும் மூலக் காரணமாக அந்தத் தங்கையையோ, தம்பியையோ கருதினால், அவர்களோடு எப்பவும் சண்டைதான். எதற்கெடுத்தாலும் போட்டிதான்.

அந்தச் சமயத்தில் பெற்றோர்களும் மறைமுகமாக, தம்பி, தங்கைகளை சப்போர்ட் செய்ய ஆரம்பித்து விடுகின்றனர். "அவன் சி[illegible] பெரியவனான நீதான் அவனிடம் [illegible] போக வேண்டும்" என்றும், "பெரியவன்தான் சின்னவர்களுக்கு ஒரு முன் மாதிரியாக இருக்க வேண்டுமே தவிர, அவனை வம்புக்கு இழுக்கக் கூடாது. நீதான் விட்டுக் கொடுக்கணும்" என்றும் சொல்லி விட்டால் அந்தப் 'பெரியவனும்' இருக்கும் நம்பிக்கையையும் இழந்து விடுகிறது! "பெரிய" பெண்ணோ, அல்லது பையனோ என்ன அப்படியே பெரிய மனிதனா? ஒரு சில வருடங்கள் தானே பெரியவர்களாக இருப்பார்கள்? இதையெல்லாம் நாம் யோசித்துப் பார்க்க வேண்டும்.

இரண்டாவது குழந்தை பிறந்தவுடனேயே, முதல் குழந்தை "பெரியதாகி" விடுகிறது. நாமே பெரியது, சின்னது என்று கம்பேர் பண்ணத் துவங்கி விடுகிறோம். நம்மை யாருடனாவது கம்பேர் பண்ணி, நீ செய்வது சரியில்லை என்று சொன்னால் நமக்கு எப்படி எரிச்சல் வரும். அதே போலத்தான். நம் வயிற்றில் பிறந்த குழந்தைகளை, நாமே கம்பேர் பண்ணி "பெரியது"தான் அட்ஜஸ்ட் செய்யணும் என்றால், அந்தக் குழந்தை அதை ஓர வஞ்சனையாகத் தானே எண்ணும்? தன் ஆத்திரத்தையெல்லாம் கூடப் பிறந்ததின் மீதுதானே காட்டும்? போதாததற்கு பெற்றோர் தரும் மறைமுக சப்போர்ட்டில் இளையதும் 'ஏற்றம்' கண்டு, மூத்ததோடு வலுச் சண்டைக்கும் போகும். இவை எல்லாம் நாம் தவிர்க்கக் கூடியவைதானே. சிந்தித்துப் பாருங்கள்.

மூத்த குழந்தையிடம், "நீதானே எல்லோருக்கும் பெரியவன்; சின்னவர்கள் ஏடாகூடமாக ஏதாவது செய்தாலும் நீ பெரிது பண்ணாதே" என்று சொல்வதைத் தவிருங்கள். பெரியவனோ, சின்னவனோ, அவர்களிடையே நடு

நிலைமையாக இருங்கள். யார் தவறு செய்தாலும், அவரவர் தவற்றை அவரவர்கள் உணர்ந்து, மாற்றிக் கொள்ள உதவுங்கள். இளையவர், மூத்தவர் என்ற பாகுபாடு இல்லாமல் அவர்கள் அனைவரும் பொறுப்புணர்ச்சியோடு செயல் பட ஊக்குவியுங்கள். மேலும் ஒரு குழந்தை விக்காக இருக்கலாம். அவர்கள் இருவர் திறமை களையும் குழந்தைகளிடமே ஒப்பிட்டுச் சொல் லாதீர்கள். எந்த நேரத்திலும் சகோதர, சகோதரி களிடையே போட்டியும், பொறாமையும் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளுங்கள். ஒப்பிடு வதை அறவே விடுங்கள்.

உங்கள் ஒரு குழந்தையைப் பற்றி மற்றொரு குழந்தை புகார் சொன்னால் ஒரு பக்கமே சார்ந்து விடாதீர்கள். அந்தக் குற்றச்சாட்டுக்கு எவ்வளவு வெயிட்டேஜ் கொடுக்கலாமோ அவ்வளவே கொடுங்கள். சின்னவன் (இளை யவன்) செய்தால் "குழந்தை, தெரியாமல் செய்து விட்டது" என்று சொல்கிற ரீதியில், "நீ பெரியவன், உனக்கு இது கூடவா தெரியாது" என்று சொல்லாமலும், "அது குழந்தை, போனால் போகிறது விட்டுவிடு" என்றோ, "நீ எப்படி இவ்வாறு செய்யலாம்" என்றோ, ஆளுக்கு ஏற்றாற் போல் உங்கள் வாதிக்கை மாற்றிக் கொள்ளாதீர்கள். இந்த வாதிக் பெரிய வர்களாகிய நம்மைப் பற்றிய விஷயங்களில் சரிப்படும். குழந்தைகள் குழந்தைகள்தான். நல்லது கெட்டது, அவர்கள் வயதைப் பொறுத்து மாறுவதில்லை.

மேலும் நம்மில் பலருக்கும் ஒரு பழக்கம். குழந்தையைக் கொஞ்சும் போது, "அம்மா செல்லமாக்கும்" என்று சொல்லுவோம். குழந்தை ஏதாவது செய்ய வேண்டி இருந்தால், "நீ சீக்கிரம் செய்து விடணும் என்ன, அப்பத் தான் அம்மாக்கு செல்லம்னு சொல்லுவேன்" என்ற 'கண்டிஷன்' போடும் செல்லம் வேறு. போதாததற்கு வீட்டிற்கு வருகிறவர்கள் வேறு "நீ யார் செல்லம் சொல்லு. அம்மா செல்லமா, அப்பா செல்லமா?" என்று அக்கறையாகக் கேட்பார்கள். இதற்குப் பதில் சொல்லத் தெரி யாத அல்லது செல்லம் என்று சொல்லப்பட்டு வளராத குழந்தை கூட கொஞ்சம் கொஞ்சமாக யோசிக்கத் தொடங்கும். அன்று நம்மை அப்பா கண்டித்தாரே, அதனால் நான் அப்பா செல்லம் இல்லை. அம்மா செல்லம்தான் என்று தனக் குள் எண்ணங்களை வளர்த்துக் கொள்ளும் குழந்தை. அந்த அம்மா தன்னைக் கண்டிக்கும் போதோ அல்லது தம்பி அல்லது தங்கையைக் கொஞ்சும் போதோ, தான் அம்மா செல்லம் இல்லை, தம்பிதான் அம்மா செல்லம் என்று தம்பியை விரோதப் பார்வை பார்க்கும்.

பொதுவாகவே குழந்தைகளிடம் நிறைய அன்பு காண்பியுங்கள். அவர்களிடம் இருந்து நாங்கள் எதையும் எதிர் பார்க்கவில்லை என்ற உத்தரவாத அன்பைக் காண்பியுங்கள். வெளிப் படையாக அந்த அன்பைப் பிரகடனப் படுத்துங்கள். நம் அன்பைச் சொல்லாலோ, செயலாலோ டெமான்ஸ்ட்ரேட் செய்து காண் பித்தால்தான் குழந்தைகள் புரிந்து கொள்வார் கள், ஒத்துக் கொள்வார்கள். ஆனால் குழந்தைகளிடையே, தன்னை விட தன் சகோதரன்/சகோதரியைத்தான் பெற்றோர் அதிகம் விரும்புகிறார்கள் என்ற எண்ணம் மட்டும் வந்து விடக் கூடாது. அவர்கள் அனை வருமே உங்களுக்கு முக்கியம் என்று உணர்த் துங்கள்.

நான் என் இரண்டு குழந்தைகளையும் என் கண்கள் என்று வர்ணிப்பேன். என் பெண் ணும் "உனக்கு யாரை ரொம்பப் பிடிக்கும்? என்னையா, தம்பியையா" என்று அக்கப் போருக்கு இழுப்பாள். நான் சொல்லுவேன், "நீங்கள் இருவருமே என் இரு கண்கள் போன்ற வர்கள். ஒரு கண்ணைப் பிடிக்கும், ஒரு கண் ணைப் பிடிக்காது என்று சொல்ல முடியுமா? ஒரு கண் மட்டம், மற்றொரு கண் உசத்தி என்று உண்டா? இரண்டும் நன்றாக இருந்தால் தான் என்னால் நன்றாகப் பார்க்க முடியும். அதனால் நீங்கள் இருவருமே சமமாக இருந் தால்தான் என்னால் சந்தோஷமாக இருக்க முடியும்" என்பேன்.

அநேகமாக எங்கள் வீட்டில் 'ஸிப்லிங் ரைவல்ரி' இல்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

**— ஜெயஸ்ரீ சாரநாதன்**

**கை குழந்தை இருக்கும் அறை யில் உள்ள எல்லா ஜன்னல் களையும் மாலையில் தீபாவளி சமயத்தில் மூடிவிடுவது நல்லது. வெடி சப்தத்தில் குழந்தை திடுக் கிடாது. 'ராக்கெட்' போன்றவை யும் ஜன்னலிலிருந்து உள்ளே நுழையாது! சிறிது பஞ்சை குழந்தையின் காதுகளில் வைத் தால் வெடி சப்தத்தைக் குறைக்க முடியும்!**

**— ஆர். சீதா**



# அம்மா என்றால்...

**கை**யிலிருந்த மதுவின் ப்ராக்ரஸ் ரிப்போர்ட்டைப் பார்த்தவுடனேயே கலா பொறுமையை இழந்தாள்.

"ஏண்டி, போன பரீட்சையில் எட்டாவது ரேங்க். இப்ப பத்தாவதா?"

பனிரெண்டு வயது மது மௌனமாக நின்றான்.

"ஏண்டி, கேட்கறேன் இல்லே. அடுத்தது பதினைந்தாவதா? உன்னைப் பெத்ததுக்குப் பதிலா..."

வார்த்தையை முடிக்கவில்லை கலா. மதுவின் கன்னத்தில், பிறகு முதுகில் கலாவின் விரல்கள் பதிந்தன.

"அந்த உமாவோட அம்மா 'எங்க உமா ஃபர்ஸ்ட் ரேங்க். உங்க மது என்ன ரேங்க்' என்று கேட்கும் போது அவமானம் எனக்குத் தானேடி. காலையில் அஞ்சு மணிக்கு எழுந்தால் ராத்திரி பத்து மணி வரைக்கும் உன் எழவைத்தானேடி எடுத்துண்டிருக்கேன். ஆபீஸிலும் வீட்டிலும் யாருக்காகடி உழைக்கறேன்? உனக்குப் படிக்கிறதைத் தவிர என்னடி வேலை?"

கலா அடித்து ஓய்ந்தபோது "ஏன் நிறுத்திட்டே? இன்னும் அடி. நல்லா அடி" என்று மது சொன்னபோது கலாவின் ஆத்திரம் இன்னும் கூடியது.

"ஏண்டி கிண்டலா பண்றே? உங்கப்பா வரட்டும். இன்னைக்கு ரெண்டில ஒண்ணு பார்த்துடறேன். நேத்து அடிச்சது பொய். இன்னைக்கு அடிக்கப் போவதுதான் மெய்."

மது அப்போதும் அசையவில்லை.

"அழுத்தம். அப்படியே பரம்பரையை உரிச்சு வச்சிருக்கு."

அவனுடைய மாமியாரும் நாத்தனாரும் அவசியம் இல்லாமல் அவள் வாயில் விழுந்து புறப்பட்டார்கள்.

அலுவலகம் விட்டு அலுப்புடன் வந்தவனுக்கு, அவன் கேட்ட தண்ணீரைக் கூட முதலில் கலா கொடுக்கவில்லை.

"தண்ணி அப்புறம் குடிக்கலாம். முதல்ல உங்க பொண்ணு மார்க் வாங்கி இருக்கிற லட்சணத்தைப் பாருங்க."

"ஏ, மது!"

அப்பாவின் குரலில் ஒலித்த கோபம் மதுவை நடுங்க வைத்தது. அம்மாவைப் பரிதாபமாகப் பார்த்தாள்.

"ஏண்டி, படிக்கல்லேன்னா என்ன பேச்சு பேசறா?"

அவள் வீரத்துக்கு அவன் வினாசி எடுத்தான். கொஞ்ச நேரம் முன்பு கலா அடித்த இடத்திலேயே அவனும் கைவரிசையைக் காட்டியபோது மது அலறினாள்.

"அப்பா, இனிமேல் ஒழுங்காகப் படிக்கிறேன்பா."

அன்று இரவு மதுவைப் பார்த்தபோது கலாவுக்கே பாவமாக இருந்தது. சேகர் நன்றாகவே அடித்து விட்டான். முகத்தில் ஆங்காங்கு வீக்கம்.

பரிவுடன் மதுவைத் தொட்டபோது மது அவள் கையைத் தட்டி விட்டாள்.

கலாவுக்குக் கோபம் வந்தது.

"உனக்கு உங்கப்பாதான்டி லாயக்கு."

**அ**ன்று அலுவலகம் விட்டு வந்தபோது மது ஏதோ படம் போட்டுக் கொண்டிருந்தாள்.

"ஏண்டி, பாடம் படிக்க யோக்யதை இல்லை. எப்பப் பார்த்தாலும் என்னடி படம்?"

கலா நோட்டை வீசி எறிந்தாள். அன்று இரவு சேகர் நோட்டைக் கிழித்தே போட்டான். வழக்கம் போல் அர்ச்சனையும், அடியும்.

"இனிமேல் பாடம் படிக்காம படம் போடு உன்னைப் பார்த்துக்கறேன்."

"**அ**ம்மா, இந்தக் கணக்குக் கொஞ்சம் புரியவில்லை. எப்படின்னு சொல்லிக் கொடேன்."

"ஆமாண்டி, ஆபீஸில் நாயா உழைச்சுட்டு இப்பத்தான் அடுப்படிக்கு வந்திருக்கேன். இப்பத்தான் உனக்கு சந்தேகம் கேட்க நேரம் கிடைச்சதாக்கும்.

உங்கப்பா வந்தவுடனே கேளு."

அப்பாவைக் கேட்டபோது அவன் எரிச்சலானான். "ஆபீஸ்லே வேலையை முடிச்சுட்டு பஸ் பிடிச்சு அலுத்து வீட்டுக்கு வந்தா, உன் பிடுங்கல். தெரிஞ்ச வரைக்கும் போடு போறும்."

''என் ஃப்ரெண்டு வீட்டுக்குப் போய்ப் படிச்சுட்டு வரட்டுமா?'' மறு நாள் மது கேட்டாள்.

''நீதானே, படிக்கிற மூஞ்சியைப் பார்த்தாத் தெரியல்லை? படிக்கறேன்னு சொல்லிட்டு அங்கே போய் விளையாடுவே. வேணுமானா அவளை இங்க வரச் சொல்லு."

ஆண்டுத் தேர்வு முடிந்து ரிசல்ட் வந்து விட்டது. ரிசல்ட் பார்த்துவிட்டு வருவதாகச் சொல்லி மது போயிருந்தாள். பரீட்சையில் அவள் தேறிவிட்ட



# வைரவன்

செய்தியை உமாதான் முதலில் வந்து கலாவிடம் சொன்னாள்.

"பாஸ் பண்ணி என்ன? ப்ராக்ரஸ் ரிப்போர்ட் வந்தா தெரியும். ஆமாம். மது எங்கே?"

"ஏன் இன்னும் வரவில்லையா? எங்களுக்கு முன்னாடியே கிளம்பிட்டாளே. நான் ஃப்ரண்ட்ஸ் வீட்டுக்குப் போய் விட்டு இப்பத்தான் வரேன்." உமா போய் விட்டாள்.

''சனியன் பிடிச்சவ. எங்கே தொலைஞ்சா? வரட்டும் பேசிக்கறேன்."

மதுவைக் காணவில்லை.

ரிசல்ட் பார்க்கப் போனவள் இரண்டு நாட்களாகியும் திரும்பவில்லை. கலா நிலைகொள்ளாமல் தவித்தாள்.

"யாராவது கடத்திக் கொண்டு போய் இருப்பார்களோ? பேப்பரில்தான் தினம்

ஒரு செய்தி.

"ஏதாவது ஆக்ஸிடெண்டோ? அப்படி என்றால் தெரிந்து இருக்குமே?"

"எங்கேயாவது ஓடிப் போய் விட்டாளோ?" கலாவால் அதை நினைத்துப் பார்க்கவே முடியவில்லை.

"போலீஸில் வேணுமானா புகார் பண்ணலாமா?"

"அழகா பொண்ணை வளர்த்து இருக்கியே. இன்னும் நம்ம மானம் போகணுமா? பசிச்சா தன்னால வரா. வீம்புக்கு எங்கேயாவது போய் இருப்பாள்."

சேகர் ஆபீஸ் போய் விட்டான். அவன் தான் போகவில்லை.

அழைப்பு மணி சப்தம் கேட்டு கதவைத் திறக்க விரைந்தாள் கலா.

'இன்றைக்குப் போடுகிற போட்டில் அவ கொஞ்ச நாளைக்குக் காலடி வச்சு வெளியே போகவே முடியாது.'

வந்தது மது அல்ல, கலாவின் அம்மா.

அம்மா எங்கே இந்த வேளையில்? ஒரு வேளை மது அங்கே போய் விட்டாளோ? தன்னைச் சமாளித்துக் கொண்டு அம்மாவை 'வா' என்றாள் ஒற்றையாக.

"முதலில் சில்லுனு தண்ணி கொடு. அப்பப்பா என்ன வெயில். அப்புறம் சூடாகக் காப்பி கொடு. தலையை வலிக்குது."

மதுவைப் பற்றிக் கேட்க நினைத்தவள், அம்மாவாகச் சொல்கிறாளா என்று பார்த்தாள். சுயமரியாதை இடித்தது.

"ஏன்டி உன் மூஞ்சி பேயறைஞ்ச மாதிரி இருக்கு?"

"நீ முதலில் காப்பியைச் சாப்பிடு."

சில நிமிட சிரம பரிகாரத்துக்குப் பிறகு அம்மா கேட்டாள்.

"மது எங்கே? அவளுக்கு ரிசல்ட் வந்து இருக்குமே. குழந்தை பாஸ் பண்ணி இருப்பா. இருந்தாலும் பார்த்துட்டுப் போகலாம்னு வந்தேன்."

"அப்படியென்றால்... மது அங்கேயும் இல்லையா?"

"என்னடி, என்ன ஆச்சு மதுவுக்கென்ன?"

கலாவின் வெளிறிப் போன முகத்தைக் கண்டு அம்மா பதறினாள்.

"மதுவை ரெண்டு நாளாகக் காணோம்மா."

"என்னடி சொல்றே? குழந்தையைக் காணோமா?"

அம்மா புலம்ப ஆரம்பித்து விட்டாள்.

"குழந்தையை நாயடி பேயடி அடிச்சா எந்தக் குழந்தைதான் வீட்டில் இருக்கும்? போன தடவைதான் பார்த்தேனே. அது வாங்கற அடியைப் பார்க்க சகிக்காமலேயே நான் இங்கு வருவதில்லை. தடுத்தா எனக்குத் திட்டு."

"கண்டிச்சு வளர்க்காமல் போனா, நாளைக்குப் பொண்ணை எப்படி வளர்த்திருக்கா பாருன்னு நாலு பேர் சொல்லுவா."

"அதுக்காகக் கண்ணு மண்ணு தெரியாமலா அடிப்பா? அந்த நாளைல அஞ்சாறு வச்சுண்டு சிரமம் தெரியாம வளர்த்தா. இந்த நாளைல ஒண்ணு ரெண்டு வச்சுண்டே இந்தப் பாடு."

"அந்த நாளில் பொண்கள் அதிகம் வேலைக்குப் போகவில்லை. இப்ப அப்படி இல்லை. ஆஞ்சு ஓஞ்சு வீட்டுக்கு வந்தா, இவ படிக்கல்லைன்னா கோபம் வரத்தானே செய்யும்?"

"அப்பக் கூட்டுக் குடும்பம் இருந்தது. குழந்தைகளுக்கு நல்லது கெட்டது சொல்லித் தர பெரியவங்க இருந்தாங்க. இப்பத்தான் மாமியார் கூட இருந்தாலே பாரமாகத் தோணுது. வேலைக்காரிக்குக் கிடைக்கிற மரியாதை கூட மாமியாருக்குக் கிடைப்பதில்லை. வேலைக்காரிக்கென்ன, கடனேன்னு செய்வா. பெரியவங்க இருந்து பார்த்துக்கற மாதிரி ஆகுமா?"

அம்மா எங்கோ ஆரம்பித்துக் கடைசியில் தன்னையே மறைமுகமாகத் தாக்குவதைப் புரிந்து கொண்டாள்.

"நானே மதுவைக் காணோமேன்னு கவலையா இருக்கேன். நீ வேற ஏம்மா?"



**குழந்தைகள் பட்டாசு வெடிக்கும் போது தரையில் புரளும் உடையை அணிவிக்க வேண்டாம். அவ்வேளைகளில் அனாவசிய ஃப்ரில்கள், புசு புசு வகை துணிகளையும் தவிர்த்து, எளிய சுலபத்தில் கழட்டி மாட்டக்கூடிய, உடம்போடு ஒட்டியுள்ள ஆடைகளே பத்திரமானவை.**

**— உஷா**

பிளாட்பாரத்தில் வாங்கும் துணிமணிகளை டெட்டாலில் நனைத்தபின் பயன்படுத்த வேண்டும் என ஒரு சகோதரி எழுதியிருந்தார். உயர்தரமான ரெடிமேட் கடைகளில் வாங்கும் ஷர்ட், பாண்ட்களையும் என் அண்ணன் சோப்பு நீரில் அலசி உலர்த்திய பின்னே அணிவார். ஏனெனில் பலர் அந்தச் சட்டைகளை போட்டுப் பார்த்து கலர், டிசைன், அளவு பொருந்துகிறதா எனப் பார்க்கிறார்கள். தோல் வியாதிகளை, வியர்வை, கிருமிகளையும் தவிர்க்கலாம் அல்லவா?

— மஹிமா



"அவ வந்தா என்ன செய்வீங்க? ரெண்டு பேரும் உங்க கோபம் தீரும் வரைக்கும் அடிச்சு நொறுக்குவீங்க. குழந்தை எங்கேயோ கண் காணாமல் சௌகரியமாக இருக்கட்டும்."

"என்னம்மா இப்படிப் பேசறே? பெத்தவா யாராவது தன் குழந்தைக்குக் கெடுதல் நினைப்பாளா? அடிக்கறேன், திட்டறேன் என்பதற்காக எனக்கு அவ மேலே பாசம் இல்லாமல் போயிடுமா?"

கலா கொஞ்சம் இறங்கி வந்த பிறகு அம்மா பேச ஆரம்பித்தாள்.

"இந்த நாளைய பணக்கஷ்டத்துக்கு ரெண்டு பேரும் வேலைக்குப் போக வேண்டி இருக்கு. ஆபீஸிலும், வீட்டிலும் டென்ஷன்தான். அதுக்காக உங்க கோபத்தையெல்லாம் மதுமேலா காட்டுவது? இன்னும் அஞ்சாறு மாதத்திலே பெரியவளா ஆகிவிடுவா. எல்லா அம்மாவும் அவா குழந்தைகிட்டே எவ்வளவு அன்பா இருக்கா? நம்ம அம்மா மட்டும் இப்படி இருக்காளே என்று தோணாதா? அன்பா, பாசமா சொல்றவிதத்தில் சொன்னால் அவ புரிஞ்சுப்பா. அவ இன்னும் சின்னக் குழந்தை இல்லை. எட்டாவது வந்துட்டா."

கலா மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

"எல்லா அப்பா அம்மாவும் தன் குழந்தை ஃபர்ஸ்ட் வரணும் என்றுதான் நினைப்பா. ஒரு கிளாஸில் அம்பது பேர் இருக்கா. அம்பது பேரும் முதலில் வர முடியுமா? படிப்புத் தவிர வேறு எதிலாவது இண்ட்ரஸ்ட் இருந்தா என்கரேஜ் பண்ணணும். மதுவுக்குப் படம் போடப் பிடிச்சிருக்கு. போட்டுப் பழகட்டுமே. இருபத்து நாலு மணி நேரமும் படி, படின்னு சொன்னா யாருக்குத்தான் எரிச்சல் வராது? ஒரே வேலையைத் தொடர்ந்து செய் என்று சொன்னால் உனக்குக் கூடத்தான் எரிச்சல் வரும்."

அம்மா சொல்வதிலும் நியாயம் இருக்கு. "நீ சொல்றதிலும் உண்மை இருக்கு." கலா மெள்ள முணுமுணுத்தாள்.

"அப்புறம் இன்னொண்ணு. பொண்கள் மாதிரி ஆண்களுக்குப் பொறுமை கிடையாது. ஆபீஸிலிருந்து வந்ததும் வராததுமாக கம்ப்ளெயிண்ட் பண்ணினால், ஆபீஸில் வேலை செய்த களைப்பு, பஸ்ஸில் வந்த எரிச்சல், எல்லாம் சேர்ந்து குழந்தை மேலே விழறது. எல்லாத்தையும் சொல்ல வேண்டாம் என்று சொல்லவில்லை. அவங்களுக்கு எத்தனையோ பிரச்னைகள். நாமதான் பக்குவமா, சமயம் பார்த்து எடுத்துச் சொல்லணும். அது நம்ம கையில்தான் இருக்கு."

கலாவின் மனதுக்குள் ஏதோ சொல்லத் தெரியாத துயரம் அழுத்தியது. மது போனதற்கு நான்தானே காரணம். நான் மட்டும் அன்பாக, பிரியமாக இருந்திருந்தால் மதுவுக்கு இந்த கதி வராது. அவள் கண்களில் நீர் வழிந்தது.

"மது வந்துட்டா அவளைப் போட்டு அடிக்காமல் பிரியமாக இருப்பாயா?"

"நீ கேட்கிறதைப் பார்த்தால் அவளை நீயே ஒளிச்சு வச்சிருக்கிற மாதிரி பேசறே. அவ எப்ப வருவாளோ, அவளை எப்படா பார்ப்போம் என்று மனது கிடந்து துடிக்கிறது. நீ என்னடான்னா கேள்வி மேலே கேள்வி கேட்டுண்டு இருக்கியே."

கலா திடீரென்று உடைந்து போய் அழுதாள்.

"மோசம் போயிட்டேன்மா. கண்டிச்சு வளர்க்கிறேன் என்று சொல்லி அவ மனதை நோக வச்சுட்டேனே. மது எங்கே இருக்காளோ, என்ன கஷ்டப்படறாளோ? எப்ப வருவாள்னே தெரியல்லையே."

அம்மா ஆதரவுடன் அவளைத் தட்டிக் கொடுத்தாள்.

"ஏன் அவசரப்படறே? படம் முடிய அஞ்சரை மணியாகும். அப்புறம் பஸ் பிடிச்சு வர அரை மணி நேரமாவது ஆகாதா?"

"என்னது? சினிமா முடிஞ்சா? நீ என்ன சொல்றே?"

அம்மா நேரிடையாகப் பதில் சொல்லவில்லை.

"குழந்தை பாஸ் பண்ணினதை சந்தோஷமாக ஓடி வந்து கழுத்தைக் கட்டிக் கொண்டு சொல்லணும் போல இருந்ததாம்."

"அதனாலே?"

"பாட்டி., நான் பாஸ் பண்ணிட்டேன்னு என் கழுத்தைக் கட்டிக் கொண்டு அஞ்சு நிமிஷம் விடவேயில்லை. உன்னிடம் சொன்னால் அதுக்கு உன்னிடமிருந்து சரியான பதில் இருக்காதாம்."

"ஏம்மா, இவ்வளவு பேசறியே. அவன் முதல் ரேங்க் எடுத்துப் பாஸ் பண்ணினால் அவளுக்குத்தானே பெருமை? நான் ஆசைப்படறதிலே என்ன தப்பு?"

"உன் ஆசையைத் தப்புன்னு சொல்லல்லை. அதுக்காக அவளைக் குத்திக் கொதறிக் கொண்டே இருந்தால் எப்படி? அடுத்த வீட்டுப் பொண்ணு பாடறதைப் பெருமையாக நினைக்கிற நீ, மது அழகாகப் படம் போடுவதை ஏன் பெருமையாக நினைக்க மறுக்கிறாய்? அவள் வரைந்து அனுப்பி இருந்த பொங்கல் வாழ்த்தை அவள் மாமா எல்லோரிடமும் காட்டி எவ்வளவு சந்தோஷப்பட்டான் தெரியுமா? இந்த வருட ஆண்டு விழாவில் நடந்த டிராயிங் போட்டியில் மது முதல் பரிசு வாங்கி இருக்கா. அதை உன்னிடம் சொல்லி சந்தோஷத்தைப் பகிர்ந்து கொள்ளக் கூட விரும்பவில்லை. அப்ப அவ மனது எவ்வளவு தூரம் வேதனை அடைந்து இருக்கும்?"

அந்தச் சின்ன மனத்தில் இத்தனை வேதனையா? என்னிடம் கூட எதுவும் சொல்லாமல் மௌனமாக நிற்பாளே, அந்த மௌனத்துக்குப் பின் இத்தனை ரணமா?

"இன்றைக்குக் காலையில் பக்கத்து வீட்டுப் பையன் அம்மா என்றால் என்று பாட ஆரம்பித்தான். அதற்கு மது அம்மா என்றால் ராட்சசி என்று பாடினாள். அம்மா என்றால் ராட்சசி இல்லை, அன்பு என்பதைச் செயலில் காட்டு. படம் போட்டு ஆசையாகக் காட்டினால் அதைப் பாராட்டு. கதைப் புத்தகம் படிக்கிறாளா? நல்ல புத்தகமாக வாங்கிக் கொடு. உன்னிடம் பேச வருகிறாளா? உனக்குள்ளே ஆயிரம் பிரச்னை இருந்தாலும் அதை வெளிக் காட்டிக் கொள்ளாமல் அவளிடம் பிரியம் காட்டு."

அம்மா எழுந்து கொண்டாள்.

"நான் சொல்ல வந்ததைச் சொல்லிட்டேன். இப்ப மனது உடைஞ்சு திருச்சியிலிருந்து தஞ்சாவூர்தான் வந்திருக்கா. இன்னமும் நீங்க முரட்டுத்தனமாக நடந்து கொண்டால் அவ எங்கே போவாளோ தெரியாது. திரும்பியும் வரலாம். திரும்பாமலும் இருந்து விடலாம். இந்தக் காலத்துக் குழந்தைகளுக்குத் தைரியமும் தன்னம்பிக்கையும் அதிகம் உண்டு."

"இல்லைம்மா. இனிமேல் அப்படி இருக்க



பட்டாசு விடும் போது கால்களில் ரப்பர், ரெக்சீன், பிளாஸ்டிக் செருப்புகள் அணியாதீர்கள். சூடான கம்பிமத்தாப்புகள் பட்டு அவை உருகும் ஆபத்து உண்டு. தவிர, பாதத்திற்கும் செருப்புக்கும் இடையே சூடான எரிந்த மத்தாப்புகள், தீக்கனல்கள் போய் காலைச் சுடும்.

தவறாமல் கான்வாஸ் அல்லது லெதர் ஷூக்களும் காட்டன் சாக்ஸும் அணியவும்.

— உஷா

மாட்டேன். ஒரு நல்ல அம்மாவா... இல்லை... நீ சொன்னது போல் ஒரு நல்ல சினேகிதியாக இருப்பேன்."

கலாவின் மனத்தில் ஒரு மாற்றம், குரலில் ஒரு உறுதி தெரிந்தது.

"அம்மா, எனக்கு ஒரே ஒரு கேள்வி கேட்கணும்."

அம்மா கேள்விக்காகக் காத்து நின்றாள்.

"ஏம்மா, நீ வந்த போது அவளைக் காணோம் என்று எவ்வளவு பதறினேன். தவிச்சேன். அவ அங்கேதான் இருக்கா என்று ஒரு வார்த்தை வந்தவுடனே சொன்னால் என்ன?"

"வந்தவுடனே சொன்னா என்ன செஞ்சிருப்பாய்? அவ எந்த தியேட்டருக்குப் போயிருக்காளோ அங்கேயே போய் அவ காலை உடைச்சுப் போட்டிருப்பாய். அவளைக் கட்டாயப்படுத்தி நான்தான் எங்களோடு வந்த உங்கண்ணாவோடு சினிமாவுக்குப் போகச் சொன்னேன். அவ இங்கே வரவே பயந்தாள். நான் அவளை சமாதானப்படுத்தி உன்னையும் பார்த்துக் கொஞ்சம் சொல்வதாகச் சொன்னேன். நீயும் இப்போது கொஞ்சம் புரிந்து கொண்டிருப்பாய் என்று நினைக்கிறேன்."

அம்மா ஓய்வெடுக்கப் போய் விட்டாள்.

கலா அங்கேயே நின்று கொண்டிருந்தாள். ஒரு புதிய அம்மாவாக, மதுவுக்கு நல்ல தோழியாக.

அழைப்பு மணியின் ஓசைக்கு, மதுவின் வருகைக்காகக் காத்துக் கொண்டிருந்தாள் கலா.

# இந்த மாதம் எப்படி?



நவம்பர் '96



## மேஷ ராசி :

*அசுவினி, பரணி, கிருத்திகை 1ம் பாதம்.*

சனி லாபத்தில் இருப்பதால் தொழிலில் முன்னேற்றம் உண்டு. அலுவலகப் பணியாளர்கள், வங்கித் துறையினர், மற்றும் நீதித் துறையினர்களுக்கு நன்மை பயக்கும் காலகட்டம். கருங்கல் வியாபாரிகளுக்கு ராகுவால் அனுகூலம் உண்டு. தென்மேற்கு திசையிலிருந்து நல்லதொரு செய்தி வரலாம். அல்லது தன லாபமாகக் கூட இருக்கலாம். வெளிநாட்டுப் பிரயாணமும் ஏற்பட வாய்ப்புண்டு. ராசிக்குக் குருபார்வை இருப்பதால் திருமணம் நடைபெற வேண்டியவர்களுக்கு அதற்குரிய குருபலம் வந்துள்ளது. சுக்கிரனது சஞ்சாரம் சாதகமாக இல்லை. எனவே, வாழ்க்கைத் துணைவர்கள் ஒருவருக்கொருவர் எதிர்த்துப் பேசாமலும், வாதத்தில் ஈடு படாமலும், கூடியமட்டும் பொறுமையுடனும் இருப்பது நலம். வஸ்திர லாபம், வாகன லாபம், சுபநிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளும் வாய்ப்பும் கூட ஏற்படலாம். செவ்வாய் கிரகத்தால் செலவினங்கள் கூடலாம். தாய் வழிச் சந்ததியார்களில் எவருக்கேனும் உடல்நலம் குன்றும் வாய்ப்பும் உண்டு. திருமுருகாற்றுப்படையை தினமும் ஒருமுறை படிப்பது நல்லது. அரசியல்வாதிகள் கவனித்துச் செயல்பட வேண்டிய காலகட்டம். அது போலவே அரசுப் பணியில் உள்ளவர்களில் குறிப்பாக உயர்பதவியில் உள்ளவர்கள் தங்களுக்கு வரும் கட்டளைகள் எழுத்து மூலமாகப் பெற்றே நிறைவேற்றுவது நல்லது.



## ரிஷப ராசி :

*கிருத்திகை 2,3,4 - ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 - ஆம் பாதங்கள்.*

மாதத்தின் முற்பகுதியில் சூரியனால் அரசுத் துறையில் உள்ளவர்களுக்கு அனுகூலமான நிலை. அது பதவி உயர்வு மூலமும் ஏற்படலாம். அல்லது விரும்பிய இடத்திற்கு மாற்றலாகும் காரணத்தாலும் உண்டாகலாம். பிற்பகுதிகளில் மேலதிகாரிகளால் தொல்லை ஏற்படலாம். புதனால் பொருள் வரவும் உண்டு. அத்துடன் எதிர்பாராத வம்புகளும் உண்டு. சகோதரர்களுடனும், பந்துஜனங்களுடனும் பகை ஏற்படலாம். அதற்குச் செவ்வாய் காரணமாகலாம். எதிலும், எப்பொழுதும் அமைதியைக் கடைப்பிடிப்பது நல்லது. யோககாரனாகிய சனி நல்லது செய்ய வேண்டும். அஷ்டமத்தில் உள்ள குரு உங்களுக்குக் கெடுதல் செய்ய நியாயமில்லை. தோலாடை மற்றும் பருத்தியாடைகள் சம்பந்தமான தொழிலில் உள்ளவர்களுக்கு நல்லதொரு லாபம் கிடைக்கலாம். ராகு தந்தைவழிப் பாட்டனாருக்கு உடல்நலம் குன்றச் செய்யலாம். பிற்பகுதியை விட முற்பகுதியில் குடும்ப வாழ்க்கை நன்றாக இருக்கும். சில புண்ணிய ஸ்தலங்களுக்கு விஜயம் செய்யும் யோகமும் உண்டு. வங்கித் துறை மற்றும் நீதி, நீதித்துறைகளில் பணிபுரிவோர் சற்று எச்சரிக்கையுடன் செயல்படுவது நல்லது. லக்ஷ்மி, துர்க்கை தோத்திரங்களைப் படிப்பது நல்லது. நவம்பர் 22-ந் தேதியில் வரும் உத்தான துவாதசி அன்று மாலை துளசி பூஜை செய்து ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் துளசிக்கும் திருமணம் செய்வதாகப் பாவித்து பூஜை செய்தால் தடைபடும் திருமணம் கைகூடி வரும்.



திரட்டுப்பால் கிளறும் பொழுது, வெதுவெதுப்பான பாலில், கால் கிலோ இனிப்பு இல்லாத கோவாவைக் கரைத்து அடுப்பில் வைத்துக் கிளறுங்கள். இனிப்பு இல்லாத கோவாக் கிடைக்காதவர்கள் மொத்த பாலையும் அடுப்பில் வைத்துக் கிளறாமல், பாலை கொஞ்ச கொஞ்சமாக பால் கண்ட, கண்ட வற்றிக் கிளறினாலும் எளிதில் திரட்டுப்பால் கிடைக்கும். இது என் கணவரின் பாட்டி எனக்குச் சொல்லிக் கொடுத்த முறை.

— மஹிமா

## மிதுன ராசி :



*மிருகசீரிஷம் 3, 4 ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3 - ஆம் பாதங்கள்.*

அங்காரகனால் அனைத்து முயற்சிகளிலும் வெற்றி உண்டு. சுக்கிரனால் சுகமும் உண்டு. அதே சமயம் குருவும் உங்கள் ராசியைப் பார்க்கிறாரே! வேறென்ன வேண்டும்? சூரியன் கூட மாதத்தின் பிற்பகுதியில் பதவி உயர்வையோ அல்லது பண உதவியையோ கிடைக்கும்படி அருள்பாலிக்கிறார். உடல்நலமும் மன நலமும் நன்கு இருக்கும். சனியாலும், பாம்புக் கிரகங்களும் சற்று தொல்லைகளையும் தர இருக்கிறார்கள். உற்றமும், சுற்றமும் உங்களுடன் சற்று விரோதம் பாராட்ட வேண்டிய நிலை ஏற்படும். பகலில் பக்கம் பார்த்துப் பேசுங்கள்.

பொறுத்தமட்டில் சற்றுக் கடுமையான பற்றாக் குறைக்கு வாய்ப்பு உண்டு. இதை நீக்கத் தீபாவளி அமாவாசையன்று மாலை ஸ்ரீலக்ஷ்மி, குபேர பூஜை செய்வது மிகவும் விசேஷம். ஒரு லக்ஷ்மி படமும், தட்டில் சில நாணயங்களும் வைத்து, தீபமேற்றி, படத்திற்குக் குங்குமத்தாலும், புஷ்பத்தாலும், அந்த நாணயங்களைக் கொண்டும், ஸ்ரீலக்ஷ்மி அஷ்டோத்திரம் சொல்லி அர்ச்சனை செய்து தூப தீப நைவேத்தியம் நீராஞ்சனத்துடன் முடிக்கலாம். பால் பாயாசம், ரவாகேசரி போன்றவை நிவேதனம் செய்யலாம். உங்கள் பொருளாதார நிலை உயர வரம் அருளும்படி கண்ணீர் சிந்துருக ஸ்ரீலக்ஷ்மி ஸ்தோத்திரம் போன்றவை கூறுங்கள். நம்பிக்கையுடன் செய்யுங்கள். நல்லது நடக்கும். ராகு ஒருவனே உதவும் நிலை. நீச சுக்கிரனும் உதவலாம். மற்றபடி வேறு கிரகங்களால்

இருப்பதால் கவலைப்படத் தேவையில்லை. புதனால் தனலாபமோ, பதவி லாபமோ ஏற்படலாம். பத்திரிகை, படத்துறை மற்றும் கலைத்துறையினருக்கு நல்லதொரு வாய்ப்பு மாதத்தின் மூன்றாவது வாரத்தில் ஏற்படும். ஆக்கப்பூர்வமான அணுகுமுறையுடன் அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளலாம். எது எப்படி இருப்பினும் சனிஸ்வர சஞ்சாரம் உங்களுக்கு உகந்த நிலையில் இல்லை. உடல்நிலை, உளநிலை இரண்டுமே பாதிக்கப்படும் நிலை தெரிகிறது. எனவே கார்த்திகேயனுக்கும், கதிரவனுக்கும், சனீஸ்வரனுக்கும் ப்ரீதியாகப் பக்தியுடன் அவர்கள் சம்பந்தப்பட்ட பாடல்களை அல்லது ஸ்லோகங்களைப் படிப்பது நல்லது. கார்த்திகைத் திருநாளில் திருவண்ணாமலை சென்று, அண்ணாமலையானையும், அங்கு ஏற்றப்படும் கார்த்திகைச் சோதியையும் பார்த்தாலே போதும். அனைத்து கஷ்டங்களும் விலகி உள்ளத்தில் ஓர் அருள் ஒளியைப் பெற்று உயர்வீர்கள். தெய்வீகத் திருவருளையும் பெறுவீர்கள்.



## கன்னி ராசி :

*உத்திரம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 ஆம் பாதங்கள்.*

கடந்த சில மாதங்களில் விருந்த குழப்பங்களோ, சங்கடங்களோ, அல்லது அமைதியற்ற நிலையோ தற்போது இருக்க நியாயமில்லை. சற்று தெம்பை ஏற்படுத்தும் நிலையில் சனீஸ்வரன் உள்ளார். சுக்கிரனும் மாதத்தின் பிற்பகுதியில் உதவுவார். ஆனால் மற்ற கிரகங்கள் சாதகமாகச் சஞ்சரிக்கவில்லை. தசாபுக்தி நன்கு அமைந்தவர்களுக்கும், சனி ஆட்சியிலிருந்து அவரது தசை அல்லது புக்தி நடப்பவர்களுக்கும் கவலை தேவையில்லை. மற்றவர்கள் குலதெய்வத்திற்கும் செவ்வாய் கிரகத்திற்கும் சூரியனுக்கும் அர்ச்சனை செய்வது நல்லது. அருகில் உள்ள சில விஷ்ணு ஆலயங்களுக்குச் சென்று வழிபடுதல் நன்று. வங்கிப்பணி பெரிய நிறுவனங்களில் பணிபுரிவோர், அரசியல்வாதிகள், அரசுத் துறையினர் ஆகிய அனைவரும் கவனமுடன் பணி ஆற்ற வேண்டிய காலகட்டம். ஏமாற்றமும் பொருளிழப்பும் கூட ஏற்பட வாய்ப்பு உண்டு. கைகூடி வரும் சுபநிகழ்ச்சிகளைத் தள்ளிப் போடாமல் உடனடியாக நடத்துவது நல்லது. வெளிநாட்டுச் செய்திகள் எதிர்பார்த்தபடி பயனுள்ளதாக வரலாம். வெள்ளிக்கிழமைகளில் புற்றுக்குப் பால் வார்ப்பது நல்லது. அதிகம் உறவாடி வருபவர்களுடன் அளவுடன் தொடர்பு வைத்துக் கொள்வது, பிறர் விஷயங்களில் தலையிடாது இருப்பது ஆகியவைகளைக் கடைப்பிடித்து நடந்து கொள்ள வேண்டிய தருணம். அனுபவித்துக் கழிக்க வேண்டிய மாதம்.

## துலா ராசி :



*சித்திரை 3, 4 - ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 - ஆம் பாதங்கள்.*

சுவாதி நட்சத்திரத்தில் பெண் எடு அல்லது சுவாதி நட்சத்திரத்தில் திருமணம் செய் என்பது பழமொழி. அந்த அளவிற்கு ஒரு பவித்திரமாகக் கொண்டாடப்படும் சுவாதி நட்சத்திரக்காரர்களுக்கு இந்த மாதம் ஸ்ரீ சுப்பிரமணியரின் பூரண அருள் உண்டு. பொதுவாக துலாராசிக் காரர்களுக்குக் கேதுவும் உதவுவார்கள். சுக்கிரனால் இல்லறத்தில் பிரச்னை ஏதுமின்றி மகிழ்ச்சியுடன் கழியும். பழைய பாக்கிகள் வசூலாதல், எடுத்த காரியத்தில் வெற்றி என நற்பலன்கள் உண்டென்றாலும், மற்ற கிரகங்கள் அந்த அளவிற்கு உதவும் நிலையிலில்லை. சுபநிகழ்ச்சி நடைபெறும். திரிகோணாதிபதியான குரு ஆட்சியில் இருந்து 11ம் இடமான சிம்மத்தைப் பார்ப்பதால் பெருந்தொகையொன்று கிடைக்கலாம். அது தொழில் மூலமும் வரலாம். அல்லது பழைய பாக்கியாகவும் திரும்பக் கிடைக்கலாம். மற்றபடி ஏற்றத் தாழ்வு மிக்க மாதமே.



**கார்த்திகைக்கு, நெல்பொரி, அவல் பொரி உருண்டை செய்கிறோம். நிவேதனத்துக்கு, 5, 5 உருண்டைகள் செய்துவிட்டு, மீதிப் பொரியில், வேர்க்கடலை, பொட்டுக்கடலை, வறுத்த எள் கலந்து, ரோஸ் எஸென்ஸ் விட்டுப் பிடியுங்கள். அடுத்த கார்த்திகை எப்ப வரும் என்று குழந்தைகள் துளைக்க ஆரம்பித்து விடுவார்கள்.**

**— ஆர். பார்வதி**





கோதுமை மாவு 1 பங்கு, மைதா ஒரு பங்கு, ரவை ஒரு பங்கு. (3 டம்ளர் என்று வைத்துக் கொண்டால்). சோடாமாவு சிட்டிகையுடன் 50 கிராம் டால்டாவை, ஒரு கிண்ணத்தில் போட்டு, கையால் நன்கு நுரை வரும் வரை 5 நிமிடம் குழைத்து மாவில் போட்டு, ஓமம் 2 ஸ்பூன், உப்புப் போட்டுத் தண்ணீர் தெளித்துக் கெட்டியாகப் பிசைந்து 5 நிமிடம் மூடி வைத்துப் பிறகு ½ இஞ்ச் கனமாக இட்டு, டைமன் வடிவில் கத்தரித்து, இளந்தீயில் எண்ணெயில் போட்டு எடுக்க, மிகவும் கரகரப்பாக இருக்கும். சர்க்கரை சேர்த்தும் செய்யலாம். இனிப்புக்கு ஏலக்காய் விட வேண்டும்.

— பார்வதி

❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁

உடல்நிலை சற்று பாதிக்கப்பட்டாலும், தக்க சமயத்தில் மருத்துவ உதவியைப் பெறுவது நல்லது. கேதுவால் தடங்கல்கள் அகலும்.

## விருச்சிக ராசி :



*விசாகம் 4 -ஆம் பாதம், அனுஷம், கேட்டை.*

அனுகூலம் அதிகம் - பிரதிகூலம் குறைவு என்ற நிலை. சுபநிகழ்ச்சி கட்டாயம் நடக்கும். திருமணத்திற்குக் காத்திருப்பவர்களுக்குத் திருமணம் கைகூடி வரும். சுக்கிரனால் சுகமுண்டு - குடும்பத்தில் குறிப்பாகத் தம்பதியர்களுக்குள் ஒற்றுமை நன்கு காணப்படும். அதனால் பல பிரச்னைகளை மனம் விட்டுப் பேசித் தீர்த்துக் கொள்ள நல்லதொரு வாய்ப்பு. பயன்படுத்திக் கொள்ளுங்கள். அரசியல்வாதிகள், அரசுத் துறையினர், வங்கி போன்ற நிதி நிறுவனங்களிலும் பணிபுரிவோருக்கும் பதவி உயர்வு உண்டு. இராசிநாதனாகிய செவ்வாயைக் குரு பார்ப்பதால் கடன் தொல்லை குறையும். எதிர்பார்க்கும் இடமாற்றம் ஏற்படலாம். இலக்கியச் சொற்பொழிவாளர்கள், இசை அமைப்பாளர்கள், இசைக் கலைஞர்கள், வாத்தியக் கலைஞர்கள் ஆகியோர் பாராட்டையும், பரிசையும், அத்துடன் புது ஒப்பந்தங்களைப் பெற்றுப் பயனடைவர். எழுத்தாளர்களுக்கு ஏற்றமிகு காலம். குறிப்பாக சந்திரன் உச்சம் பெறும் 24, 25 தேதிகளில் எதிர்பார்த்த தனலாபம் கிடைக்கலாம். பாம்பன் சுவாமிகளின் ஷண்முகக் கவசம், மற்றும் அருணகிரிநாதரின் பாடல்களைப் படிப்பதால் மனதிற்கு நிம்மதியும், சிரமங்களிலிருந்து ஓரளவுக்கு விடுதலையும் கிடைக்கும்.



## தனுசு ராசி :

*மூலம், பூராடம், உத்திராடம் 1 - ஆம் பாதம்.*

சனீஸ்வரனால் தொழிலில் மேன்மை உண்டு. இராசிநாதன் ஆட்சியில் உள்ளதால் சுபநிகழ்ச்சிக்கு இடம் உண்டு. மாதத்தின் முற்பகுதியில் எதிர்பார்த்த எந்த இனத்திலோ, அல்லது நீங்கள் செய்த முயற்சியிலோ வெற்றி கிடைக்கும். அது உத்தியோக விஷயமாகவும் இருக்கலாம். அல்லது கோர்ட், அல்லது புதுத்தொழில் விஷயமாகவும் இருக்கலாம். குரு, சனி, மற்றும் சுக்கிரன் ஆட்சியில் இருந்து அவர்களது தசாபுக்தி நடப்பவர்களுக்கு ஏற்படும் எப்பிரச்சினையும் அல்லது முடிவுறாத எந்த விஷயமும் வெற்றியுடன் முடியும். வெளிநாட்டுப் பிரயாணமும் ஏற்படலாம். ஆலங்குடி, ஓமாம்புலியூர் மற்றும் திருச்செந்தூர் போன்ற இடங்களுக்கு வசதி படைத்தவர்கள் போய் வரலாம் - நேரம், காலம் நிதிநிலை காரணமாகப் போக முடியாதவர்கள் உள்ளூர் சிவன் கோவிலுக்குச் சென்று தட்சிணாமூர்த்தி சன்னதியில் அவர் சம்பந்தப்பட்ட ஸ்தோத்திரம் படிக்கலாம். அப்படியும் போக முடியாதவர்கள் "சிவ மானஸ" பூஜா ஸ்தோத்திரத்தை வீட்டிலேயே ஆழ்ந்த தியான நிலையில் படிக்கலாம். எல்லாவற்றிற்கும் நம்பிக்கையும் விடாமுயற்சியும்தான் தேவை.

## மகர ராசி :



*உத்திராடம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 ஆம் பாதங்கள்.*

கேதுவால் வீட்டில் திருமணம் ஒன்று நடத்த ஏற்பாடாகும். மாதத்தின் இறுதியில் புதன், சூரியன் ஆகியவர்களால் அரசாங்கத்திலிருந்து, எதிர்பார்க்கும் செய்தி நீங்கள் மகிழும் வண்ணம் வரலாம். தொழிலில் முன்னேற்றம் ஏற்படும். உத்தியோகத்தில் உள்ளவர்களுக்குப் பதவி உயர்வும் பணவரவும் உண்டு. இது எத்துறையினர்க்கும் பொருந்தும். சுகஸ்தானம் எனும் 4-ம் இடத்தைக் குரு பார்ப்பதால் ஆரோக்கியம் கெடாது. அதுபோலவே 6-ம் இடத்தையும் 8-ம் இடத்தையும் குரு பார்ப்பதால் கஷ்டங்கள் குறையும். எதிரிகள் ஏமாற்றமடைவார்கள். எதிலும் வெற்றி உங்களுக்கே. கணவன் மனைவி உறவும் சுமுகமாக இருக்கலாம் என்றாலும் மாத ஆரம்பத்தில் சற்று ஏறுமாறாக அமையலாம். ஆனால் பிற்பகுதியில் எல்லாவிதங்களிலும் நன்மை உண்டு. அஷ்டமத்தில் உள்ள

அங்காரகனைக் குரு பார்ப்பதால் கடன் தொல்லை, மற்றும் இரத்த சம்பந்தமான நோய்களின் வேகம் ஆகியவை குறையலாம். அரசியலில் உள்ளவர்களுக்கு இராகுவால் சிற்சில சோதனைகள் உண்டு. எனவே காளஹஸ்தி, திருநாகேஸ்வரம் சென்று இராகுவுக்கு அபிஷேகம் முதலானவற்றைச் செய்து வரலாம். வார்த்தைகளைப் பக்குவமாக அளந்து பேசுவது நல்லது எனத் தெரிகிறது. துர்கா ஸ்தோத்திரம், சனீச்சுவர ஸ்தோத்திரம் இவைகளைப் பொருளுணர்ந்து படிப்பது நல்லது.



## கும்ப ராசி :

*அவிட்டம் 3, 4 – ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 – ஆம் பாதங்கள்.*

ராசிநாதன் ஆட்சியில் இருப்பதால் 7½ சனியின் தொல்லை அதிகமிருக்காது. அதே சமயம் இலாபஸ்தானத்தில் குரு இருப்பதையும், புதன் மாதக் கடைசியில் குருவுடன் சம்பந்தப்படுவதையும் பார்க்கும் போது குழந்தைகளின் கல்வி சம்பந்தமான பிரச்னை அதிகமிராது. மாதத்தின் பிற்பகுதியில் சூரியனால் கலைஞர்களுக்குக் கீர்த்தியும் சுக்கிரனால் குடும்ப சுகமும் உண்டாகும். திரைப்படத் துறையினர், இசைக் கலைஞர்கள், புது நடிகர்கள் ஆகியவர்களுக்கு நல்லதொரு வாய்ப்பு வந்து, அவர்களது முன்னேற்றத்திற்கு உதவும் நிலை தெரிகிறது. எனவே நன்கு பயன்படுத்திக் கொள்ளுங்கள். மற்றபடி இதர கிரகங்களினால் நன்மை ஏற்படாது. கூடிய மட்டும் புது முயற்சிகள் எதுவும் தொழில் சம்பந்தமாக எடுக்க வேண்டாம். கருப்புக்கல், இரசாயனத் தொழில்களில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு நற்காலம் ஆரம்பமாகிறது. எனினும் செவ்வாய், சனி பார்வைகள் கடன் தொல்லையை உண்டாக்கலாம். காவல் துறையினர் மிகவும் கவனத்துடன் செயலாற்றுதல் அவசியம். சிறு தவறும் உங்களைப் பாதிக்கலாம். வெளிநாட்டுப் பிரயாணத்திற்கு வாய்ப்பு உள்ளது. விநாயகர், துர்க்கை மற்றும் சனீஸ்வரன் ஆகியோர்களை முறைப்படி வீட்டினுள்ள படங்களை வைத்தே பூஜை செய்வது நல்லது.

**ஒரு நாள் வீட்டில் உள்ளவர்கள் அரை குறையாக உபயோகித்துவிட்டு மீதம் வைத்த ஷாம்பு பாக்கெட்களை, வாஷிங் மிஷினில் துணி துவைக்கும் போது சோப்பு நீருடன் கலந்து துவைத்தேன். துணிகள் காய்ந்ததும், இதமான, வாசனை அனைவரையும் அசத்தியது!**

**— ஜெயா**



## மீன ராசி :



*பூரட்டாதி 4 – ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.*

செவ்வாய் சுகத்திற்கும், கடன் நிவாரணத்திற்கும் உதவுவார். சக்தி விநாயகரைத் தொழுங்கள். உங்கள் செயல்கள் யாவும் சித்தி அடையும். புதனும் உதவுவார். ஜோதிடர்கள், வக்கீல்கள், அரசியல்வாதிகள் ஆதாயம் அடைய புதன் காரணமாகிறார். மாத ஆரம்பத்தில் குடும்பத்தில் மன அமைதி குறையலாம். இராசிநாதன் ஆட்சியில் இருப்பதால் தீமை குறையும். நன்மை நிறையும். அலுவலகப் பெண்டிர், ஆசிரியைகள், மற்றும் அரசுத் துறையில் உள்ளவர்கள் அனைவருக்கும் செவ்வாய் உடனிருந்து உதவுகிறார். எனவே வேலாயுதனைத் தொழுங்கள். நல்லதொரு ஆதாயம் எதிலும் பெறலாம். இது எத்துறையினருக்கும் பொருந்தும். திருமணம் கைகூடிவரும். மற்ற பாவக் கிரகங்களும், சுப கிரகங்களில் சிலவும் சற்று சோதனைகளைத் தந்து வேதனைக்கு ஆளாக்கலாம். அதனால் அடுத்தவர் விஷயத்தில் தலையிடாக் கொள்கையைப் பின்பற்றவே தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம், சிவாலய விஜயம் ஆகியவைகளை முக்கியமாகச் செய்வது நல்லது. அனுபவித்துக் கழிக்க வேண்டிய மாதமே!

***பின்குறிப்பு :** அடுத்த மாதம் நிகழ இருக்கும் குருப் பெயர்ச்சியினால் ஏற்படும் பலாபலன்களையும், பரிகாரங்களையும் சில விசேஷக் குறிப்புடன் எழுதப்படும். அவற்றைப் படிக்கும் உங்கள் அனைவருக்கும் குரு பகவானின் பூரண அருள் கிட்டுமாக!*

**— ஜெயலட்சுமி கிருஷ்ணன்**

# திருமுருகா

ரியல் எஸ்டேட் - பைனான்ஸ்
மற்றும் தொகுப்பு நிறுவனங்கள்

73, ரங்கநாதன் தெரு, வி.கே.கே. டிரேட் சென்டர், 2வது மாடி,
தி. நகர், சென்னை-17. போன் : 4347833, 6260079

கிளை : H-5/59 South Extension Part I, P.S. House புதுடெல்லி-110049. போன் : 4644179

## தீபாவளியை முன்னிட்டு

ஓராண்டிற்கு ரூ.10,000/- டிபாசிட் செய்பவர்களுக்கு ஒரு கிராம் தங்க காசும், ஒரு வெள்ளி குத்து விளக்கும் சிறப்பு பரிசாக 30-11-96 வரை வழங்கப்படும்.



| காலம் | குறைந்தபட்ச டெபாசிட் | வட்டி | ஊக்கத் தொகை |
|---|---|---|---|
| 3 மாதம் | ரூ. 5000/- | 24% | 2% |
| 6 மாதம் | ரூ. 5000/- | 26% | 3% |
| 9 மாதம் | ரூ. 5000/- | 28% | 4% |
| ஒரு ஆண்டும் அதற்கு மேலும் | ரூ. 5000/- | 30% | 6% |

## சார் ! என்னைக் கொஞ்சம் படியுங்க சார்! ப்ளீஸ்!!

பொதுஜனம் : என்னப்பா, கதை உடறே? 30% வட்டி எப்படி கொடுப்பாய்? தனியார் கம்பெனிகளெல்லாம் சூறாவளி காற்றில் சிக்கித் தவிக்குது. விளம்பரம் ஒரு கேடா? நீ எப்ப பணத்தை சுருட்டிகிட்டு ஓடப்போறே?

திருமுருகா : கடந்த ஒரு வருடமாக வசனம் பேசிட்டு 'நான் ஓடமுடியாது'ன்னு சொல்லிகிட்டு இருக்கேன் சார். நான் ஒரு விருப்ப ஓய்வு பெற்ற (Voluntarily Retired) தாசில்தார். நானும் பென்ஷன் வாங்குகிற முன்னாள் அரசு ஊழியன் சார். இந்த கம்பெனிக்கு [illegible] பக்கத்திலே 'திருமுருகா'ன்னு ஒரு நகர் சொந்தமாய் இருக்கு. இதிலே 20 கிரவுண்டு இன்னும் விற்காமல் இருக்கு சார். பாடி-கொரட்டூரிலே கூட 200 கிரவுண்டு நிலம் டெவலப் செய்ய இருக்கு சார். கடம்பத்தூரில் வஜ்ஜிரவேலு நகரிலே 205 கிரவுண்டு விற்பதற்கு இருக்கு சார். 70 ஏக்கர் விவசாய நிலம் இருக்கு சார். இவையெல்லாம் கம்பெனிக்குச் சொந்தமான நிலம் தான் சார். மேலும் எங்களுக்கு Fibre Glass Industry, Nation Agency வீட்டுமனை விற்பனை இவைகளால் அதிக லாபம் கிடைக்குது. அதை வைத்து 30% ஆண்டு வட்டி கொடுக்கிறோம் சார்.

பொதுஜனம் : எப்பா ரொம்ப கஷ்டப்பட்டு சம்பாதிச்ச பணம் அப்பா. எடுத்துகிட்டு ஊரை விட்டு ஓடிட்டியானால், என் கதி என்ன ஆகும். Safety தாம்பா முக்கியம். வேற ஆளை பாருப்பா?

திருமுருகா : சார், எங்கள் கம்பெனிக்கு கோடிக்கணக்கான சொத்துக்கள் உள்ளன. 10 ரூபாய் கடனுக்காக 100 ரூபாய் சொத்தை விட்டுட்டு ஓட முடியாது சார். கொஞ்சம் யோசிங்கள் சார். டிபாசிட்டுகள் முதிர்ச்சி (Maturity) அடைந்த அன்றே திருப்பி கொடுத்து விடுகிறோம். வட்டியும் குறித்த தேதியில் கொடுக்கிறோம்.

பொதுஜனம் : இவ்வளவு சொத்து வைத்திருக்கிறேன் என்று கூறுகிறாய். அரசு வங்கிகளில் கடன் வாங்கலாமே?

திருமுருகா : சார், தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளில் ரியல் எஸ்டேட் தொழிலுக்கும், நிலத்தை வீட்டு மனைகளாக டெவலப் செய்து விற்பதற்கும் கடன் கொடுப்பதில்லை சார். அதனாலே தனியார் பைனான்சியர்கிட்டே 36% (p.a) வட்டிக்கு எங்கள் சொத்துக்களை செக்யூரிட்டியாகக் கொடுத்து கடன் வாங்கினோம். இப்ப உங்ககிட்ட 30% (p.a) வாங்குவது லாபந்தானே சார். எங்கள் கம்பெனி சொத்துக்களையும், திட்டங்களையும் பார்த்துட்டு டெபாசிட் செய்யுங்க சார்!

# என்ன கோர்ஸ், எங்கு படிக்கலாம்?



**முதல் பரிசு ரூ. 500/- பரிசு பெறும் கட்டுரை:**

"வெண்மைப் புரட்சி" (White Revolution) அநேகமாக நம்மில் பலருக்கு இன்னும் எட்டாத விஷயம். இப்புரட்சி வளர உதவியாக நம் நாட்டிலும் ஒருதுறை 1923 ஆம் ஆண்டே துவக்கப்பட்டுள்ளது. அதுதான் பால் வளத்துறை அதாவது, Dairy Technology. இள நிலை, முதுநிலை, ஆராய்ச்சி நிலை என அனைத்து நிலைகளும் உள்ள துறை.

10 ஆம் வகுப்பு முடித்து 11-ம் வகுப்பில் என் மகள் அடி எடுத்து வைக்கும் பொழுது எனது மாமா டாக்டர். வே. ஞான பிரகாசம் (துணை வேந்தர் ஓய்வு. கால்நடை மருத்துவ பல்கலைக் கழகம்) அவர்கள், "நீயும் உன் பிள்ளையை அனைவரையும் போல் மருத்துவம் பொறியியல் என்ற துறையில் மட்டும் சேர்க்கும் எண்ணத்தை விட்டுவிடு. ஹரியானா மாநிலத்தில் கர்நால் என்னுமிடத்தில் உள்ள Dairy Technology 4 வருட B.Tech Course ல் சேர்ப்பது பற்றி யோசி. அது நம் ஊர் ஒதுக்கீடுகளுக்குக் கீழ் வராத அனைத்திந்திய அளவில் வருகின்ற பாடத்திட்டம். தமிழ் நாட்டிற்கு என்று தனி ஒதுக்கீடும் உள்ளது. இதில் என்ன பரிதாபம் என்றால், யாருமே இதை உபயோகப்படுத்துவதில்லை, என்பதுதான். நீயாவது அது பற்றி யோசி" என்றார். இந்தக் கோர்ஸ் பற்றிய அவர் கூறிய விவரம் :

1. National Dairy Research Institute (NDRI) என்பது இதன் பெயர். உலகப் புகழ் பெற்ற மாபெரும் ஆராய்ச்சி நிறுவனம்.

2. +2 வில் 55% சதவிகித மதிப்பெண்கள் மட்டுமே போதுமானது.

3. அவர்கள் நடத்தும் நுழைவுத் தேர்வில் வாங்கும் மதிப்பெண்களுக்கேற்ற தகுதி அடிப்படையில் மட்டுமே சேர்க்கை.

4. நுழைவுத் தேர்வு கேள்விகள், அடிப்படை கணிதம், வேதியல், இயற்பியல் மற்றும் பொது அறிவு சம்பந்தப்பட்டது.

5. தகுதியுள்ள மாணவனுக்கும் பல நிறுவனங்கள் மாதாந்திர உதவித் தொகை வழங்குகின்றன.

6. கடைசி வருடப் படிப்பில் பல நல்ல பால் பொருள் நிறுவனங்கள் (அமுல், ஹார்லிக்ஸ், மற்றும் பல) நேர்முகத் தேர்வு வைத்து வேலைக்கு எடுத்துக் கொள்கின்றன. இதில் சில மேல்நாட்டு நிறுவனங்களும் அடங்கும்.

7. முதுநிலை படிப்பும், ஆராய்ச்சிப் படிப்பும் இம் மையத்தின் சிறப்பம்சம்.

8. மத்திய அரசின் கீழ் வருவதால் மிகவும் குறைந்த கட்டணமே. வருடத்திற்கு சராசரியாக ரூ. 500/- மட்டுமே. விடுதிக்கு மாதம் ரூ. 500/- தான்.

9. இது சம்பந்தமான விளம்பரம், மார்ச், ஏப்ரலில் Employment News லும் ஹிந்துவிலும் வருகிறது.

10 விண்ணப்ப படிவம் அனுப்ப கடைசி நாள் மே 17-ம் தேதி. நுழைவுத் தேர்வு ஜூனின் 3வது வாரத்தில். (இந்த வருடம் முதல் சென்னையில் கால்நடை மருத்துவக் கல்லூரியிலே எழுதும் வசதி).

11. தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி : The Joint Director, National Dairy Research Institute, Karnal - 132 001. Haryana.

— வி.எஸ். சுசீந்தா.

இந்தியாவிலேயே முதன் முதலாக Foot Wear Technology Diploma Course ஆம்பூரில் இந்த வருடம்தான் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. இதில் தோல் தேர்ந்தெடுத்தல், பதனிடுதல், கட்டிங், டிசைனிங் எல்லாம் சொல்லிக் கொடுக்கப்படுகிறது. அத்துடன் தோலில் என்னென்ன பொருட்கள் செய்யலாம், அது செய்

டும் முறையும் கற்றுக் கொடுக்கப்படுகிறது. இது 18 மாத கோர்ஸ். சென்னையிலுள்ள Central Leather Research Centre உடன் இணைக்கப்பட்டுள்ளது. இதற்கு வேலை வாய்ப்புகள், முடித்த உடனேயே தேடி வரும். காம்பஸ் இண்டர்வியூவும் உண்டு. பக்கத்திலேயே நிறைய ஷூ தொழிற்சாலைகள் இருப்பதால் செய்முறை ப்ராஜக்ட் ஒர்க் நல்ல முறையில் கற்றுக் கொடுக்கப்படுகிறது.

முகவரி :

The Principal,
KCET
Sholur, Ambur, N.A.Dt. Pin - 635 814.

மற்றுமொரு interesting ஆன Course C.F.A., இது graduation முடித்தவர்கள் வீட்டிலேயே Postal மூலம் படிக்கலாம். இது C.A., M.B.A.க்கு ஆன ஒரு கோர்ஸ், மேலும் விவரங்களுக்கு

Charted Financial Analyst Of India
Road No. 3, Banjara Hills,
Hyderabad - 500 034. A.P.

அத்துடன் +2 முடித்தவுடன் சேரும்படியாக Diploma Program in Capital Markets, MBAF எனும் Program ம் ஆரம்பித்துள்ளார்கள். MBAF எனும் MBA Foundation Program பண்ணியவர்கள் MBA பண்ணுவது ரொம்ப easy ஆக இருக்கும்.

50% graduation வாங்கியவர்கள்.

1. MBFS, Merchant Banking and Financial Services.

2. ERA. Equity Research & Analysis
(both P.G. Diploma)

3. TFM Treasury & Forex Management.

பண்ணினால் வேலை வாய்ப்புகள் அதிகம். மேலும் விவரங்களுக்கு மேலே எழுதியுள்ள Hyderabad address or

1. The ICFAI, Business School, 84, T.T.K. Road, Alwarpet, Chennai - 18,

2. The ICFAI Business School, Sri Bhagwan Mahaveer Jain Centre, No. 91/2, Diagonal Road, Visweswarapuram, Bangalore - 4 எழுதினால் விவரங்கள் பெறலாம்.

— அனுராதா

## B.Tech (Industrial Bio-Technology):

தற்போது வளர்ந்து வரும் புதிய துறை பயோ டெக்னாலஜி. மரபணுக்கள் தொடர்பான தொழில் நுட்பங்கள். அது குறித்த ஆய்வுகள் இவற்றிற்காக ஆரம்பிக்கப்பட்ட தொழில் நுட்பப் படிப்பே பி.டெக் - இண்டஸ்ட்ரியல் பயோ டெக்னாலஜி.

முதன்முதலாக 1992ல் அண்ணா பல்கலைக் கழகத்தில் துவக்கப்பட்ட இப்பட்ட வகுப்பில் உள்ள இடங்களின் எண்ணிக்கை 20. தொழில் நிறுவனங்கள் பரிந்துரைக்கும் மாணவர்களுக்கு 5 இடங்கள். பிறமாநில மாணவர்களுக்கு 5 இடங்கள். தமிழக மாணவர்களுக்கு 10 இடங்கள்.

இப்படிப்பில் சேருவதற்கான நுழைவுத் தேர்வு ஆண்டுதோறும் ஏப்ரல் (அ) மே மாதத்தில் அகில இந்திய அளவில் நடைபெறும். +2 வகுப்பில் கணிதம் (அல்லது) உயிரியல் பாடத்துடன் இயற்பியல், வேதியியல் பாடங்களைப் படித்துத் தேறியவர்கள் இதில் சேரலாம்.

செமஸ்டர் முறையில் 4 ஆண்டுகளில் எட்டு செமஸ்டர் மூலம் கல்வி அளிக்கப்படுகிறது. எட்டாவது செமஸ்டரில் தொழில் நிறுவனங்களில் நேரடிப் பயிற்சி பெறுவதுடன் ஆய்வுக் கட்டுரையும் சமர்ப்பிக்க வேண்டி வரும். கல்விக் கட்டணமாக ரூ. 4000/- செலுத்த வேண்டி வரும்.

இதில் பட்டமேற்படிப்புப் படிக்க (M.Tech.) விரும்பினாலும் அண்ணா பல்கலைக் கழகத்திலேயே அதற்கு வாய்ப்பு உண்டு.

மேலும் விபரமறிய தொடர்பு முகவரி :

இயக்குனர், சென்டர் பார் பயோ டெக்னாலஜி, அண்ணா பல்கலைக் கழகம், சென்னை - 25.

## 5 Years M.Sc. Integrated Course :

புதுச்சேரி மத்தியப் பல்கலைக் கழகத்தில்

நமது இதழில் 'வழிகாட்டிகள்' போட்டியை அறிவித்தது பற்றிப் பெருமிதப்படும் வகையில் நிறைய வாசகிகள் மிகப் பயனுள்ள கல்வி வகுப்புக்களைப் பற்றி எழுதியிருக்கிறார்கள். இவற்றைப் பத்திரப்படுத்திக் கொண்டே வாருங்கள். கல்வியாண்டில் பயனுள்ளதாக இருக்கும். மற்றவர்களுக்கும் தரலாமே, வழிகாட்டலாமே! (வாசகர்களுக்கு ஒரு வார்த்தை - இது ஒரு வழிகாட்டும் தகவல் பகுதி மட்டுமே. கோர்ஸ் அல்லது கோர்ஸ் நடத்தும் நிறுவனங்களின் நிறைகுறைகளை அவரவர்கள் தான் ஆராய்ந்து தேர்ந்தெடுக்க வேண்டும் எனக் கேட்டுக் கொள்கிறோம். நம் நிறுவனம் அதற்குப் பொறுப்பாகாது.

(ஆ.ர்)

# கே ஜி டெனிம் பைனான்ஸ் லிமிடெட்

அறிமுகப்படுத்துகிறது

# நல்லுறவு ஃபிக்சட் டெபாசிட் திட்டங்கள்

**CRISIL RATING FA(-)**

உங்களுக்காகவே வழங்குகிறது கே ஜி டெனிம் பைனான்ஸ் லிமிடெட். குமுலேடிவ் டெபாசிட் திட்டம் - 60 மாதங்களில் **22.14%** வரை வட்டி. டெபாசிட் ஐந்து ஆண்டுகளில் இரண்டு பங்குக்கு மேலாகிறது. குறைந்த அளவு டெபாசிட் தொகை ரூ.3000/-. ஃபிக்சட் டெபாசிட் திட்டம் - உங்கள் விருப்பத்திற்கேற்ப வட்டி ஒவ்வொருமாதம் (குறைந்த அளவு டெபாசிட் தொகை ரூ.10,000/-) அல்லது காலாண்டுக்கு (குறைந்த அளவு டெபாசிட் தொகை ரூ.5,000/-) ஒரு முறை பின் தேதியிட்ட காசோலை மூலமாக உடனடியாக வழங்கப்படும். மேலும் ரூ.1,000களாக முதலீடு செய்யலாம். டெபாசிட் திரும்ப பெற விரும்பும் வெளியூர் முதலீட்டாளர்களுக்கு டிமாண்டு டிராப்ட் மூலம் தொகை அனுப்பி வைக்கப்படும். மேலும், உங்கள் அவசர தேவைக்கு முதலீட்டில் 75% வரை கடன் வழங்கப்படும்.




## கே ஜி டெனிம் பைனான்ஸ் லிமிடெட்




செயல் அலுவலகம் :1622, திருச்சி ரோடு, கோயம்புத்தூர்-641 018.
போன் : 0422-218707, 218208 ஃபேக்ஸ் : 0422-218208

கிளைகள் - சென்னை : 138, எல்டாம்ஸ் ரோடு, சென்னை. ☎ 456735, 456654. சேலம் : முதல் மாடி, எல்ஜிஎஸ் ஆர்கேட், ஓமலூர் ரோடு, புதிய பஸ் ஸ்டாண்ட் எதிர்புறம், சேலம் - 636 004. மும்பை : சாயி சக்தி, 2ம் மாடி, காந்தி கிராம் ரோடு, ஜுஹு, மும்பை - 400 049 ☎ 6241725 ஃபேக்ஸ் 022-6250942. டில்லி : முதல் மாடி, 4/34, புது ராஜேந்திர் நகர், புதுடில்லி - 110 060. ☎ 011-5765136/58.

| தொடரும் பாரம்பரியம் - நம்பிக்கையுடன். |

The text of the advertisement is also printed on all deposit forms.



கொண்டைக் கடலையில் (சென்னா) மூன்று வகை உண்டு. காபூலிச் சென்னா என்பது வெள்ளைக் கலரில் மிகவும் பெரிதாக இருக்கும். இரண்டாவது குலாபிச் சென்னா. இது ரோஸ் கலரில் உருண்டு, திரண்டிருக்கும். மூன்றாவதாக நம் நாட்டுச் சென்னா. இதில் காபூலிச் சென்னாவை வறுத்து (தேவையான போது) தின்ன முடியாது. ஆனால் குலாபிச் சென்னாவையும், நாட்டுச் சென்னாவையும் நமக்குத் தேவையான போது சிறிது எண்ணெய் விட்டு வறுக்க, அழகாக பொரியும். இது குழந்தைகளுக்கு சரியான நொறுக்குத் தீனி. பல்லுக்கு வலுவைக் கொடுக்கும். இதை இரவில் ஊறப் போட்டு காலையில் வெறும் வயிற்றில் அதை பச்சையாக குழந்தைகளும் பெரியவர்களும் சாப்பிட, உடல் வலு பெறும்.

— பூர்ணிமா பாலன்

இவ்வருடம் புதிதாக ஆரம்பிக்கப்பட்டுள்ளது 5 ஆண்டுகள் ஒருங்கிணைந்த பட்டமேற் படிப்பு வகுப்பு தற்போது கணிதம், இயற்பியல், வேதியியல், ஆகிய பாடப் பிரிவுகளில் மட்டுமே ஆரம்பிக்கப்பட்டுள்ள இவ்வகுப்பில் இனிவரும் ஆண்டுகளில் மற்ற பாடப்பிரிவுகளிலும் தொடரப்படும்.

5 ஆண்டுகள் படிப்பு என்றாலும் மாணவர்கள் தங்கள் கற்றல் - திறனுக்கேற்ப முன்னதாகக் கூட பட்டம் பெற முடியுமென்பது இதன் தனிச்சிறப்பாகும். செமஸ்டர் முறையில் 10 செமஸ்டர்கள் கொண்டதாக இந்த வகுப்பு இருந்தாலும் மாணவர்கள் 8 முதல் 12 செமஸ்டர்கள் வரையிலான கால அளவைக் கொண்டு இவ்வகுப்பில் படிக்கலாம்.

முதல் 5 செமஸ்டர்களில் அடிப்படைப் பாடங்களிலும், மற்ற செமஸ்டர்களில் சிறப்புப் பாடங்களிலும் தேர்வு எழுத வேண்டும்.

கிரடிட் முறையில் மாணவர்கள் தங்கள் துறை ஆலோசகரின் (Faculty Advisor) வழிகாட்டுதலின்படி 240 கிரடிட் வரை முடிக்க வேண்டும். இதில் 60 கிரடிட்கள் உயர்நிலைப் பாடங்களுக்கென ஒதுக்கப்பட்டவை.

இவ்வகுப்பில் சேர அடிப்படைக் கல்வித் தகுதி மேல் நிலை கல்வி தேர்ச்சி (+2). அகில இந்திய அளவில் நடைபெறும் நுழைவுத் தேர்வு மூலம் மாணவர்கள் தேர்வு செய்யப்படுவர்.

மேல் விவரங்களுக்கு :

Co-ordinator, 5 Years Integrated master Degree Course, Pondicherry University, Pondicherry - 605 014.

— பூங்கோதை கிருஷ்ணராஜ்.

சில வீடுகளில், வசதி இருந்தாலும் இல்லாவிட்டாலும் சரி, பையன்கள் '6'க்கு மேல் தாண்ட மாட்டார்கள். வசதி என்றால் விட்டுடலாம். நடுத்தரமெனில், இதோ உங்களுக்காக.. உங்கள் மகனோ, சகோதரனோ "நன்கு கடினமாக உள்ள வேலையை செய்யத் தயாரா!"

கோவையில் பிரபலமான PSG குரூப் அவர்களின் சாரிடபிள் டிரஸ்ட் மூலம் கோவைக் கருகில் நீலாம்பூரில், PSG Foundry Division என்ற டிரெயினிங் சென்டர் நடத்தப்பட்டு வருகிறது. டிரெயினிங் காலம் மூன்று வருடங்கள். வேலை கற்றுக் கொள்ளப்படும் நாட்களுக்கு ஸ்டைபண்ட் உண்டு.

இது வருடா வருடம் அதிகப்படுகிறது. தங்குவதற்கு மற்றும் உணவிற்கு ஆச்சரியப்படத் தக்க வகையில் குறைந்த கட்டணம் வசூலிக்கிறார்கள். படிப்பு முடிந்ததும் FTC என சர்டிபிகேட் உண்டு.

இது முடிந்ததும் விருப்பமெனில் அங்கு இருக்கலாம். இல்லாவிடில் வெளியில் வந்து அவரவர் வசதிப்படி தனியாக தொழிலோ அல்லது வேலைக்கோ செல்லலாம். PSG குரூப்பாரின் சர்டிபிகேட்டுக்கு நல்ல மதிப்பு உண்டு.

விலாசம் :

PSG Foundry Division, Neelambur, Coimbatore - 14.

— எஸ்.ஆர். வைதேகி.

கணிப்பொறி பயிற்சி வாய்ப்புகள் மத்திய அரசு அங்கீகாரம் பெற்ற கம்ப்யூட்டர் தேர்வுகள்:

இந்திய அரசின் மின் அணுவியல் துறையின் கீழ் வரும் DOEACC Society பின்வரும் அங்கீகரிக்கப்பட்ட கம்ப்யூட்டர் தேர்வுகள் நடத்துகிறது.

நான்கு நிலைகளில் இத்தேர்வுகள் நடத்தப்படுகின்றன.

'O' — அடிப்படை நிலை.

'A' — உயர்நிலை டிப்ளமா

'B' — பட்டதாரி நிலை

'C' — முதுபட்ட நிலை.

தேசிய அளவில் இத்தேர்வுகள் நடத்தப்பட்டு சான்றிதழ்கள் வழங்கப்படுகின்றன. இத்தேர்வுகளை எழுதுவதற்கு DOEACC Society யில் பதிவு செய்து கொள்ள வேண்டும். ஜனவரி & ஜூலை மாதங்களில் நடைபெறும் தேர்வுகளில் பங்கேற்க 'O' நிலை தேர்வுக்கு ஜூன் 30, டிசம்பர் 31 ஆகிய நாட்களுக்குள் பதிவு செய்து கொள்ள வேண்டும்.

A, B, C நிலை தேர்வுகளுக்கு ஜூலை 31, ஜனவரி 31 ஆகிய நாட்களுக்குள் பதிவு செய்து

கொள்ள வேண்டும்.

இந்தேர்வுகளில் தேறி சான்றிதழ் பெற்று விட்டால், இந்திய அளவில் உள்ள மத்திய, மாநில அரசுகள், அரசு நிறுவனங்கள் மற்றும் தனியார் நிறுவனங்களில் பணி வாய்ப்புக்கு அங்கீகரிக்கப்பட்ட தகுதியாக கொள்ளப்படுகிறது.

அன்றாடம் வளர்ந்து வரும் கம்ப்யூட்டர் துறையில் தரமான கம்ப்யூட்டர் பயிற்சி பெற DOEACC Society யின் அங்கீகரிப்பு பெற்ற நிறுவனங்களில் பயில்வது நலம்.

அங்கீகரிப்பு செய்யப்பட்ட பின்வரும் நிலையங்களை அணுகி கூடுதல் விவரங்களைத் தெரிந்து கொள்ளலாம்.

1. DOEACC 'O' LEVEL COURSE
S.V.A. Computer Centre,
No. 1, Desi Colony 3rd Street,
Perambur High Road,
Madras - 600 012.
Ph: 6424778

2. DOEACC 'A' LEVEL COURSE
Kasthuribha Institute of Technology,
Masinaikenpatty,
Ayothyapatnam Post,
Salem - 636 103.
Ph: 240135.

அல்லது பின்வரும் முகவரிக்கு தன் முகவரி விட்ட உறை ஒன்றினை அனுப்பி, அங்கீகரிப்பு பெற்ற நிறுவனங்களின் பட்டியலைக் கேட்டுப் பெறலாம்.

DOEACC Society,
Electronics Niketan, 6-CGO Complex,
New Delhi - 110 003. Ph: 4363330.

— என். கோகிலா.

## இரண்டாம் பரிசு ரூ. 250/- பரிசு பெறும் தகவல்:

'BITS - Pilani' தற்போது ஒரு Collaborative Programme என்ற கூட்டு பட்டப்படிப்பு ஏற்படுத்தி உள்ளார்கள். சென்னையில் 'மொகப்பேர்' என்ற இடத்தில் (ஜெயலலிதா நகர்) டாக்டர் செரியனின் மருத்துவமனை இயங்கி வருகிறது. இந்த மருத்துவமனையில் தான் அந்தக் கோர்ஸ் நடத்தப்பட்டு வருகிறது. +2 முடித்தவர்களுக்கு BS Physician Assistant என்றும், இளம் அறிவியல் பட்டப்படிப்பு முடித்தவர்களுக்கு M.Phil Physician Assistant என்றும் டாக்டர் செரியன் அவர்கள் பிர்லா இன்ஸ்டிடியூட்டுடன் சேர்ந்து நடத்துகிறார். BS நான்காண்டு கோர்ஸ். படிக்கும்போது உதவித் தொகை தருகிறார்கள். படித்து முடித்தவுடன் அவர்களே தங்கள் மருத்துவமனையில் வேலைக்கு எடுத்துக் கொள்கிறார்கள். இதில் (இருதயம் சம்பந்தப்பட்ட) சர்ஜரி, அனஸ்திஷியா, ஈசிஜி எடுப்பது, இரத்தப் பரிசோதனை என்று ஒரு ஜூனியர் டாக்டருக்குச் சமமாக பயிற்சி கொடுக்கிறார்கள். இங்கிலாந்தில் மிகவும் இந்தக் கோர்ஸிற்கு மதிப்பு அதிகம். இருபது பேர்தான் தேர்ந்தெடுப்பதால் பின்னால் வேலையில்லாத் திண்டாட்டம் கிடையாது. மார்ச் ஏப்ரல் ஆங்கிலம் அல்லது பிரபல தினசரி பத்திரிகைகளில் விளம்பரம் வருகிறது.

'Institute of Cardio Vascular Diseases', MMM - BITS Training Centre, Madras Medical Mission (7th Floor), 4-A, Dr. J. Jayalalitha Nagar, Mogappair, Madras - 600 050. Tel: 044-6250004, 6259801, 6259921.

— என். மீனாக்குமாரி.

## மூன்றாவது பரிசு ரூ. 100/- பரிசு பெறும் தகவல்:

### தமிழ்நாடு குடிசைப் பகுதி மாற்று வாரியம் வழங்கும் பல்வேறு பயிற்சிகள்:

தமிழ்நாடு குடிசைப் பகுதி மாற்றுவாரியம் வேலை வாய்ப்புப் பயிற்சித் திட்டத்தில் ஆண், பெண் இருபாலாருக்கும் [illegible] பயிற்சிகளை தருகிறது. வாரியம் தொண்டு நிறுவனங்கள், தனியார் பயிற்சி நிறுவனங்கள் மூலமாக

மழை, குளிர் காலங்களில் அப்பளம் வாங்கி வைத்திருந்து நமுத்துப் போய்விட்டால் வெயில் இல்லையே உலர்த்தி எடுக்க என்று கவலை வேண்டாம். உளுத்தம் பருப்பு வைத்திருக்கும் டப்பாவில் அப்பளங்களை மேலாக வைத்து இறுக மூடிவிட்டால் போதும். வெயிலில் உலர்த்தி எடுத்தது போல் ஆகிவிடும்.

— லக்ஷ்மி சிவகுமார்



**மங்கையர் மலர் & 'ரொமேல்' வழங்கிய வழிகாட்டிகள் கருத்துப் பரிமாற்றம்....**

**மஞ்சுளா ரமேஷ் :** "பல வருடத்திற்கு முந்தி முக அழகைவிட அக அழகுதான் முக்கியமாகக் கருதப் பட்டு வந்தது. ஆனா சமீப காலமாகவே ப்யூட்டி பார்லர்களில் நல்ல கூட்டத்தைப் பார்க்கிறோம். தனிப் பட்ட முறையிலே, எல்லாருக்கும் ஐம்பது வயசானாலும் கூட அழகு பண்ணிக்கணும் அப்படீங்கற விழிப்புணர்வு வந்திருக்கு. முக அழகு மற்றும் அக அழகு இரண்டும் தேவை என்ற எண்ணமும் வலுப்பெற்றிருக்கு. மலேஷியாவிலிருந்து வந்திருக்கும் 'ரொமேல்' பிரதிநிதி திருமதி. மகேஸ்வரி பாலன் தன் கருத்தை இங்கே சொல்வார்..."

மகேஸ்வரி பாலன்

# முக அழகு, அக அழகு இரண்டும் தேவையே!

**மகேஸ்வரி :** "('ரொமேல்' மூலிகை அழகு சாதனத்தின் இந்தியப் பொறுப்பாளர்) : நான் இங்கே இந்தியாவிலே சாதாரணமா எந்தப் பெண்ணைப் பார்த்தாலும், 'Are you working?' அப்படீன்னு கேக்கறது. உடனே அவங்க 'No I am just house wife' அப்படீன்னு சொல்லுவாங்க. இந்த just மட்டும் அழுத்திச் சொல்லுவாங்க. இத்தனைக்கும் எல்லாரும் பட்டதாரியா நாம் பார்க்கிறோம். இவங்களுக்கும் ஒரு தன்னம்பிக்கை வரணும். எல்லாரோடும் 'மிக்ஸ்' பண்ணணும், சுயமாக சம்பாதிக்கும் வாய்ப்பும் இருந்தா, இன்னும் வசதியாக இருக்கலாம். என்னதான் கணவர் நமக்குச் சுதந்திரம் கொடுத்தாலும், செலவு செய்தாலும் நாமே சுயமாக சம்பாதிக்கறது நமக்கு ஒரு தன்னம்பிக்கையையும் சந்தோஷத்தையும் கட்டாயம் கொடுக்கும். இந்தத் திருப்தியும் சந்தோஷமும் கட்டாயம் நம்முடைய அக அழகைக் கூட்டும். முக அழகும் பொலிவு பெறும்."

**மைதிலி சுவாமிநாதன் :** "அடுத்ததைக் காட்டும் பளிங்கு போல மனத்தில் உள்ளதை முகம் காட்டும்" என்பது பழமொழி. மனத்தில் கவலையிருந்தால் முகத்தில் கவலைக் கோடுகள், முதுமையைக் காட்டும். புராணம், இதிகாசங்களிலும் நாம பார்க்கிறோம். (அருவருப்பான) வில்லி பாத்திரங்களாகக் கூனி, சூர்ப்பனகை. கண்ணகி, சீதை, திரௌபதி. இவர்கள் அழகில் சிறந்த கதாபாத்திரங்கள். இது அவர்களின் நல்ல எண்ணத்தின் எதிரொலி. களங்கமில்லாக் [illegible] தக்குப் பளிங்கு போல் முகம் [illegible] கிறோம். சாதாரணமாக பெண்களிடையே இயற்கையிலேயே ஒரு அழகு உணர்ச்சி இருக்கும். அதோடு மனசிலும் அசூயை, பொறாமை போன்ற எண்ணங்களைத் தவிர்த்து, மனதைத் தூய்மையாக வைத்திருந்தால் அது முகத்தில் கண்டிப்பாக பிரதிபலிக்கும்."

**சீதா சுந்தர் :** "மனதிலே கவலையுடன் என்னதான் உதட்டிலே புன்னகை செய்தாலும், முகம் அவர்களின் மனசை காட்டிக் கொடுத்து விடும். மனசை மறைக்க முக உணர்ச்சிகளை மறைக்கறது கஷ்டம். அதனால அக அழகு ரொம்ப முக்கியம்னு நான் நினைக்கிறேன்."

**ஹம்ஸா தமயந்தி :** "முகத்திலே அழகு இருப்பது ரொம்ப முக்கியம். பேசும் போது ஒருத்தர் அழகாக தெரிஞ்சாதானே பேசவே தோணும். அதற்கு அப்புறம்தான் அவங்க மனசை பத்தி, குணத்தைப் பத்தி தெரிஞ்சுக்க முடியும். பார்த்த உடனே அவங்களைப் பத்தி தெரிஞ்சுக்க முடியாது. நல்ல உணவுக் கட்டுப்பாடு நல்ல வாழ்க்கை அமைத்திருந்தால் இயற



மையாகவே அழகு ஏற்படும். எனவே வெளித் தோற்றத்திற்கும் முக்கியத்துவம் கொடுக்க வேண்டும்."

**காமாட்சி சுப்ரமணியம்** : "பெண் மனசு மிகவும் ஆழமானது. மனசிலே உள்ளதை யாராலும் கண்டு பிடிக்க முடியாது. இப்போ நான் என் மனசிலே என்ன கருத்து இருந்தாலும், சிரிச்சுகிட்டு பேசும் போது, என் உள் கருத்தை யாராலும் கண்டு பிடிக்க முடியாது. இந்த உலகமே நாடக மேடைதான். ஆள் பாதி ஆடை பாதிதான் இப்போ எடுபடும். இந்தக் காலத்திலே எல்லாரும் தலைமயிரை விரிச்சுப் போடறதுதான் ஃபேஷன்னு நினைக்கிறாங்க. வெளி நாடுகளில் யாரும் பவுடர் கூட யூஸ் பண்றதில்லை. நமக் கும் பொருத்தமானது ஹெர்பல் ட்ரீட்மென்ட்தான். மஞ்சள் தான் முன்னே அழகு சாதனமாக இருந்தது. இப்போ மஞ்சள் கூட யாரும் யூஸ் பண்றதில்லை."



**மைதிலி** : "மஞ்சள் தடவினால் முகத்தில் முதிர்ச்சி அதிகமாகும்!"

**பானுமதி** : "இப்போ முக அழகுதான் முக்கியமாக இருக்கு.



பேப்பரில் திருமண விளம்பரங்களில் அழகான மனைவி வேண்டும் என்றுதான் ஆண்கள் போடுகிறார்கள். அக அழகைப் பற்றி யாருமே கவலைப்படுவதில்லை. வெளி அழகு மன அழகை மறைக்கும் என்று தெரிந்தாலும் வெளி அழகுக்குத்தான் அடிமையாறாங்க. அழகு, பணம் இதுதான் முக்கியம். குணம் யாருக்கும் பொருட்டாகப் படறதில்லை."



**விஜயா ராஜகோபாலன்** : "பெண்களுக்கு முதலில் தெய்வ பக்தி வேணும். அதோட உணவுக் கட்டுப்பாடு இருந்தால் அக அழகு வரும். அதிலேயே முக அழகும் கூடிவிடும். காலையில் எழுந்ததும் சுவாமி நமஸ்காரம் செய்து வீட்டு வேலைகளை கவனிக்கறது நமக்கு ஒரு தேகப்பயிற்சி. பொரிச்ச உணவை தவிர்த்து நிறைய கீரை பச்சை காய்கறிகளை உணவில் சேர்த்துக்கிட்டா ஆரோக்கியமாக இருக்கலாம். ஆரோக்கியமான உடல், மனசு இரண்டுமே அக அழகு முக அழகுக்கு முக்கியமானது."

**கிரிஜா** : "அழகு மட்டும் இருந்தா போதும்னு சொல்ல முடியாது. வயதான பாட்டி கூட நரை மறைக்க 'டை' போட்டுக்கறாங்க. இது போதாது. மனதளவில் உறுதியாக, 'ஆக்டிவ்'வாக













இருக்கனும். இதுதான் அக அழகு. யாருக்கும் தனக்கு வயசாச்சுன்னு ஒப்புக்க மனசு வரதில்லை. 55 வயசு பாட்டி கூட 'யங்'காக இருக்கத்தான் விரும்பறாங்க. மன சலிப்பு இல்லாம, பொறாமை இல்லாம மனசை தூய்மையாக வச்சிண்டா, முக அழகு வரும்."

**பிரேமா ரங்கநாதன்** : முன் காலத்திலே இயற்கையோட ஒத்து வாழ்ந்ததில், முகம் பொலிவாக இருந்தது. தனியாக அழகு சாதனங்களுக்கு அவசியமில்லை. தவிர இப்போதெல்லாம், கொஞ்சம் வயசு ஆகிவிட்டால் தன்னை எங்கே ஒதுக்கி விடுவார்களோ, என்ற பயம். வயதானாலும் பாட்டின்னு கூப்பிடாதே ஆன்ட்டின்னு கூப்பிட சொல்கிறது. குழந்தைகளுக்கு அசல் பாட்டியை பார்க்கும் வாய்ப்பில்லாமல் ஆகிவிடுகிறது."

**ஜெயலட்சுமி** : "பாட்டின்னா டிரெஸ் பண்ணிக்க ஆசை இருக்கக் கூடாதா?" (சிரிக்கிறார்கள்)

**லலிதா சுப்ரமணியம்** : "முகம் என்னதான் அழகா இருந்தாலும், மனசு சுத்தமா இல்லைன்னா அவங்க அழகு வெளியே தெரியாது. டிரெஸ்ஸும் சோபிக்காது. மனசிலே பொறாமை அகம்பாவம் இதெல்லாம் முக அழகைக் கெடுக்கும். நல்ல குணம் தான் முக்கியம். மனசில் இருப்பதை, வெளிகாட்டாமல் சிரிச்சுண்டு இருக்க பழகிக்கனும்."

**லலிதா ராமன்** : "பெற்றோர்கள்தான் குழந்தைகளுக்கு வழிகாட்டி. மனசில் தைரியமும், பக்தியும் இருந்தால் தன்னம்பிக்கை வளரும். வாழ்க்கையில் முன்னேற முடியும். என் மகனுக்கு தெய்வ பக்தியும் உண்டு. அது போல மாடர்னாக இருக்கும் படியாவும் வளர்க்கிறோம். பெரியோர்களிடம் மரியாதை போன்ற பண்பு வளர்க்க நாமதான் குழந்தைகளுக்கு முன் உதாரணமாக் இருந்து காட்டனும்."

**மைதிலி** : "இந்தியாவிலே கிட்டத்தட்ட எல்லாருமே இளமையாகத்தான் இருக்கோம். மேல் நாடுகளில் பெண்களுக்கு 30 வயசிலேயே சுருக்கு வந்துடறது. ஆனால் அவங்க மேக்-அப் பண்ணிக்கிட்டு சரி பண்ணறாங்க. அது வேறே விஷயம். அங்கே உணவுக் கட்டுப்பாடு இல்லை, குடிப்பதும் அதிகம். நமது உணவுப் பழக்கம் நமக்கு இளமையைத் தருகிறது."

**லலிதா ராமன்** : "முக அழகு தேவையில்லை என்று நாம சொல்ல முடியாது. தினசரி வாழ்க்கைக்கு ப்யூட்டி பார்லர் போக வேண்டாம். ஆனா மணப்பெண் அலங்காரத்துக்குக் கட்டாயம் தேவை."

**சசிகலா** : "கல்யாணம் நிச்சயமானதும் பெண்ணுக்கு அழகு வந்துவிடுகிறது இயற்கையாகவே. பின் எதற்காக ப்யூட்டி பார்லரில் அழகு படுத்துவது?"

**உமா** : "இப்ப எல்லாம் கணவனை இழந்த பெண்களின் பிரச்னை பேசப்படுகிறது. அவங்களுக்கும் டிரெஸ் பண்ணிக்க உரிமை உண்டு. இதை மங்கையர் மலர்ல அழகாக எழுதியிருக்கீங்க. சிலர் அவங்க உரிமையை பறிச்சு, கேலி பண்றாங்க."

**கனகா** : "65 வயது நிரம்பிய காலேஜ் ப்ரொபஸர் ஒருவரின் கருத்தை நான் கூற ஆசைப்படறேன். கணவர் என்பவர் நடுவில் வந்த உறவினர். அவர் இல்லாமல் நாம எதையுமே சாப்பிடுவதை, நடப்பதை, தூங்குவதை நிறுத்தவில்லை. அப்ப பூவையும், பொட்டையும் எதற்கு நிராகரிக்கனும்? இதை எல்லாரும் ஒப்புக் கொள்வாங்க. நல்ல டிரெஸ், நல்ல எண்ணம், இதனால்தான் அக அழகு முக அழகு உண்டாகிறது. சமூகத்தில் நமக்கு ஒரு மரியாதையும் கிடைக்க உதவுகிறது. மற்றவர்களை நோகவைக்காமல் நடப்பது தான் உண்மையான அழகு."

**பிருந்தா சுப்ரமணியம்** : "அக அழகு முக அழகு இரண்டும்

சமமாக இருப்பது அவசியமாகும். குழந்தைகளும் சுத்தமாக அழகாக இருக்கத்தான் ஆசைப்படறாங்க. சக நண்பர்களைப் பார்த்து, விளம்பரம், டி.வி. பார்த்து நாங்களும் அழகு படுத்திக்க விரும்பறாங்க. நாமும் எல்லோரையும் போல அழகா இருக்கோம்னு நன்னம்பிக்கை உண்டாகிறது. அதனால் அழகுப்படுத்திக்கிறது தவறில்லை. இரண்டும் தேவை.

**பிருந்தா** : "நாம அந்த வகையிலே சுதந்திரம் குடுக்காம இருந்தா அவங்களுக்கு தாழ்வு மனப்பான்மை வரும். மன திருப்திதான் இங்கே முக்கியம். மன சந்தோஷத்தில முகமும் அழகு படுமே! தவிர எதுவுமே சூழ்நிலை பொறுத்து இருக்கு. சுதந்திரத்திற்கும் ஒரு வரையறை உண்டே. என் மூன்று குழந்தைகளும் சுதந்திரத்தோட செயல்பட்டாலும், என்னுடைய கண்ட்ரோலில்தான் இருப்பாங்க. தெய்வ பக்தியும், பணிவும், இருக்கறதால தவறான வழிக்குப் போக மாட்டாங்க. அக அழகுக்கு மன நிம்மதியும் தேவைதானே."



**வசந்தா** : "முக அழகுக்காக நிறைய ப்யூட்டி பார்லர் இருக்கு. ஆனா மனசை அழகு படுத்த ஏதாவது வகுப்பு நடத்தறாங்களா?

**காமாட்சி** : "கோபம், பொறாமை, அகங்காரம் இதெல்லாம் மனசை பொருத்தின விஷயங்கள். மனக்கட்டுப்பாடுதான் முக்கியம். யோகா பயிற்சியில் மனதை கட்டுப்படுத்தலாம்."

**சீதா** : "முன் காலத்திலே யோகாவுக்கும் பதிலா நாதோபாஸனை செய்வாங்க. அதாவது பெண் குழந்தைகளுக்குக் கட்டாயம் பாட்டு சொல்லித் தருவாங்க. அதுவே தியானம் செய்யறபோலதான். இந்தக் காலத்திலே எதுக்குமே நேரமேயில்லையே!"

**வசந்தா** : "காலையில் எழுந்ததும் நல்ல மனசோடு முகம் கழுவி பொட்டு வச்சாலே போதுமே. வேறே அழகு சாதனங்களை தேட வேண்டாம். அந்த மன தூய்மை சாயங்காலம் வரை அப்படியே ஃப்ரெஷ்ஷாக இருக்க உதவும்."

**காமாட்சி** : "அந்தக் காலத்தில் தனித்தனி வீடு, காற்று, வெளிச்சம் இருக்கும். நாம ஆரோக்கியமாக இருந்தோம். இப்போ ஃப்ளாட் சிஸ்டம். காற்று, வெளிச்சம் இல்லை. இந்தச் சூழ்நிலையிலே எப்படி ஃப்ரெஷ்ஷாக இருக்க முடியும்?"

**ஞானம்** : வெளித் தோற்றம் இப்போ முக்கியமாக இருக்கிறது. மனசிலே எது இருந்தாலும் கண்டிப்பாய் வெளியே காண்பிக்காம நடந்துக்கறதுதான் புத்திசாலித் தனமும் கூட."

**பிச்சை** : "சில சமயம் மனசில் எழற விருப்பு, வெறுப்பை முகம் காட்டிக் கொடுத்திடும்!"

**ஞானம்** : நாகரீக வாழ்க்கையிலே வெளித் தோற்றத்திற்குதான் மதிப்பு. அழகில்லாத குணமுள்ளவர்களை எத்தனை பேர் விரும்புவாங்க? கல்யாணம் பண்ணிக்கப் போற பெண் அழகாக இருக்கணும் என்று விரும்பற ஆண்கள் இப்போ அதிகம். வெளி அழகுதான் முக்கியமாக இருக்கு."

பன்னிரெண்டு வயது சிறுமி சீதா இவர்கள் பேசுவது எல்லாவற்றையும் ஆர்வமாக கவனித்துக் கொண்டிருக்கிறாள்.

**மஞ்சுளா ரமேஷ்** : "இவர்கள் எல்லாம் நிறைய கருத்துக்களைச் சொன்னாங்க. உன் கருத்து என்னம்மா? அக அழகா, முக அழகா?"

**ஆர். சீதா** : "ப்யூட்டி பார்லர் போவது தேவையில்லைன்னு நான் நினைக்கிறேன். ஏன்னா, சில பேர் ஓவர் மேக்அப் போட்டுட்டு வரப்போ, அவங்க இயற்கையான முகமே பார்க்க நல்லாயிருக்கும்னு தோணுது. அதனால இருக்கற அக அழகோட முக அழகும் போதும். தேவையானா எப்பவாவது லைட் மேக்அப் போடலாம். எதுவுமே பேலன்ஸ்டாக இருந்தாதான் நல்லது!"

**ஜூலியட் கபி** : "அழகு என்கிறது உடுத்தற உடையிலும் இருக்கும் முன்னே எல்லாம் பெண்கள் பாவாடை, தாவணி, புடவை அப்படின்னு கட்டினாங்க. இப்போ மேக்ஸி, சுரிதார் யுக மாக மாறிடுத்து! வயசானவங்க மேக்ஸி, சுரிதார் போடறது பொருத்தமில்லை. நமது பண்பாடு

Registered with the Registrar of Newspaper of India under No. 30309/75 * Registered No. TN/MS (S) 231 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN/MS/(S)/9 * Registered as a Newspaper in Srilanka

# சரியான ஜோடி!

## கைனெட்டிக் ஹோண்டா ஜெனுயின் 2T ஆயில் மற்றும் கைனெட்டிக் ஹோண்டா.

கைனெட்டிக் ஹோண்டாவிற்கெனவே இந்தியன் ஆயிலினால் பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்டுள்ள இந்த ஆயில், ஜப்பானின் ஹோண்டா மோட்டார் கம்பெனியினால் கைனெட்டிக் ஹோண்டாவிற்கு மிகவும் சரியான எஞ்சின் ஆயிலென சான்றிதழ் பெற்றுள்ளது.

இந்தியன் ஆயிலுக்கு சொந்தமான, ஆசியாவின் அதிநவீன ஆராய்ச்சி மற்றும் அபிவிருத்தி மையத்தினால் உருவாக்கப்பட்டுள்ள இந்த ஆயில், உங்கள் கைனெட்டிக் ஹோண்டாவிற்கு அளிக்கும் சிறந்த பயன்கள்:




- எஞ்சினுக்கு முழுபாதுகாப்பு மற்றும் அதன் நீடித்த ஆயுள்
- துரித இயக்கம்
- எஞ்சின் மற்றும் ஸ்பார்க் பிளக்கிற்கு அபரிமிதமான சுத்தம்
- குறைந்த புகை வெளியேற்றம்
- எரிபொருள் சிக்கனம்

கைனெட்டிக் ஹோண்டாவில் உங்களின் நீடித்த பயணத்திற்கு உறுதுணையாக இருக்கிறது, கைனெட்டிக் ஹோண்டா ஜெனுயின் 2T ஆயில்.

எனவே, இதுவல்லவோ சரியான ஜோடி!




இந்தியன் ஆயில் கார்ப்பரேஷன் லிமிடெட்

**SERVO®** உலகத் தரமுடைய லூப்ரிகன்ட்ஸ்

# எவ்வளவு சந்தோஷமான சமாச்சாரம்

...என் பொண்ணு என்னன்னா மாப்பிள்ளை எண்ணையா நிக்கிறாரு. எண்ணெய்னா இதயம் நல்லெண்ணெய்யோட நிக்கிறாரு. இதயம் நல்லெண்ணெய் ரத்தத்தில கொலஸ்ட்ரால் அளவைக் குறைக்கிறது. எவ்வளவு சந்தோஷமான சமாச்சாரம்... இல்லே?




இதயத்திற்கு இதமானது

**இதயம்**
**நல்லெண்ணெய்**

BANGALORE DISTRIBUTORS :
M/S. JAYESS MARKETING ASSOCIATES, 15, Gayathri Nagar 1st Cross, Corporation Market, Bangalore - 560 021. Phone : 3329902.
M/S. PRIYAMVADA DEPARTMENTAL STORES, 133, Muneswara Temple Street, Kodihalli, Bangalore - 560 008. Phone : 5278107, 5261